இது

# வாலமாணக்கர்



வேதாகமத்தைக் காலவரையறையோடு

லெகுவாய்

கற்கும்பொருட்டுச் செய்யப்பட்ட

# சத்திய



# வேதப்பொழிப்பு.



யாழ்ப்பாணத்துச் சிறுபுத்தகசங்கத்தாரால்

மானிப்பாய்

இயந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

[4TH ED. 5,000.]



JAFFNA:

RIPLEY AND STRONG, PRINTERS.

1857.

# பழைய உடன்படிக்கையின் ஆகமங்கள்.

# வேதப்பொழிப்பு.

## கம். அதிகாரம்.

உலகத்தோற்றம்முதற் சலப்பிரளயம் மட்டுஞ்சென்ற, ககாருகா. வருஷ சங்கதி. இஃது ஆதாம் முதல் நோவா வரையும் வரும்.

ஆ. பி. க.] சிருட்டிப்பு. [கி. மு. ச௦௦ச.

க. ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்.* பூமி ஒழுங்கின்மையும் வெறுமையுமாயிருந்தது. ஆழமான சலமுகத்தின்மேல் இருள் இருந்தது. தேவாவி சலமுகத்தில் உலாவிக்கொண்டிருந்தது. தேவன் ஒளியுண்டாகக்கடவதென்று சொல்ல, ஒளியுண்டாயிற்று. தேவன் ஒளிக்குப் பகலென்றும் இருளுக்கு இராவென்றும் பேரிட்டார். இப்படியே முதலாம் நாளாயிற்று.

இரண்டாம் நாளிலே தேவன் சலத்தின் மத்தியில் ஆகாயவிரிவுண்டாகவும், அது சலத்தையுஞ் சலத்தையும் பிரிக்கவுஞ் செய்தார்.

(ஆதி. க. அ.

மூன்றாம் நாளிலே தேவன் வானத்தின் கீழுள்ள சலம் ஓரிடத்திலே சேரவுந் தரை தோன்றவுங் கடவதென்றார். அப்படியேயாயிற்று. அப்பொழுது தேவன் தரைக்குப் பூமியென்றுஞ் சலராசிக்குச் சமுத்திரமென்றும் பேரிட்டு பூமி

* யோவான், க. ௨, ௩. எபிரேயர், க. க௦. கொலோ. க௦. கசு; கஎ.

புல்லையும் விதைகொடுக்கிற பூண்டுகளையுஞ் சாதிப்படி விதையையுடைய கனிதரு விருட்சங்களையும் முளைப்பிக்கக் கடவதென்றார். அப்படியே ஆயிற்று.  (ஆதி. க. கஉ.

நாலாம் நாளிலே தேவன் வானவிரிவிலே சுடர்களுண்டாகக்கடவன என்றும், அவைகள் பகலையும், இரவையும், காலங்களையும், தினங்களையும், வருஷங்களையுங் குறிக்கும்படி பூமியின்மேற் பிரகாசிக்கக் கடவனவென்றுஞ் சொன்னார். அப்படியே ஆயிற்று.  (ஆதி. க. கக.

ஐந்தாம் நாளிலே தேவன் சலத்திலிருந்து சலசரங்களையும் பட்சிகளையுஞ் சிருஷ்டித்து, சலசரங்கள் பலுகிப்பெருகிச் சமுத்திரசலத்தில் நிறையவும் பறவைகள் பூமியிலே பலுகிப் பெருகவுங் கடவனவென்றுஞ் சொல்லி அவைகளை ஆசீர்வதித்தார்.  (ஆதி. க. உஉ.

ஆறும் நாளிலே தேவன் பூமி நாலுவித காட்டுமிருகங்களையும், நாட்டுமிருகங்களையும், ஊர்வனவற்றையும் இனமினமாகச் செனிப்பிக்கக் கடவதென்றார். அப்படியே ஆயிற்று.

அதன்பின்பு தேவன் தாம் சிருஷ்டித்தசிருஷ்டிகள் யாவையும் ஆளும்படி மனிதனை மண்ணினாலே உருவாக்கி சீவசுவாசத்தை அவன் நாசியில் ஊதி அவனைத் தமது சாயலாக, தமது சுரூபத்தின்படி சீவாத்துமாவாக்கினார்.* பின்பு அவன் விலாவெலும்பினால் ஒரு ஸ்திரியையும் உண்டாக்கி அவர்களை ஆசீர்வதித்து நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியிற் பரந்து அதை வசப்படுத்

---

* எபேசியர், ௪. உ௪.  மத்தேயு, கக. ௪.

தி மற்றியாவற்றையும் ஆண்டுகொள்ளுங்களென்றார். இப்படியே யெகோவா ஆறுநாளிற் சிருஷ்டி கிருத்தியங்களை முடித்து ஏழாம் நாளைப் பரிசுத்தமாக்கி அதை ஆசீர்வதித்தார்.*

(ஆதி. க. உ௪., ஆதி. உ. ௩., எபே. ௪. உ௪.

உ. பின்பு தேவன் தாம் உண்டாக்கின ஆதி மனுஷனுக்கு ஆதாமென்றும், ஆதிமனுஷிக்கு ஏவாளென்றும் பெயரிட்டுப் பரதீஸ் என்னுமொரு தோட்டத்தில் அவர்கள் சஞ்சரிக்கவும், பூமியையும் அதிலுள்ள யாவற்றையும் ஆட்சிகொள்ளவும், அந்தத்தோட்டத்தின் நடுவிலுள்ள ஒரு விருட்சத்தின் கனிகளை மாத்திரந் தவிர மற்றெந்த விருட்சத்தின் கனிகளிலும் இஷ்டப்படி புசிக்கவுங் கட்டளையிட்டதுமன்றித் தாம்விலக்கின மரத்தின் கனியைப் புசித்தால் சாவது நிச்சயமென்றுஞ் சொன்னார்.

(ஆதி. உ. உ௫.

௩. அவர்கள் அந்தக் கட்டளைப்படி நடந்து மகா பாக்கியராயிருக்கையிற் சூதுள்ள சருப்பம் வந்து,† தேவன் விலக்கின மரத்தின் கனியை நீங்கள் புசித்தால், உங்கள் கண்கள் திறக்கப்பட்டு நீங்கள் நன்மை தீமைகளை உணர்ந்து தேவனுக்கொப்பானவர்களாவீர்கள். இதைத் தேவனறிந்து அதை விலக்கினாரென்று சொல்ல, ஸ்திரி கேட்டதினாலும், அந்த மரத்தின் கனி இச்சிக்கப்படத் தக்கதாயிருந்ததினாலும், அதை எடுத்துத் தானும் புசித்துத் தன் கணவனுக்குங் கொடுத்தாள். அவனும் வாங்கிப் புசித்தான். அ

* வெளிப். கஉ. ௯. யாத்தி. உ௦. கக. மாற்கு, உ. உஎ, உஅ.
† உ. கொரிந். கக. ௩. க. தீமோ. உ. க௪

ப்பொழுது அவர்கள் கண் விழிப்படைந்து தாங்கள்நிருவாணிகளென்றுகண்டு அத்திஇலைகளைத்தைத்து அதை அரைக்கச்சையாகத் தரித்தார்கள். இப்படி அவ்விருவருந் தங்கள் சாயலையும் மனப்பாக்கியத்தையும் இழந்துவிட்டதினாலே அவர்களும் அவர்கள் சந்ததியாரும் தேவசாபத்துக்குள்ளானார்கள்.* (ஆதி. ௩. ௧, ௭.

௪. அப்பொழுது தேவன் அவர்கள் தமது கற்பனையைக் கடந்துபோனதை அறிந்து அவர்களைச் சந்தித்து ஏவாளுடனே, நீ கருப்பவதியாகும்போது உன் வயாவருத்தம் மிகவும் அதிகரிக்கும், நீ உன் புருஷனுக்கு அடிமையாவாயென்றார். ஆதாமுடனே உன்னிமித்தம் பூமி சபிக்கப்பட்டது. நீ உன் மனைவியின் சொல்லைக்கேட்டு நான் விலக்கின கனியைப் புசித்ததினாலே பூமி முட்செடிகளையும், முட்பூண்டுகளையும் முளைப்பிக்கும். உன் சீவிய நாளெல்லாங் கிலேசம் உன்னைவிட்டு நீங்காது. உன் முகவேர்வையோடே உன் ஆகாரமிருக்கும். நீ மண்ணிலெடுக்கப்பட்டாய் மண்ணோடே சேர்வாயென்றார். சருப்பத்துடனே, நீ இவர்களை வஞ்சித்ததினாலே நீ சகல செந்துக்களிலுஞ் சபிக்கப்பட்டாய். நீ சீவிக்கும் நாளெல்லாம் வயிற்றினால் நகர்ந்து மண்ணைத்தின்பாய். உனக்கும் இந்த ஸ்திரிக்கும், உன் சந்ததிக்கும் இவள் சந்ததிக்கும் பகை உண்டாகும். அவர் உன் தலையை நருக்குவார். † நீ அவருடைய குதிக்காலை நசுக்குவாய் என்றார். அப்படிச் சபித்து அவர்களைத் தமது தோட்டத்தைவிட்டுத் து

* உரோமர், ரு. ௧௨.　† உரோமர், ௬. ௨0.

ரத்தி, சீவவிருட்சத்துக்குக் காவலாகக் கெரு பிகளையும்வைத்தார். (ஆதி. ௩. ௨௪.

௫. பின்பு இவர்களிடத்திற் பிறந்த காயீன் பயிர்செய்கைக்காரனுன். ஆபேல் ஆடுமே ய்க்கிறவனுனன். குறித்த காயீன் கனிகாலத் திலே தன் கனிகளிற் சிலவற்றைத் தேவனுக்கு நைவேத்தியமாகக் கொண்டுபோனுன். ஆபே லோ ஓர் ஆட்டுக்குட்டியைக்கொண்டுபோய்த் தேவனுக்கு நைவேத்தியஞ் செய்தான். தேவ ன் ஆபேலுடைய நைவேத்தியத்தை அங்கிகரி த்துக் காயீனுடைய நைவேத்தியத்தை அங்கிக ரியாமல்விட்டார். (ஆதி. ௪. ௫., எபிரே. ௧௧. ௪.

௬. அதினுலே காயீன் ஆபேலோடே உள் வைரம் வைத்தும் அவனுக்கு நேசத்தைக் கா ட்டித் தனியே அழைத்துக்கொண்டுபோய் அவ னைக் கொலைசெய்தான்.* அவனுக்கு வயசு, ௧௨௭. அப்பொழுது தேவன் காயீனைச் சந்தித் து நீ உன் சகோதரனுக்கு என்ன செய்தாய்? உன் சகோதரனுடைய இரத்தம் பூமியிலிருந்து என்னை நோக்கி ஓலமிடுகிறது. அது சுவறி யிருக்கிற இந்தப் பூமியிலே நீ சாபமடைந்தாய். இனி இந்தப் பூமி தானுய்த் தன் பலனை உனக் குத் தராது. நீ பூமியில் நிலையற்றவனுய் அலை வாயென்று சொல்லி அவனை அகற்றிவிட்டார். இவனுடைய சந்ததியார்தான் மனுஷ புத்திரரெ ன்று சொல்லப்படுகிறவர்கள். (ஆதி. ௪. ௧௨.

௭. இவன் தேவசன்னிதானத்தை விட்டுப் பு றப்பட்டு ஏதேனுக்குக் கிழக்கேயுள்ள நோத்தி லே குடியேறி ஒரு நகரத்தைக் கட்டித் தன் பு

* ௧. யோவான், ௩. ௧௨.

த்திரனாகிய ஏனோகின் நாமத்தை அதற்கிட்டான. (ஆதி. ௪. ௧௭.

இந்த ஏனோகுக்கு ஈராத்தும்
ஈராத்துக்கு மெகுயவேலும்
மெகுயவேலுக்கு மெத்தூஷவேலும்
மெத்தூஷவேலுக்கு லாமேகும் பிறந்தார்கள். (ஆதி. ௪. ௧௮.

இந்த லாமேகின் மனைவியாகிய ஆதாளிடத்திற் பிறந்த யாபால் இடையருக்குக் கோத்திரபிதா. அவன் தம்பியாகிய யூபால் நரப்புக்கருவியாளருக்குந் தொளைக்கருவியாளருக்குங் கோத்திரபிதா. சில்லாளிடத்திற் பிறந்த தூபாள்–காயீன் கம்மாளருக்குக் கோத்திரபிதா.
கி மு. ௩௮௭௪. (ஆதி. ௪. ௨௨.

௮. ஆதாம் ௧௩0 ம். வயதில் சேத்தென்னப்பட்ட புத்திரனைப் பெற்றான். அதன் பின்பு அவன் ௮00 வருஷமிருந்து புத்திரரையும் புத்திரிகளையும் பெற்று, ௯௩0 வருஷம் உயிரோடிருந்து மரித்தான். கி. மு. ௩0௭௪. (ஆதி. ௫. ௫.

௯. இந்தச் சேத்தின் வமிசத்தாரே தேவபுத்திரரென்று சொல்லப்பட்டார்கள். சேத்து ௧0௫ ம் வயதில் ஏனோசைப் பெற்றான். அதன் பின்பு ௮0௭ வருஷம் உயிரோடிருந்து புத்திரரையும் புத்திரிகளையும் பெற்று ௯௧௨ வயதில் மரித்தான். கி. மு. ௨௯௬௨. (ஆதி. ௫. ௮.

௧0. ஏனோஷ் ௯0ம் வயதிலே கேனானைப் பெற்றான். அதன் பின்பு ௮௧௫ வருஷம் உயிரோடிருந்து புத்திரர் புத்திரிகளைப் பெற்று ௯0௫ வயதில் மரித்தான். கி. மு. ௨௮௬௪. (ஆதி. ௫. ௧௧.

கக. கேனன் எ0ம் வயதில் மகலாலேயே லைப் பெற்ருன். பின்பும் அச0 வருஷமிருந் து புத்திரர் புத்திரிகளைப் பெற்று கூக0 வயதில் மரித்தான். கி. மு. உளகூக. (ஆதி. ரு. கச.

கஉ. மகலாலேயேல் கூரும் வயதில் யாரேத்தைப் பெற்ருன். பின்பும் அளு0 வருஷமிருந்து புத்திரர் புத்திரிகளைப்பெற்று அகூரு வயதில் மரித்தான். கி. மு. உளசச. (ஆதி. ரு. கள.

களு. யாரேத் கசுஉம் வயதிலே ஏனோக்கைப் பெற்ருன். பின்பு அ00 வருஷமிருந்து புத்திரர் புத்திரிகளைப் பெற்று கூசுஉ வயதில் மரித்தான். கி. மு. உருஅஉ. (ஆதி. ரு. உ0.

சச. ஏனோகு கூரும் வயதில் மெத்தூஷலாவைப் பெற்ருன். பின்பு ௩00 வருஷமிருந்து புத்திரர் புத்திரிகளைப் பெற்ருன். இவன் சீவியநாளெல்லாம் தேவசன்னிதானத்தை நீங்காத தேவபத்தனுகவே இருந்து ௩சுரு வயதிலே பரலோகத்துக்குஎடுக்கப்பட்டான்.*

கி. மு. ௩0கள. (ஆதி. ரு. உச.

கரு. மெத்தூஷலாகு கஅஎம் வயதில் லாமேக்கைப் பெற்ருன். பின்பு எஅஉ வருஷமிருந் து புத்திரர் புத்திரிகளைப் பெற்று கூசுகூ வயதில் மரித்தான். கி. மு. உளசஅ (ஆதி. ரு. உஎ.

கசு. லாமேகு கஅஉம் வயதில் நோவாவைப் பெற்ருன். பின்பு ருகூரு வருஷமிருந்து புத்திரர் புத்திரிகளைப் பெற்று எஎஎ வயதில் மரித்தான். கி. மு. உளருளு. (ஆதி. ரு. ௩க.

* எபிரே. யர். கக.

கஎ. நோவா ௫00 வயதளவில் முன்பு யாப்பேத்தையும், பின்பு சேமையும், அதின் பின் காமையும் பெற்றான். இப்படியே ஆதாமுடைய சந்தானம் பூமியிலிருந்து பெருகி அதிவிருத்தியாக*, மனுஷ புத்திரராகிய காயீனரும், தெய்வபுத்திரராகிய சேத் சந்ததியாருங்கலந்து அதிக்கிரமக்காரரானதினிமித்தம் தேவன் நோவாவையும் அவன் குடும்பத்தையும் தற்காக்கவும், மற்றயாவரையுஞ் சலப்பிரளயத்தினால் அழிக்கவும் சித்தமானார்.

(ஆதி. ௬. கரு.

ஆதி. ௫. அதிகாரம்.

| மனுஷபுத்திரர். | தெய்வபுத்திரர். |
|---|---|
| க. ஆதாம். | க. ஆதாம். |
| உ. காயீன். | உ. சேத்து. |
| ௩. ஏனோகு. | ௩. ஏனோஷ். |
| ச. ஈராத்து. | ச. கேனான். |
| ௫. மெகுயவேல். | ௫. மகலாலேல்யேல். |
| ௬. மெத்தூஷவேல். | ௬. யாரேத். |
| எ. லாமேகு. | எ. ஏனோகு. |
| யாபால். | அ. மெத்தூஷலாகு. |
| அ. யூபால். | கூ. லாமேகு. |
| தூபாள்காயீன். | க0. நோவா. |

* அப்போஸ்தலர், கஎ. உக.

| | பரவணி. | சென்ம காலம். | மரண காலம் | மகப் பேறு. | ஆயுள். |
|---|---|---|---|---|---|
| ௧ | ஆதாம் | ௧ | ௯௩0 | ௧௩0 | ௯௩0 |
| ௨ | சேத் | ௧௩0 | ௧0௪௨ | ௧0௫ | ௯௧௨ |
| ௩ | ஏனோஷ் | ௨௩௫ | ௧௧௪0 | ௯0 | ௯0௫ |
| ௪ | கேனான் | ௩௨௫ | ௧௨௩௫ | ௭0 | ௯௧0 |
| ௫ | மகலாலேயேல் | ௩௯௫ | ௧௨௯0 | ௬௫ | ௮௯௫ |
| ௬ | யாரேத் | ௪௬0 | ௧௪௨௨ | ௧௬௨ | ௯௬௨ |
| ௭ | ஏனோக் | ௬௨௨ | ௯௮௭ | ௬௫ | ௩௬௫ |
| ௮ | மெத்தூஷலாகு | ௬௮௭ | ௧௬௫௬ | ௧௮௭ | ௯௬௯ |
| ௯ | லாமேகு | ௮௭௪ | ௧௬௫௧ | ௧௮௨ | ௭௭௭ |
| ௧0 | நோவா | ௧0௫௬ | ௨00௬ | ௫00 | ௯௫0 |
| | சலப்பிரளயம் | ௧௬௫௬ | | | |

மேற்சொல்லிய சந்தான கிரமத்தைக்கொண்டு ஆதாம் தான் பெற்றிருந்த தேவவாக்கைத் தனக்கு ஏழாந் தலைமுறையானான மெத்தூஷலாகு வரைக்கும் கன்னபாரம்பரையாய் உபதேசித்தானென்றும் மெத்தூஷலாகு நோவா வரைக்கும் உபதேசித்தானென்றும் நினைக்கிறார்கள்.

ஏனென்றால்

ஆதாம்:

| | | | |
|---|---|---|---|
| சேத்து | ஒடு | சீவித்தகாலம் | ௮00 |
| ஏனோஷ் | | " | ௬௯௫ |
| கேனான் | | " | ௬0௫ |
| மகலாலேயேல் | | " | ௫௩௫ |
| யாரேத் | | " | ௪௭0 |
| மெத்தூஷலாகு | | " | ௨௪௩ |
| லாமேகு | | " | ௫௬ |

| | | | |
|---|---|---|---|
| ஆதாம். | ஏனோஷ் | ஒடு சீவித்தகாலம் | அசா |
| | கேனான் | ” | கஎகூ |
| | மகலாலேயேல் | ” | உ௱சா |
| | யாரேத் | ” | ௱கூகூ |
| | மெத்துஷலாகு | ” | கூOO |
| | லாமேகு | ” | ருகூரு |
| நோவா. | லாமேகு | ” | கூ௱ |
| | மெத்துஷலாகு | ” | கூஅ |
| | நோவா | ” | சசஅ |
| | ஆபிரகாம் | ” | கருO |
| | ஈசாக் | ” | ருO |

---

## உம். அதிகாரம்.

சலப்பிரளயமுதல் ஆபிரகாம் வரைக்குஞ் சென்ற
சஉஎ. வருஷ சங்கதி.

ஆ. பி. ககூருசா.] சலப்பிரளயம். [கி. மு. உ௲சஅ.

க. தேவன் நோவாவுடனே பூமியிலே மனிதரின் தீங்கு மிகுந்திருக்கிறது. ஆதலால் நாம் மனிதரையும், மிருகங்களையும், ஊர்வனவற்றையும், ஆகாயத்துப்பறவைகளையும், பூமியினின்றும் துடைப்பேன். நீ ௱OO முழநீழமும் ருO முழ அகலமும் ௱O முழ உயரமுமுள்ள ஒரு பேழையை உண்டுபண்ணு. அதிலே நீயும், உன் புத்திரரும், உன் மனைவியும், உன்புத்திரருடைய மனைவிகளும்,* சுசியற்ற சீவசெந்துக்களில் ஆணும்பெண்ணுமாக ஒவ்வொரு சோடும், சுத்த

* க. பேதுரு, ௩. உO. எபிரேயர், கக. எ.

மிருகபட்சிகளில் ஏழேழுசோடும், உங்களுக்கும் அவைகளுக்கும் வேண்டிய ஆகாரங்களும் அப்பேழையில் உட்படவேண்டுமென்று கட்டளையிட்டார். (ஆதி. ௬. ௨௧.

௨. நோவா பேழை செய்து முடிக்க, ௧௨௦. வருஷம் சென்றது. அதன் பின் நோவாவும் அவன் குடும்பமும் அசுத்த மிருகபட்சிகளில் ஒவ்வொரு சோடும், சுத்த மிருகபட்சிகளில் ஏழேழுசோடும், அவைகளுக்கும் அவர்களுக்கும் வேண்டிய ஆகாரங்களும் பேழைக்குட்படுத்தப்பட்டது. (ஆதி. ௭. ௧௫.

௩. ஏழுநாட்சென்றபின் நாற்பதுநாள் இராப்பகல் ஓயாமல் மழைபெய்தது. சமுத்திர ஊற்றுகளும் திறவுண்டன. அதினால் எழும்பின பிரளயத்திலே பேழை மிதந்தது. வெள்ளம் பூமியிலுள்ள உயர்ந்த மலைகளின்மேல், ௧௫. முழ உயரம் மட்டுக்குப் பெருகிநின்றது. அதினாலே பேழையிற் புகுந்த சனசீவன்களொழியப் பூமியிலுள்ள சீவபேதங்களெல்லாம் மாண்டுபோயின.* (ஆதி. ௭. ௨௩.

௪. இந்தப்பிரவாகம் ௧௫௦. நாளளவில், ௧௫. முழமட்டாகவற்றிற்று. ஏழாம்மாதம், ௧௭ம் தேதி பேழை அரராத்மலையில் வந்து பொறுத்தது. ௧௦ம். மீ. ௧ம். தேதி. மலைச்சிகரங்கள் தோன்றின. நோவாவுக்கு ௬௦௧. வயதாகும் வருஷத்தில் ௧மீ. ௧ம் தேதி. சலம்வற்றிற்று. ௨ம் மீ. ௨௭ம் தேதி பூமி உலர்ந்தது. (ஆதி. ௮. ௧௪.

---

* மத்தேயு, ௨௪. ௩௭, ௩௯., லூக். ௰௭. ௨௭., யோப்பு, ௨௨. ௰௫, ௰௭., ௨. பேதுரு, ௨௫.

௫. அப்பொழுது தேவன் நோவாவையும், அவன் குடும்பத்தாரையும், பேழையிலிருந்த சகல பிராணிகளையும் வெளியே புறப்படுத்தினர். உடனே நோவா ஒரு பலிபீடத்தை உண்டாக்கி அதிலே யெகோவாவுக்குத் தகனப்பலி செலுத்தினன். (ஆதி. அ. ௨௦.

௬. அப்பொழுது யெகோவா தாம் இனிப் பூமியைச் சபிப்பதில்லையென்றும், பூமியின் சகல பிராணிகளையும் சலப்பிரளயத்தினற் சங்கரிப்பதில்லையென்றும், பூமியின் பருவகாலங்கள் தவறுவதில்லையென்றும், வாக்குப்பண்ணினர்.

௭. பின்பு யெகோவா நோவாவையும் அவன் புத்திரரையும் ஆசீர்வதித்துப் பூமியிலுள்ள சீவசெந்துகள் யாவற்றையும் உங்களுக்காகக் கொடுத்தேன். நீங்கள் பூமியிலே திரளாய்த் தழைத்து மிகுத்திருங்களென்றும், இனி ஒருபொழுதுஞ் சலப்பிரளயம் உண்டாவதில்லையென்றுஞ் சொன்னர். (ஆதி. ௯. ௧௭.

௮. அதன்மேல் நோவா பயிர்செய்கிறவனுகித் திராட்சக்கொடியை உண்டாக்கி அதின் பழரசத்தைக் குடித்து, மயங்கி நிருவாணியாய்க் கிடக்கிறதைக் காம் கண்டு தன் சகோதரர் இருவருக்கும் அறிவிக்க, அவ்விருவரும் ஒரு வஸ்திரத்தை எடுத்துக்கொண்டு பிதாவுக்குப் புறங்காட்டிவந்து அவனுடைய அபிமானத்தை மறைத்தார்கள். (ஆதி. ௯. ௨௩.

௯. நோவா மயக்கந் தெளிந்தவுடனே யாப்பேத்தும் சேமும் தனக்குச் செய்த உபசாரத்தையும், காம் செய்த அபசாரத்தையும் அறிந்து

காமியர், சேமியருக்கும் யாப்பேத்தியருக்கும் அடிமையாயிருப்பார்களென்றும், சேமுடைய தேவன் ஸ்தோத்திரிக்கப்படக்கடவரென்றும், யாப்பேத்தைத் தேவன் விருத்தியாக்குவாரென்றும், யாப்பேத்து சேமுடைய கூடாரங்களில் வாசம்பண்ணுவானென்றுந் தீர்க்கதரிசனமாய் ஆசீர்வாதஞ் சொன்னான்.

கO. இவன் சொன்ன ஆசீர்வாதத்தின்படி சேமியர் வேதத்துக்குரிய தேவபுத்திரரானார்கள். இவர்கள் யெகோவாவை விட்டுவிலக, யாப்பேத்தியர் யுத்தவல்லவர்களாகி, சேமியருடைய தேசங்களை அரசாளுகிறார்கள். காமியர் இன்னும் அடிமைகளாகவே இருக்கிறார்கள்.

(ஆதி. கூ. உஎ.

கக. இவர்கள் வழியாய்ச் சனங்கள் நூறுவருடமாக விருத்தியடைந்து ஒரே பாஷையுள்ள ஒரே திரளாய்ப்புறப்பட்டு, ஷினியார் தேசத்திற்குப் போய் ஒரு சமபூமியைச் சேர்ந்து வாசம்பண்ணுகையில் தங்களுக்குக் கீர்த்தியுண்டாகும்படிக்கும், தாங்கள் பூமியிற் பந்தங் கொலைந்துபர்விப் போகர்தபடிக்கும் தமக்கு ஒரு நகரத்தையும் வானத்தையளாவும் சிகரமுள்ள ஒருகோபுரத்தையும் உண்டாக்கத் துணிந்து அதற்கு வேண்டிய சகல முஸ்தீதுகளையும் சம்பாதித்து கட்டுவேலையில் முயன்றார்கள்.

கஉ. அப்பொழுது யெகோவா அவர்களுடைய பாஷையை வெவ்வேறாக்க, அவர்கள் ஒருவர் பேச்சு ஒருவருக்கு விளங்காமையினால் தாங்கள் எடுத்த காரியத்தை முடிக்க இட

ம்பெருமல் அலைந்து பூமுகமெங்கும் பரவிக் குடியேறினார்கள்.* (ஆதி. கக. கூ.

கரு. நோவாவின் சேஷ்டபுத்திரனாகிய யாப்பேத்து, கோமர், மாகோக், மாதாய், யாவான், தூபால், மேஷேக், தீராஸ் என்னுமெழுவரைப் பெற்றான். இவர்களுடைய சந்ததியார் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், வட ஆசியாவிலும் குடியேறியிருக்கிறார்கள். (ஆதி. க0. உ.

கச. காம், கூஷ், மிஸ்ராயிம், பூற்று, கானான், என்னும் நான்குபேரைப் பெற்றான். இவர்களுடைய பின்சந்ததியார் ஆபிரிக்காவிலே குடியேறினார்கள். ஆயினும் அடுத்த சண்டத்தாருக்குச் சிறைகளாகவே இருக்கிறார்கள். (ஆதி. க0. சு.

கரு. சேம், எலாம், அஷூர், அர்பக்சாத், லூத், அராம், என்னும் ஐந்து பிள்ளைகளைப் பெற்றான். இவர்கள் சின்ன ஆசியா, பார்சியா, அராபி, இந்து, சீனா, என்னுந் தேசங்களிலும் பாசிபிக்குச்சமுத்திர தீவுகளிலும் குடியேறியிருக்கிறார்கள். (ஆதி. க0. உஉ.

கசு. இவனுடைய மூன்றாம் புத்திரனாகிய அர்பக்சாத் வழியில் ஆபிரகாம் பிறந்தான். ஆபிரகாமுடைய சந்ததியில் யூதச்சனந் தோன்றினார்கள். அதிற்றானே மோசே தோன்றினான். அதிலே தான் தாவீது, சலோமோன், முதலிய ராசாக்களுந் தீர்க்கதரிசிகளுந் தோன்றினார்கள். வேதமும் அவர்களுக்கே கொடுக்கப்பட்டது. உலகரட்சகராகிய கிறிஸ்துநாதரும் இந்தச் சந்ததியிற்றானே தோன்றினார்.†

---

* அப்போஸ்தலர், ௱எ. உசு. † லூக்கா, உரு. கூஅ.

கஎ. இப்படியே நோவாவின் பின்சந்ததியார் பலுகிப் பெருகிப் பூமியெங்கும் பிரிந்துபோய் யெகோவாவை மறந்து அன்னியதேவர்களையும் விக்கிரகங்களையும் வணங்கிப் பதிதரானதைத் தேவன் கண்டு மனிதருக்குள்ளே தம்மைப் பற்றுஞ் சனம் எழும்புகிறதற்கும் பூமியிலே தம்மை அறிகிற அறிவு தலைப்படுகிறதற்குமாகக் கல்தேயாநாட்டின் ஊர் என்னும் நகரியிலிருந்த ஆபிரகாமைத் தெரிந்தழைத்தார்.

(ஆதி. கஉ. க.

---

## யாப்பேத்து.

ஆதி. க௦ம். அதிகாரம்.

| | | |
|---|---|---|
| க. | கோமர் | குடி செர்மனி, ஸ்பாணியா, மேற்குஐரோப்பா. |
| | அஷ்கினஸ் | குடி கறுப்புக்கடலெனப் பேரிடப்படும் அஷ்கினஸ் கடலுக்கு மேற்கும் தென்மேற்கும். |
| | ரீபாத்து | குடி கறுப்புக் கடலுக்குக் கிழக்கு. |
| | தொகற்மா | குடி கோக்கேசனென்னும்மலைநாடுகள். |
| உ. | மாகோக் | குடி தற்காலத்திலுள்ள ரூசியா. |
| ௩. | மாதாய் | குடி மேதியா, மக்கேதோனியா. |

௩. யாவான் குடி கிரேக்கு.

{எலீஷா / தர்ஷீஷ் / கித்தீம் / தோதானிம்} குடி. மத்தித்தரேணியக் கடலிலுள்ள தீவுகளும் அதின் கரையோரங்களும், இங்கிலாந்து முதலான தீவுகளுமே. (ஆதி. ௧௦. ௫, எரே. ௨.௧௦.,எசே. ௨௭. ௭.

{௫. தூபால் / ௬. மேஷெக்} இவர்கள் சந்ததியார்பலதரமும் மாகோக்கின் சந்ததியாருடனே கலந்துவிட்டார்களெனத் தெரியவருகின்றது. எசே. ௩அ. ௩., ௩௯. ௧.

௭. தீராஸ் இவன் சந்ததியார் திறேசியர் எனப் பேரிடப்படுந் திறேசன்ஸ்.

இந்த யாப்பேத்தியர், நோவாசொன்ன ஆசீர்வாதப்படி, கல்வி அறிவிலும், சாத்திரசூத்திர விற்பன்னத்திலும், இராச்சிய அதிகாரத்திலும், செல்வப் பெருக்கத்திலும் முக்கியமுள்ளவர்களாகிறார்கள். யெகோவா சேமியரைத் தெரிந்தெடுத்து எபிரேயபாஷையிலே பழைய உடன்பிடிக்கையைக் கொடுத்து, அவர்களை வேதவல்லவராக்கினதுபோல, யாப்பேத்தியருக்கும் கிரேக்கப்பாஷையிலே புதிய உடன்பிடிக்கையைக் கொடுத்து வேதவல்லவராய் நியமித்துக் கொண்டார். இக்காலத்துச் சுவிசேஷத்தைப் பற்பல பாஷைப்படுத்திப் பற்பல தேசங்களிலே பிரசித்தம்பண்ணிவருகிறவர்கள் இவர்களே.

# சேம்.

க. ஏலாம் — இவன் பார்சியருக்குக் கோத்திரப்பிதா.

உ. அஷூர் — இவன் அஷூரியருக்குக் கோத்திரப் பிதா.

ஈ. அர்பக்சாத், லூத், ஆராம் }

சாலாக் — இவர்கள் குடி மெசொப்பொத்தாமியா.

ஏபேர் — இவனிலிருந்து ஏபிரேயரென்கிற நாமம் வந்தது.

பேலேக் — இவன் மகன் ரேகூ. இவனுடைய காலத்திலே பாஷை தடுமாறினது. ஆதி. கo. உரு.

யோக்தான் — சேரூக்

அல்மோதாது — நாகோர்

கஎ

ச. லூத்து — சலேப்பு — தேராக் { யூதர், இஸ்மவேலர், மீதி

ரு. அராம் — ஆசர்மாவேத் — ஆபிராம்- { யானியர் என்பவர்களுக்

ஊத்சு — யாராது — நாகோர் { கு ஆதிபிதா.

கூல் — ஆதோராம் — ஆரான் இலியூவென்பவனுக்கு ஆதி

கேத்தேர். — ஊசால் — லோத்து பிதா. [பிதா.

{ மாஷ் — திக்லா — மோவாப்–மோவாபியருக்கு ஆதி

{ மேஷேக் — ஓபால் — அம்மோன்— அம்மோனியருக்கு

அபிமாவேல் — ஆதிபிதா.

க. நாளா. க. கஎ. ஷேபா

ஒப்பீர்–அவிலா–யோபாப்

காம். (ஆதி. கo. கூ.

க. கூஷ். கூஷின் சந்ததியார் முதன்முதல்
சேபா அராபியாதேசத்தின் கிழக்குப்பகு
அவிலா தியையும் தெற்குப் பகுதியையும்
சப்தா கையாட்சி பண்ணிக்கொண்டா
சப்தேகா ர்கள். அவனுடைய புத்திரனாகி
நிம்ரோத் ய நிம்ரோத் பாபேல் நகரியிலும்
ராமா நினிவேநகரியிலும் தன்னுடைய
ஷேபா அரசாட்சியைஸ்தாபித்ததினாலே
தேதான் கூஷியர் அவ்விடங்களிலுங் குடியேறி நிம்ரோத் இராச்சியமெனப் பேரிட்டார்கள். சேமியர் அவர்களைச் சற்றுச் சற்றாய்த் தெற்கேயும் மேற்கேயும் ஒற்றிவிட, அவர்கள் ஒற்றியோற்றிப்போய் ஆபிரிக்காவிலே குடியேறினார்கள்.

உ. மிஸ்ராயிம். மிஸ்ராயிம் என்பவனும் அவ
லூதீம் னுடைய சந்ததியாரும் எகிப்து
அனாமீம் த் தேசத்தைக் கையாட்சிப
லிகாபீம் ண்ணி மிகவுஞ் சுகசீவிசளா
நப்துகீம் கவுஞ் செல்விக்கையுள்ளவ
பத்ருசீம் ர்களாகவும் இருந்தார்கள். இ
கஸ்லூகீம் ஸ்ரவேலரை நிந்தித்து ஒடுக்கினவர்கள் இவர்களே. லூதீம், லிகாபீம் என்பவர்களின் சந்ததியார் தான் கொப்தோர், லீபியர் என்பவர்கள்.

பெலிஸ்தீம் இவன் சந்ததியார் கானான்தேசத்தின் மேற்கோரத்திற் குடியேறினார்கள்.

கப்தோரிம் இவன் சந்ததியார் கிரேத்தாதீவைக் கையாட்சிபண்ணினார்கள்.

ரு. பூற்று தற்காலத்திற் பாபேரியெனப்பேரிடப்படும் லீபியாவின் மேற்குப்பகுதியில் இவன் சந்ததியார் குடியேறினார்கள்.

ச. கானான். இவன் சீதோன், கேத், எபூசி, எமோரி, கிரகாசி, ஈவி, அரகி, சீனி, அரவாதி, சேமாரி, காமாத்தி என்னும், கக. புத்திரரைப் பெற்றான். இவர்கள் கானான்தேசத்திலே குடியேறினார்கள். (ஆதி. க௦. ௨௦.

---

## ௩ ம். அதிகாரம்.

ஆபிரகாம் தெரிந்துகொள்ளப்பட்ட நாள்முதல் இஸ்ரவேலர் எகிப்தைவிட்டுப் புறப்பட்ட நாள்வரைக்குஞ் சென்ற சரு௦. வருஷச் சங்கதி.

ஆ. பி. ௨௦அரு.] [கி. மு. ககூ௨௩.

க. ஆபிராம் மெசொப்பொத்தாமியாவிலிருக்கையில் யெகோவா அவனைச்சந்தித்து நீ உன் பிதாவின் வீட்டையும் உன் தேசத்தையும் விட்டு நான் காண்பிக்கிற தேசத்துக்குப்போ. நான் உன்னை ஆசீர்வதித்து உன்சந்ததியை மகாவிஸ்தாரமான சாதியாக்குவேன். பூமியிலுள்ள சகல சந்ததிகளும் உன்னாலே ஆசீர்வதிக்கப்படுமென்றார்.† (ஆதி. க௨. ரு.

௨. அதைஅறிந்து ஆபிராமின் பிதாவாகிய தேரா ஆபிராமோடே அவன் மனைவியையும், ஆரானுடைய புத்திரனாகிய லோத்தையுங் கூட்டிக்கொண்டு கல்தேயாவிலுள்ள ஊர் நகரத்தைவிட்டுக் கானானுக்குப் போகச் சிந்தித்துக் கா

---

*எபிரேயர், கக. அ. † அப்போஸ்தலர், எ. ௨-ச.

ரான் மட்டும்போய் அங்கே சிலநாட் தங்கியிரு
க்கையில் மரித்தான்.        (ஆதி. கக. ௩உ.

௩. ஆபிராம், எடும் வயதிலே தன் மனைவியா
கிய சாராயையும் தன் சகோதரனாகிய ஆரானி
ன் புத்திரனாகிய லோத்தையுங் கூட்டிக்கொண்
டு தாங்கள் காரானிலே சம்பாதித்த பொருட்க
ளையும் வேலைக்காரரையுங் கொண்டு கானானுக்
குப்போய், சீகேமுக்குச் சமீபமான மோரேயெ
ன்னுஞ்சமபூமியை அடைந்தான். (ஆதி. கஉ.௬.

௪. அப்பொழுது யெகோவா ஆபிராமைச் ச
ந்தித்து உன் சந்ததிக்கு இத்தேசத்தைச் சுதந்தர
மாகக் கொடுப்பேன் என்றார். அவன் அதில்
ஒரு வேதிகையை உண்டாக்கி, யெகோவாவை
ஆராதித்தபின் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்
டுப் பெத்தேலுக்கும் ஆயீக்கும் ஊடே கூடாரத்
தையிட்டுத்தங்கி யெகோவாவுக்கு ஒருவேதிகை
யை உண்டாக்கிஆராதித்து, அவ்விடத்தைவிட்
டுத் தென்முகமாய்ப் போனான். (ஆதி. கஉ. கூ.

௫. அக்காலத்தில் அங்கே கொடிய பஞ்சமி
ருந்ததினால் அவன் அவ்விடத்தைவிட்டு எகிப்
துக்குப் போனான். அங்குள்ள இராசன் சாராயு
டைய ரூபயௌவனத்தைக் கேள்விப்பட்டு அ
வளைத் தன்வீட்டுக்கு அழைப்பித்தான். அதி
னிமித்தம் யெகோவா அவனையும் அவன் குடு
ம்பத்தையும் வாதித்தார்.      (ஆதி. கஉ. கஎ.

௬. அப்பொழுது இராசா ஆபிராமை அழை
த்து அவன் மனைவியை அவனுக்கு ஒப்பித்து
நீ உனக்குள்ளவைகளையும், லோத்தையும் அவ
னுக்குள்ளவைகளையுங் கொண்டு புறப்படு எ

ன்று சொல்லி அனுப்பினான். ஆபிராம் திரு ம்பிக் கானானுக்கு வந்து தான் முன்பு வேதி கை கட்டிவைத்த பெத்தேலிற் சேர்ந்து யெ கோவாவைப் பிரார்த்தித்து லோத்துடனே சக வாசியாயிருந்தான். (ஆதி. ௧௩. ௪.

எ. ஆபிராமுக்கும், லோத்துக்கும், ஆடுமாடு களும், வேலைகாரரும் மிகுதியாயிருந்ததினால் அவ்விருவருடைய வேலைக்காரருக்குள் விரோ தமுண்டாயிற்று. (ஆதி. ௧௩. ௭.

அ. அதைக்கண்ட ஆபிராம் லோத்துடனே சகோதரராகிய நமக்குள்ளே விரோதம் வராதப டி நாம் பிரிந்திருக்கிறது நல்லது. இந்தத் தே சம் முற்றிலும் நீ உன் இட்டப்படி ஓர் பக்கத் தைத் தெரிந்துகொள். நீ தெரிந்துகொண்ட ப க்கத்தை நான் உனக்கு விட்டு மறுபக்கத்துக்கு ப்போவேன் என்றான். (ஆதி. ௧௩. ௯.

௯. அதைக் கேட்டு லோத்து யோர்தானைச் சேர்ந்த சமபூமி முழுதும் யெகோவாவுடைய பரதீசுக்கும், எகிப்துக்கும் சமானமான செழி ப்புள்ளதென்று கண்டு கீழ்த்திசையாய்ப் புறப் பட்டுச் சோதோமைச் சேர்ந்து கூடாரமிட்டி ருந்தான். ஆபிராமோ கானானிலே வாசமாயி ருந்தான். (ஆதி. ௧௩. ௧௨.

௧௦. அப்பொழுது யெகோவா ஆபிராமுக் குத் தரிசனையாகி நீ காண்கிற இந்தத் தேசம் மு ழுவதையும் உனக்கும் உன் சந்ததிக்கும் சுதந்தி ரமாய்க் கொடுப்பேன். உன் சந்ததி பூமியின் மணலத்தனையாய்ப் பெருகும். நீ இந்தத் தே சம்முற்றிலும் உலாவிக் கூடாரவாசியாயிரு

வென்றார். அந்தப்படி ஆபிராம் தன் கூடார த்தைப் பெயர்த்து மம்ரேயின் சமபூமியிலே ஸ் தாபித்து அங்கே யெகோவாவுக்கு ஒரு வேதி கையை உண்டாக்கினான். (ஆதி. ௧௩. ௧௮.

௧௩. அப்படியிருக்கையில் சேமியராகிய, கே தர்லாகோமர் முதலிய நான்கு இராசாக்களுங் கூ டிக் காமுடைய சந்ததியாரென்றெண்ணப்படு கிற சோதோமின்ராசன் முதலிய ஐந்து இராசா க்களோடும் யுத்தம்பண்ண காமுடைய வமிச த்தாராகிய ஐந்து ராசாக்களும் முறிந்தோடினார் கள். (ஆதி. ௧௪.

௧௨. அவர்களுக்குள் சோதோமின் ராசனும் கொமோராவின் ராசனும் நிலக்கீல்த்துரவுகளில் விழுந்தமிழ்ந்தினார்கள். மற்ற மூவரும் மலைகளு க்கோடி ஒளித்தார்கள். அப்பொழுது சேமியர் சோதோமிலும், கொமோராவிலுமுள்ள சகலத் தையுங் கொள்ளையாடினதினால் லோத்தும் அ வன் பொருள்களோடு கொள்ளைகொண்டுபோ கப்பட்டான். (ஆதி. ௧௪.

௧௫. ஆபிராம் அதைக் கேள்விப்பட்டுத் தன க்கு வசப்பட்டிருந்த,௩௱௧௮. பேரைச் சேர்த்துக் கொண்டு போய் சேமியரைச் செயங்கொண்டு அவர்கள் கொள்ளையாடிப்போன பொருட்களை யுஞ் சனங்களையும் லோத்தையும் மீட்டுக்கொண் டு வருகையில் யெகோவாவை வழிபடுகிற ஆசா ரியனும் சாலேமுக்கு ராசனுமாகிய மெல்கிசெ தேக்கு* அவனைச் சந்தித்து அவனுக்குப் போச னபானங்கொடுத்து ஆசீர்வதித்தான். ஆபிராமு ம் தான் மீட்டுக்கொண்ட பொருள்களிற் பத்தி

---

* எபிரே, எ. ௧—௪.

லொருபாகத்தைமெல்கிசெதேக்குக்கு ஒப்புவித்துக் கானானுக்குத் திரும்பினான். (ஆதி. கச. உ௦.

கச. அக்காலத்தில் யெகோவா ஆபிராமுக்குத் தரிசனையாகி வானத்து நட்சத்திரங்களை அவனுக்குக் காட்டி உன் சந்ததி இவ்வளவாகப் பெருகும் இத்தேசமும் உனக்குச் சுதந்தரமாகும். நீ மூன்றுவயதுள்ள கடாரியையும், மூன்றுவயதுள்ள வெள்ளாட்டையும், மூன்றுவயதுள்ள செம்மறிக்கடாவையும், ஒரு காட்டுப்புறுவையும், ஒரு புறுக்குஞ்சையும் என்னிடத்திலே கொண்டுவாவென்றார். (ஆதி. கரு. கூ.

கரு. அந்தப்படியே அவன் கொண்டுவந்து கடாவையும் ஆடுகளையும் துண்டித்து அவைகளை ஒன்றுக்கொன்று எதிராகப் பரப்பி வைக்க, காட்டுப்பறவைகள் வந்து அந்தத் துண்டங்கள் மேல் விழுந்தன. அப்பொழுது யெகோவா ஆபிராமுடனே உன் சந்ததியார், ச௦௦. வருஷம் புறத்தேசத்தாருக்கு ஊழியஞ்செய்து துன்பப்படுவார்கள்.* (ஆதி. கரு. கரு.

கசூ. பின்பு அத்தேசத்தாரை நான்தண்டிப்பேன். நீயோ பூரணஆயுள்உள்ளவனாய்ச் சமாதானத்தோடே மரிப்பாய். கேனியர், கேனிசியர், கத்மோனியர், எத்தியர், பெரிசியர்,ரெப்பாவர்,எமோரியர், கானானியர், கிரகாசியர், எபூசியர் என்னும் பத்துச்சாதியாரும் இருக்கிற இத்தேசத்தை உன் சந்ததிக்குக் கொடுத்தேனென்றார்.† (ஆதி. கரு. உக.

கஎ. இப்படியிருக்கையிற் சாராய் ஆபிராமுடனே எனக்குச் சந்தானமில்லையே. நீர் என

* அப்போஸ்தலர், எ. சூ. † அப்போஸ்தலர், எ. எ.

து அடிமையாகிய ஆகாருடனே கூடும். அவ
ள் வழியாய் எனக்குச் சந்தானமுண்டாகுமெ
ன்றுசொல்லி ஆகாரை அழைத்துத்தன் கணவ
னுக்கொப்புவித்தாள். ஆகாரோ ஆபிராமுக்கு
ச் சந்தானபாரியாய்க் கருப்பவதியானதினிமி
த்தம் தன் தலைவியை அசட்டைபண்ணினாள்.
சாராய் அதைக் கண்டு விசனப்பட்டு ஆபிராமி
டத்திலே குறைகூறினாள். (ஆதி. ௧௬. ௫.

௧அ. ஆபிராம் அதைக் கேட்டுச் சாராயே;
உன் அடிமை உன் கைக்கீழிருக்கிறாள். அவ
ளை நீ உன் இஷ்டப்படி நடத்தலாமேயென்றா
ன். அப்பொழுது சாராய் ஆகாரைத் தண்டிக்
க இவள் அவளை விட்டோடினாள்.

௧௯. யெகோவாவின் தூதன் அவளைச் சந்தி
த்து ஆகாரே, நீ உன் தலைவியண்டை போய் அ
வளுக்குக் கீழ்ப்படிந்திரு. உன் பிரலாபத்தை
யெகோவா கேட்டார். அதினால் நீ பெறும் பு
த்திரனுக்கு இஷ்மவேலென்று பெயரிடு. அவ
ன் துட்டனும் யாவருக்கும் விரோதியுமாவான்.
யாவரும் அவனுக்கு விரோதிகளாவார்கள். அ
வனுடைய சந்ததி மிகவும் பெருகுமென்றான்.
ஆகார் அதைக் கேட்டுத் திரும்பிவந்து சா
ராய்க்குக் கீழமைந்திருந்து ஆபிராமுக்கு அ௬.
வயதாயிருக்கையில் இஷ்மவேலைப் பெற்றாள்.
(ஆதி. ௧௬. ௧௧.

௨௦. ஆபிராமுக்குத் தொண்ணூற்றொன்பது
வயதும், சாராய்க்கு அ௯. வயதுமாயிருக்கையி
ல் யெகோவா அவனுக்குத் தரிசனையாகி நீ அ
னேகசாதிகளுக்குப் பிதாவாயிருப்பதினால் உ

னது நாமம் இனி ஆபிராமென்று இராமல் ஆபி ரகாமென்றிருக்கும். அனேக சாதிகள் உன் னிடத்திலிருந்து தோன்றும். உன் வழியில் அனேக இராசாக்கள் தோன்றுவார்கள். நான் உன்னுடனே பண்ணும் உடன்படிக்கைக்க டையாளமாக உன்னிடத்திலுள்ள சகல ஆண் பிள்ளைகளும் விருத்தசேதனம்பண்ணப்படவே ண்டும். உன் மனைவியும் பலசாதிகளுக்குமாதா வாகவருவதினால் அவளும் சாராளென்று அழை க்கப்படவேண்டுமென்றார். (ஆதி. கஎ. கக.

உக. ஆபிரகாம் அதைக் கேட்டு விருத்தராகி ய நமக்குச் சந்ததியுண்டாவதெப்படி? என்றுசி ந்தித்து, யெகோவாவே, இஷ்மவேல் உமக்குமு ன்பாகச்சீவித்திருக்கட்டுமென்றான். அதற்கவர் உன் மனைவியாகிய சாராள் வருகிற வருஷத்தி ன் பூரணகாலத்தில் ஒரு புத்திரனைப் பெறுவது நிச்சயம்.* அவனுக்கு ஈசாக்கென்று பெயரிடு. இஷ்மவேலும் பன்னிரண்டு பிரபுகளுக்கு பிதா வாவான். அவன் வழியாயும் ஒரு பெரிய சா திதோன்றுமென்றார். அதற்கடையாளமாக, ஆ பிரகாம் தனக்கும் தன் குடும்பத்தில் ஆண் பிள்ளைகளுக்கும் விருத்தசேதனஞ் செய்தான். அப்பொழுது ஆபிரகாமுக்குத் தொண்ணூற்றொ ன்பது வயசு. இஷ்மவேலுக்கு கஙூ. வயசு.

(ஆதி. சஎ. உடு.

உஉ. பின்பு ஒருநாள் ஆபிரகாம் மம்ரேயின் சமபூமியின் கூடாரவாசலிலே இருக்கையில் விருந்தராக மூன்று புருஷரைக் கண்டு அவர்க ளுக்கெதிரே போய்த் தாழ்ந்து வணங்கி அவர்க

* உரோமர், ச. மக.

ளுக்குப் புசிக்க பாதசுத்திசெய்யச்சலமும்போ சனமுங் கொடுத்தான்.* அவர்கள் புசித்தபின் வந்த மூவரிலொருவர் ஆபிரகாமுடனே உன் மனைவியாகிய சாராள் பூரணகருப்பகாலஞ்செ ல்ல ஒரு புத்திரனைப் பெறுவாள். நானுந் தி ரும்பிவருவேனென்று சொல்லி, எழுந்து புற ப்பட, ஆபிரகாமும் அவர்களை வழிவிட்டனுப் பும்படி கூடிப்போனான். யெகோவா ஆபிர காமுடனே நின்றார். மற்ற இருவருஞ் சோ தோமை நோக்கிப்போனார்கள்.(ஆதி. ௧௮. ௧௦.

உ௩. அப்பொழுது யெகோவா சோதோம் கொமோராவின் ஓலம் பெரிது, நான் அதை வி சாரிப்பேனென்றார். அதைக் கேட்ட ஆபிர காம், ஆண்டவரே தேவரீர் துன்மார்க்கரோடே சன்மார்க்கரையுஞ் சங்கரிப்பதா ? அங்கே ஐம் பது சன்மார்க்கர் இருப்பார்களேயாகில் யாவ ரையும் ஏகமாய் அழிப்பீரா என்றான். அதற்கு யெகோவா சோதோமில் ஐம்பது சன்மார்க்கர் உண்டானல் நான அவர்களினிமித்தம் அந்த ஸ்தலத்தைத் தண்டியேனென்றார்.

(ஆதி. ௧௮. உ௬.

உ௪. அதற்கு ஆபிரகாம், ஆண்டவரே ஐந்து பெயர் குறைந்தாலோ என்றான். அதற்கவர் நாற்பத்தைந்து பேர் உண்டானாலும் அவர்களி னிமித்தம் அதை விடுவேன் என்றார். மேலும் அவன் நாற்பதுபேர் இருந்தாலோ என்றான். அதற்கும் அவர் நாற்பதுபெயர் இருந்தாலும் அ வர்களினிமித்தம் அதற்குச் சகிப்பேனென்றார். பின்னும் அவன் ஆண்டவரே, முப்பதுபேர் கா

* எபிரேயர், ௧௩ ௧.

ணப்பட்டாலோ என்றான். அதற்கு அவர் மு
ப்பதுபேர் உண்டானால் நான் அதை மன்னிப்
பேன் என்றார். மறுபடியும் அவன் இருபது
பேரானாலோ என்றான். அதற்கும் அவர் அப்
படியே சொன்னார். மறுபடியும் அவன் பத்து
ப்பேர் உண்டானாலோ என்றான். அதற்கும் அ
வர் அப்படியே சொல்லி அவனைவிட்டுப் புறப்
பட்டார். (ஆதி. கஅ. கூகூ.

உரு. மற்றத் தூதர் இருவரும் சோதோமைச்
சேர அங்குள்ள லோத்து அவர்களைக் கண்டு தா
ழ்ந்து வணங்கி, நாயன்மாரே, நீங்கள் அடியே
னுடைய வீட்டிற் பிரவேசித்துப் பாதசுத்திசெ
ய்து காலையில் எழுந்து பிரயாணப்படலாமெ
ன்று வருந்திக் கேட்டான். அவர்கள் அவன்
வீட்டிற் பிரவேசித்தார்கள். அவன் அவர்களு
க்கு விருந்திட்டான். அதை அறிந்து சோதோ
மியர் இன்றிரவு உன் வீட்டுக்கு வந்தவர்கள் எ
ங்கே? அவர்களை வெளியே கொண்டுவாவெ
ன்க, அவன் தான் வெளியே வந்து இந்தப் புரு
ஷர்கள் என் இல்லடையாய் வந்தார்களே. இவ
ர்களுக்கு ஒன்றுஞ்செய்யாதிருங்களென்றான்.*
(ஆதி. கக. அ.

உகூ. அவர்களோ கடுங்கோபங்கொண்டு ப
ரதேசியாய் வந்த நீயோ நமக்கு நியாயாதிபதி?
நாம் அவர்களிலும் உனக்கு அதிக தீங்குசெய்
வோமென்று வீட்டின் கதவை உடைக்கக் கிட்
டினார்கள். அதைக் கண்ட தூதர் இருவரும் த
ங்கள் கைகளை வெளியே நீட்டி லோத்தைப் பி
டித்திழுத்து உட்படுத்திக் கதவைப் பூட்டி வந்

* உ. பேதுரு, உ. எ, அ. உஎ

த சனங்களைக் குருடராக்கிஞர்கள். அதிஞல் அவர்கள் வழிதெரியாமல் தடவித் திரிந்து இளைத்தார்கள். (ஆதி. ககூ. கக.

உஎ. அப்பொழுது தூதர் இந்தத் தலத்தின் அக்கிரமத்தினிமித்தம் இது அழிக்கப்படும். இதற்காகவே யெகோவா எங்களை அனுப்பிஞர். உனது மக்கள் மருமக்களையும் உனக்குள்ள சகலத்தையுங் கொண்டு வெளியே புறப்பட்டுப் போவென்று சொல்ல, அவன் எழுந்து தன் மருமக்களைச் சந்தித்து யெகோவாஇந்தநகரத்தை அழிப்பார். ஆகையால் நீங்கள் இத்தலத்தை விட்டுப் புறப்படுங்களென்றுன். அது அவர்களுக்குப்பரிகாசமாய்க் காணப்பட்டது. அவன்தாமதித்தபடியால் அன்றிரவு விடிய குறித்த தூதர் லோத்தையும் அவன் மனைவியையும் அவன் குமாரத்திகளிருவரையும் பிடித்துஇழுத்துநகரத்துக்குவெளியேகொண்டுபோய்விட்டு நீங்கள்இந்தச் சமபூமியில் எங்கேயாகுதல் தரியாமல்மலைக்குத் தப்பி ஓடுங்கள். தாமதித்தால் நாசமடைவீர்களென்ருர்கள். (ஆதி. ககூ. கஎ.

உஅ. அதைக் கேட்டு லோத்து ஆண்டவமாரே, நான் மலைக்கோட முதல் எனக்கு ஒரு தீங்கு நேரிட, நான் மரிப்பேனே தெரியாது. ஆகையால் இங்கே தோன்றுகிற இந்தச் சிற்றூருக்கு நான் ஓடிப்போய்த் தப்பிக்கொள்ள உத்தரவு தாருங்களென்று மன்ருடிஞன். அவர்கள் அதற்கு உடன்பட்டு உத்தரவுகொடுத்து நீங்கள் திரும்பிப்பாராமல் துரிதமாய் ஓடித் தப்பிக்கொள்ளுங்களென்ருர்கள். அந்தப்படி அவர்

கள் ஒடுகையில், லோத்தின் மனைவி சோதோமைத் திரும்பிப் பார்த்து உப்புத்தூணானாள்.* லோத்தும் பிள்ளைகளும் சோவாரிற் பிரவேசிக்க சூரியனும் உதயமாயிற்று. (ஆதி. ௧௯. ௨௬.

௨௯. அப்பொழுது யெகோவா வானத்திலிருந்து அக்கினியையும், கந்தகத்தையும், சோதோம், கொமோரா, என்னும் நகரங்கள் மேல் வருஷிப்பித்து அந்த நகரங்களையும், அதைச் சேர்ந்த சமபூமிகளையும் அவைகளிலுள்ள சராசரங்களனைத்தையும் நாசப்படுத்தினார்.† இப்படியே சம்பவித்த நாசத்துக்கு ஆபிரகாமின் நிமித்தம் தப்பிக்கொண்ட லோத்து சோவாரிலே தங்கப் பயந்து தனது இரண்டு குமாரத்திகளோடும் மலையிலே போய்த் தங்கினான். லோத்தின் மூத்த குமாரத்தியினின்று மோவாபியரும் இளைய குமாரத்தியினின்று அம்மோனியரும் தோன்றினார்கள். (ஆதி. ௧௯. ௩௮.

௩௰. ஆபிரகாம் கேராரில் இருக்கையில் தன்னைச் சாராளுடைய கணவனென்று கேராரின் அரசனாகிய அபிமேலேக்கு அறிந்தால் தன்னைக் கொன்று சாராளைத் தனக்கு மனைவியாக்குவானென்று பயந்து அவளைத் தன் சகோதரியென்று வெளிப்படுத்தியிருந்தான். அதினாலே இராசா அவளைத் தனக்குப் பாரியாக்கவெண்ணி அழைப்பித்தான். அதினாலே அவனுடைய தேசமெங்கும் கருமாரியுண்டாயிற்று. (ஆதி. ௨௦. ௩.

௩௧. அப்பொழுது யெகோவா இராசாவுக்குத் தரிசனையாகி ஆபிரகாமின் மனைவியை நீ அ

* லூக். ௰௭. ௩௨., யூதா. ௭. † லூக். ௰௭. ௨௯., ௨ பே. ௨. ௬.

ழைப்பித்தபடியால் அவள் உன் மரணத்துக்கு ங் காரணமாவாள் என்றார். அதினாலே அவன் பயந்து ஆபிரகாமை அழைப்பித்து அவனுக்கு நன்கொடையாக ஆடுமாடுகளையும், பணிவிடைகாரரையும், பணிவிடைகாரிகளையும் சாராளுக்கு ஒரு முக்காட்டு வஸ்திரத்தையுங் கொடுத்துத் தன் தேசமெங்கும் ஆபிரகாம் தன் இஷ்டப்படி வாசம்பண்ணவும் உத்தரவுகொடுத்தான். அப்பொழுது ஆபிரகாம் தன் தேவனிடத்திலே பிரார்த்தனைசெய்யத் தேவன் அபிமேலேக்குக்கும் அவன் தேசத்துக்கும்நேரிட்டிருந்த விக்கினங்களை அகற்றிச் சகாயஞ்செய்தார்.

(ஆதி. உ0. கஅ.

௬உ. முன்னே தூதன் சொன்ன காலந் தவறாமல் ஆபிரகாம் நூறுவயதாயிருக்கையிற் சாராளிடத்தில் ஈசாக்குப் பிறந்தான்.* அவன் பிறந்த எட்டாம்நாளிலே விருத்தசேதனஞ் செய்யப்பட்டது. இந்த ஈசாக்கு மூலைமறந்த பிராயத்திலே ஆகாரின் மகனாகிய இஷ்மவேல் ஈசாக்கைப் பரிகாசஞ்செய்தானென்று சாராள் கண்டு இந்த அடிமையின் மகன் என் புத்திரனுடனே சுதந்தரவாளியாவதோ? ஆகாரையும் அவள் புத்திரனையும் புறம்பே துரத்திவிடுமென்று ஆபிரகாமிடத்திற் கேட்டாள்.† அதினாலே ஆபிரகாம் மனம்நொந்து வருந்துகிறதை யெகோவா அறிந்து, நீ, இஷ்மவேலைக்குறித்துத் துக்கப்படவேண்டாம். உன் சந்ததி ஈசாக்கின் வழியாய் வர்த்திக்கும். இஷ்மவேலும் உன் சந்ததி

* எபிரேயர், கக. கக. † கலாத்தியர், ச. ௩0.

யாயிருக்கிறதினால் அவனில் நின்றும் ஒரு சாதி தோன்றுமென்றார். அப்பொழுது இஷ்மவேலுக்கு வயது பதினெட்டு. (ஆதி. உக. கங.

ஙங. ஆபிரகாம் அதைக் கேட்டு அதிகாலையிலே எழுந்து ஆகாருக்கும் மகனுக்கும் வழிப் போசனபானத்தைக் கொடுத்து அகற்றிவிட்டான். அவள் வனத்திலே போய் அலைந்து திரிகையில் கொண்டுபோன தண்ணீர் தொலைந்ததினால் பிள்ளை தவிக்கிறதைக் கண்டு அந்தப் பிள்ளையை ஒரு செடியின்கீழ் விட்டுத் தூரத்திற் போயிருந்து புலம்பினாள். அப்பொழுது ஒரு தேவதூதன் வெளிப்பட்டு அவளுடைய கண்களுக்கு ஒரு கிணற்றைக் காண்பித்தார். அவளும் அதிலே மொண்டு தனது நீர்த்துருத்தியை நிரப்பிப் போய் மகனுக்குப் பருக்கிச் சோகந் தெளிவித்தாள். பின்பு இருவரும் வனவாசிகளாயிருந்தார்கள். (ஆதி. உக. ககூ.

ஙச. இஷ்மவேல் பாரான் வனத்தில் வேட்டைக்காரனாய் வாசம்பண்ணுகையில் எகிப்தாளாகிய ஒரு பெண்ணை விவாகம்பண்ணினான். அவளிடத்தில் கஉ. பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களிலிருந்து தோன்றிய சாதிகளுக்கு இவர்களே கோத்திரப் பிதாக்கள். இச்சந்ததியாருக்குப் பேர் இஷ்மவேலர். (ஆதி.உரு. கங. கச.

ஙரு. ஈசாக்கு இருபத்துநாலு வயசாயிருக்கையில் தேவன் ஆபிரகாமுக்குத் தரிசனையாகி, நீ உன் சுதனாகிய ஈசாக்கை அழைத்துக் கொண்டு மோரியதேசத்துக்குப் போய் நான் உனக்குக் காண்பிக்கும் ஓர் மலையின் மேல் அவனைச் ச

ருவாங்க தகனப்பலியாய்ச் செலுத்தென்று கட்டளையிட்டார். (ஆதி. உஉ. உ.

௬௬. அதைக் கேட்டு ஆபிரகாம் அதிகாலையிலெழுந்து தன் வேலைகாரர் இருவரையும் தன் புத்திரனாகிய ஈசாக்கையும் அழைத்துக்கொண்டு கட்டைகளையும் எடுத்துக்கொண்டு தேவன் தனக்குக் கற்பித்த இடத்துக்குப் பயணப்பட்டு மூன்று நாள் வழிநடந்து தூரத்திலே குறித்த இடத்தைக் கண்டு தன் வேலைக்காரரையுங் கழுதையையும் அவ்விடத்தில் நிறுத்திக் கட்டைகளை ஈசாக்கின்மேற் சுமத்தித் தான் நெருப்பையும் கத்தியையும் எடுத்துக்கொண்டுபோனான்.

௬எ. அப்படிப்போகையில் ஈசாக்கு பிதாவே, நெருப்புங் கட்டையுமிருக்கிறது, தகனபலிக்கு ஆட்டுக்குட்டி எங்கேயென்றான். அதற்கு ஆபிரகாம் மகனே, தேவன் தமக்கு இதமான ஆட்டுக்குட்டியைத் தாமே தெரிந்துகொள்வாரென்றான். (ஆதி. உஉ. அ.

௬அ. இப்படி இருவரும் பேசிக்கொண்டு தேவன் குறித்த இடத்துக்குப் போய் அங்கே ஒரு வேதிகையையுண்டாக்கி அதின்மேற் கட்டைகளை அடுக்கி, அதின்மேற் தன் புத்திரனைக் கட்டிக்கிடத்தி அவனைத் துண்டிக்கும்படி தன் கையை நீட்டிக் கத்தியை எடுக்க,யெகோவாவுடைய தூதன் தடைசெய்தார்.* அப்பொழுது ஆபிரகாம் செடிக்குள்ளே கொம்புகள் சிக்குண்டு ஒரு ஆட்டுக்கடா நிற்கிறதைக் கண்டு அதைப் பிடித்துத் தன் புத்திரனுக்குப் பிரதியாகப் பலியிட்டான். (ஆதி. உஉ. ௬௬.

*எபிரேயர், ௰க. ௰எ—௰௬.

ருகூ. மறுபடியும் யெகோவாவுடைய தூதன் பிரசன்னமாகி, நீ உன் ஏக புத்திரனைப் பாராமல் இப்படிச் செய்யத் துணிந்தமையால் *உன் சந்ததியை வானத்து நட்சத்திரங்களைப்போலவும் சமுத்திரக் கரையின் மணற்களைப்போலவும் பெருகப்பண்ணுவேன். உன் சந்ததியார் தங்கள் சத்துருக்களின் வாசல்களைச் சுதந்தரிப்பார்கள். உன் சந்ததியினுற் சகல சாதியாரும் ஆசீர்வதிக்கப்படுவார்களென்று யெகோவா சொல்லுகிருரென்ருன்.† ஆபிரகாம் புறப்பட்டுத் தன் புத்திரனையும் வேலைகாரரையும் அழைத்துக்கொண்டு பேர்ஷேபாவிலே சேர்ந்து தங்கினுன். (ஆதி. உஉ. ககூ.

சய. ஆபிரகாமுக்கு கஙஎ வயசுசென்றிருக்கையில் சாராள் கானுனிலுள்ள எபிரோனிலே மரித்து ஆபிரகாம் எத்தின் புத்திரரிடத்தில் விலைக்குவாங்கின மக்பேலாவென்னுங் குகையில்அடக்கம்பண்ணப்பட்டாள். வயசு, கஉஎ. சாராள் மரித்த மூன்ரும் வருஷத்தில், ஆபிரகாம் தனது உக்கிராண விசாரணைக்காரனும் தமஸ்கூரானுமாகிய எலியேசரை அழைத்து நீ என் தேசத்துக்குப் போய் என் பந்துசனங்களுக்குள் ஒரு பெண்ணை என் குமாரன் ஈசாக்குக்கு மனையாட்டியாக அழைத்துவாவென்று சொல்லிப் பத்து ஒட்டகங்களிலே திரவியத்தையும் ஏற்றி அனுப்பினுன். (ஆதி. உச. ச.

சக. எலியேசர் ஆபிரகாமுடைய சகோதரனுகிய நாகோருடைய ஊரிற் சேர்ந்து அவ்வூரிலுள்ள ஸ்திரிகள் தண்ணீர்மொள்ளும் ஓர் கிண

* உரோமர், ச. ௬. † கலாத்தியர், ௩. அ, ௰௬, ௰௯.

ற்றருகே உளுக்கார்ந்து தான் எண்ணிவந்த காரியஞ் சித்தியாகவேண்டுமென்று யெகோவாவை நோக்கிப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கையில் நாகோருக்கும், மில்க்காளுக்கும் குமாரனான பெத்துவேலுடைய மகளாகிய ரிபெக்காள் தண்ணீர் மொள்ளும்படி வந்தாள். இவன் ரிபெக்காளைக் கண்டு அவள் மொண்டெடுத்த தண்ணீரில் தான் பானம்பண்ணத் தரும்படி கேட்டான். அவள் இவனுக்குப் பானம்பண்ணக் கொடுத்ததுமன்றி இவனுடைய ஒட்டகங்களுக்கும் நீரை மொண்டு வார்த்தாள்.

(ஆதி. உச. உ௦.

சஉ. அதைக் கண்ட எலியேசர் யெகோவா தன் பிரயாணத்தை வாய்க்கப்பண்ணினாரென்று தனக்குள்ளே சிந்தித்துப் பிள்ளையே, நீ ஆருடைய மகள்? உன் பிதாவின் வீட்டில் இராத் தங்குவதற்கு இடமுண்டாவென்க, அவள் நான் பெத்துவேலின் மகள். எங்களிடத்தில் வைக்கோலும் உணவும் அதிகமுண்டு. இராத்தங்க இடமுமுண்டு என்றாள். அதைக் கேட்டு எலியேசர் ஆபிரகாமின் தேவனாகிய யெகோவா ஸ்தோத்திரிக்கப்படக்கடவரென்றான்.

(ஆதி. உச. உஎ.

சரு. உடனே அந்தக் கன்னிகை வீட்டுக்கோடிப்போய் நடந்தசங்கதிகளை அறிவிக்க, அவளுடைய சகோதரனாகிய லாபான் எலியேசரண்டைக்குப் போய் யெகோவாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவனே, உள்ளே வா. உனக்கும் உன் ஒட்டகங்களுக்கும் இடம் ஆயத்தமாயிருக்

கிறது, என்று சொல்லி அவனை அழைத்துத் த
ன் வீட்டுக்குக் கொண்டுபோய் ஒட்டகங்களு
க்கு வைக்கோலையும் உணவையும் இட்டு எலி
யேசருக்கும் அவனுடனே கூட வந்தவர்களுக்
கும் போசனங்களைப் படைத்தான்.

(ஆதி. உச. ௩௩.

சச. அப்பொழுது எலியேசர் உங்களை விட்
டுப் பிரிந்துபோன ஆபிரகாமை யெகோவா ஆ
சீர்வதித்து அவனைத் திரவிய சம்பன்னனாக்கி
னார். விருத்தையான சாராளும் அவருக்கு ஒ
ரு புத்திரனைப் பெற்றாள். அவனுக்கு விவாக
ஞ்செய்யும்படி ஆபிரகாம் சிந்தனைகொண்டு எ
ன்னை அழைத்து, நீ, என் பிதாவின் தேசத்திற்
போய் என் உறவின்முறையாரிடத்தில் ஒருபெ
ண்ணை அழைத்துவா. நான் வழிபடும் யெகோ
வா தமது தூதனை உன்னுடனே அனுப்பி உன்
பிரயாணத்தை வாய்க்கப்பண்ணுவாரென்றார்.

(ஆதி. உச. ௩அ.

சரு. அதைக் கேட்டு நான் யெகோவாவைத்
தொழுதுகொண்டு உங்களண்டை வந்தேன்.
நீங்களும் என் எசமானுக்குத் தயைசெய்ய மன
துள்ளவர்களானால் நான் உங்களிடத்திற் புசிப்
பேன். அல்லது அப்பாலே போவேன் என்றா
ன். அதைக் கேட்டு லாபானும் பெத்துவே
லும் இவைகளெல்லாந் தெய்வச்செயலாகச் ச
ம்பவித்திருக்கிறது. நாம் இதற்கு மாறாக ஒன்
றுஞ் சொல்லக்கூடாது. ரிபெக்காள் உன் எச
மானின் குமாரனுக்கு மனைவியாகக்கடவள். நீ

அவளை அழைத்துக்கொண்டுபோவென்றார்கள்.
(ஆதி. ௨௪. ௫௪.

௪௬. அதை எலியேசர் கேட்டு யெகோவாவை த்துதித்துத்தான் கொண்டுவந்த வெள்ளி உடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையும், ரிபெக்காளுக்குக் கொடுத்ததுமன்றி அவளுடைய சகோதரனாகிய லாபானுக்கும், அவளுடைய மாதாவுக்கும், சில உபகாரங்களையுங் கொடுத்து அதின்பின் புசித்தான். மறுநாட் காலமே அவர்கள் ரிபெக்காளை அழைத்து ஆசீர்வதித்து, அவளையும் அவளுடைய தாதியையும் அவனுடனே கூட்டிஅனுப்பிவிட்டார்கள். அவன் அவர்களையும்அழைத்துக்கொண்டு எபிரோனுக்குவந்து ஈசாக்குக்கு மணம்முடித்து வைத்தான். அப்பொழுது அவனுக்கு வயசு ௪0.
(ஆதி. ௨௪. ௬௭.

௪௭. சாராள் மரித்து ௯ம். வருஷத்தில் ஆபிரகாம் கேத்தூராள் என்னும் ஒரு ஸ்திரியை இரண்டாந்தாரமாக மணம்முடித்துஆறுபிள்ளைகளைப் பெற்றான். இவர்கள் வழியாய் அராபியாவிலே வாசம்பண்ணின மீதியானியர் முதலிய அனேக சாதியார் தோற்றமானார்கள்.
(ஆதி. ௨௫. ௨.

௪அ. ஆபிரகாம் ௧எ௫ வயசில் மரித்து மக்பேலாவின் குகையில் அடக்கம்பண்ணப்பட்டான். ஈசாக்கின் மனைவியாகிய ரிபெக்காள் நெடுநாள் மலடியாயிருந்து பின்பு கருப்பவதியாகி இருக்கையில் வயாவருத்தங்கொண்டு யெகோவாவைப் பிரார்த்திக்க யெகோவா அவளு

டனே உன்னிடத்திலிருந்து இருவகைச்சனங்களுக்குக் கோத்திரப் பிதாக்கள் தோன்றுவார்கள். அவ்விருவருள் மூத்தவன் இளையவனுக்குத் தொண்டு செய்வான் என்றார். *அப்படியேஎசாவும் யாக்கோபும் இரட்டைப்பிள்ளைகளாய்ப் பிறந்தார்கள். அவர்களுள் எசாவு வில்வல்லவனும் வேட்டைக்காரனும் வனவாசியுமானான். யாக்கோபு சாதுள்ளவனும் கூடார வாசியுமானான். ஈசாக்கு எசாவிற் பட்சம் வைத்தான். ரிபெக்காள் யாக்கோபிற் பட்சம் வைத்தாள். (ஆதி. ௨௫. ௨௮.

௬௧. ஒருநாள் எசாவு வேட்டையாடி இளைத்துவருகையில், யாக்கோபு வைத்திருந்த சிவந்த போசனத்தைக் கண்டு விரும்பித் தன் சேஷ்ட புத்திர அதிகாரத்தை அவனுக்கு விற்று, அதை வாங்கிப் புசித்தான். அதினாலே எசாவுக்கு எதோமென்றும் பேர் வந்தது. எதோமென்பது சிவப்பு. (ஆதி. ௨௫. ௩௪.

௬௨. காநானிலே பஞ்சமுண்டானதினால் ஈசாக்குத் தன் குடும்பத்துடனே புறப்பட்டுக் கேராருக்குப் போய் அதின் ராசனாகிய அபிமெலேகின் அநுமதிப்படிஅங்கே தங்கி, நிலங்களிலே பயிரிட்டான். அவைகள் நூறு மடங்கு பலனைக் கொடுத்ததினால் அவன் பெலிஸ்தருக்குள் மிகவும் மேன்மைபெற்றான். இவனுக்குக் கன்றுகாலிகளும் அடியார்கூட்டமும் மிகுத்திருந்தன.

௬௩. அக்காலத்தில் ஈசாக்கிற்கும்யெகோவாதரிசனையாகி நான் உனக்கும் உன்சந்ததிக்கும்இந்தத்தேசம் முழுவதையும் சுதந்தரமாகத்தந்துநான்

* உரோமர், ௯. ௧௧, ௧௨.

உன் பிதாவாகிய ஆபிரகாமுடனே பண்ணின உடன்படிக்கை நிறைவேறும்படி உன் பட்சத்திலிருந்து உன்னை ஆசீர்வதிப்பேன். ஆபிரகாம் என் கட்டளைகளையும் நியாயப்பிரமாணங்களையும் நியமங்களையும் வேதப்பிரமாணங்களையுங் கைக்கொண்டு நடந்தபடியால் உன் சந்ததியை மிகவும் பெருகப்பண்ணி அவர்களுக்கு இத்தேசத்தைக் கொடுப்பேன். உன் சந்ததியினாலே பூமியின் சகல சாதியாரும் ஆசீர்வதிக்கப்படுவார்களென்றார். (ஆதி. உசு. ரு.

சுச. இவனுடைய திரவியப்பெருக்கத்தினாலே பெலிஸ்தர் பொறாமைகொண்டு ஆபிரகாம் தோண்டியிருந்த கிணறுகளைத் தூர்த்துப்போட்டார்கள். அபிமேலேக்கோ ஈசாக்கை அழைத்து நீ பெலிஸ்தரிலும் பிரபுவாயிருக்கிறாய். ஆகையால் நீ இவ்விடம்விட்டுப் போகவேண்டுமென்று கட்டளையிட்டான். அதைக் கேட்டு அவன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுக் கேராரின் தாழ்ந்த பூமியில் வந்து கூடாரமிட்டிருந்து பெலிஸ்தர் தூர்த்துவிட்ட கிணறுகளைத் திரும்பவுந் தோண்டித் தன் பிதா அவைகளுக்கிட்ட நாமங்களையே இட்டான். (ஆதி. உசு. கஅ.

சுரு. பிறகவன் ரேகோபோத்தென்னுங்கிணற்றூரைச் சேர்ந்து சிலகாலம்வசித்து அதையும் விட்டு பேர்ஷேபாவுக்குப் போனான். அங்கேயும் யெகோவா அவனுக்குத் தரிசனையாகி அவனை ஆசீர்வதித்தார். அவனும் யெகோவாவுக்கு ஒரு வேதிகையை உண்டாக்கி யெகோவாவைப் பிரார்த்தித்தான்.

௬௬. அப்படியிருக்கையில் அபிமேலேகு இவன் அண்டை வந்து நீ யெகோவாவினுல் ஆசீர்வதிக்கப்பட்டவன். நாங்கள் உனக்கு யாதொரு தீங்கு செய்யாமல் அனுப்பிவிட்டது போல் நீயும் எங்களுக்கு யாதொரு தீங்கு செய்யேனென்று ஒரு உடன்படிக்கை பண்ணு என்று கேட்க, ஈசாக்கும் அந்தப்பிரகாரம் உடன்பிடிக்கைபண்ணினுன். அபிமேலேக்கும் உடன்பிடிக்கைபண்ணிச் சமாதானத்துடனே புறப்பட்டான். (ஆதி. உசு. ௩௧.

௬௭. ஈசாக்குடைய மூத்த குமாரனுகிய ஏசா நாற்பதுவயசாயிருக்கையில் ஏத்தியனுன பெயேரின் குமாரத்தியாகிய யுத்தீத்தையும், ஏத்தியனுன ஏலோனுடைய குமாரத்தியாகிய பஸ்மாத்தையும் விவாகம்பண்ணினுன். அதினிமித்தம் ஈசாக்கும் ரிபெக்காளும் ஏசாவில் வெறுப்புள்ளவர்களானுர்கள். அதினுல் அவன் முப்பதுவருஷத்தின்பின் இஷ்மவேலின் புத்திரியும் நேபாயோத்தின் சகோதரியுமான மகலாத்தையும் விவாகஞ்செய்தான். (ஆதி. உஅ. ௯.

௬௮. ஈசாக்கு விருத்தனுகிக் கண்ணெளிமழுங்கிப்புலன்கள் குன்றிமரணத்துக்குக்கிட்டியிருக்கையில் தன் மூத்தகுமாரனுகிய ஏசாவை அழைத்து நீ வெளியே போய் வேட்டையாடி எனக்குப் பிரியமான சுவையுள்ள போசனத்தைச் சமைத்துத்தா. நான் புசித்துத் திருத்தியாகி மனதார உன்னை ஆசீர்வதிப்பேனென்றுன்.

(ஆதி. உஎ. ௪.

௬௯. இதைக் கேட்டிருந்த ரிபெக்காள் ஏசாவின் வஸ்திரங்களை எடுத்து யாக்கோபுக்குடுத்தி வெள்ளாட்டுத்தோலை அவன் கழுத்திலுங் கைகளிலும் இட்டுத் தான்சமைத்த வெள்ளாட்டிறைச்சியையுங் கொடுத்தனுப்ப, யாக்கோபு கொண்டுபோய், பிதாவே நான்தான் உமது மூத்த மகன். உம்முடைய ஆத்துமா என்னை ஆசீர்வதிக்கும்படி நான் வேட்டையாடிக்கொண்டுவந்ததைப் புசியுமென்றான். (ஆதி. ௨௭. ௧௯.

௭0. ஈசாக்கு அதைக் கேட்டு, மகனே, உனக்கித்தனை தீவிரமாய் இது எங்கே அகப்பட்டது என்க, யாக்கோபு உமதுதேவனாகிய யெகோவா எனக்கிதை வாய்க்கப்பண்ணினாரென்றான். ஈசாக்கு நான் உன்னைத் தடவிப்பார்க்கும்படி கிட்டவாவென்று அழைத்துத் தடவிப்பார்த்து, குரல் யாக்கோபுடையது, கைகளோ ஏசாவினுடையவைகளென்று சொல்லியும் சந்தேகம் நிவாரணமாகும்படி, மகனே நிசமாய் நீ ஏசாவு தானோவென்றான். இவன் ஆம் பிதாவே என்றான். (ஆதி. ௨௭. ௨௪.

௭௧. உடனே ஈசாக்கு, நீ வேட்டையாடிக் கொண்டுவந்ததை நான் புசித்து உன்னை ஆசீர்வதிக்கும்படி அதைக் கொண்டுவாவென்று வாங்கிப் புசித்தபின், நீ கிட்டவந்து என்னை முத்தஞ்செய்யென்று முத்தஞ்செய்வித்தபின் யாக்கோபின் வஸ்திரத்தை மோந்து என் புத்திரனுடைய வாசனை யெகோவாவினால் ஆசீர்வதிக்கப்பட்ட வயலுக்கு ஒப்பாயிருக்கின்றது என்றான். (ஆதி. ௨௭. ௨௭.

எஉ. பின்பு ஈசாக்கு மகனே தேவன் செழித்த பூமியையும் தானியப்பெருக்கத்தையும் திராட்ச இரசத்தையும் உனக்கருளிச்செய்வாராக. நானுசாதிகளும் உன்னை வணங்கவும் உன்னைச் சேவிக்கவுங்கடவர்கள். நீ உன் சகோதரருக்குத் தலைவனுயிருப்பாய். உன் சகோதரர் உன்னை வணங்கக்கடவர்கள். உன்னைச் சபிக்கிறவன் சபிக்கப்படக்கடவன். உன்னை ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்படக்கடவனென்றுன். இப்படியே ஏசாவு முதற்பிறப்புச்சுதந்தரத்தை விற்றபலன், சச. வருஷத்துக்குப்பின் யாக்கோபுக்கு வாய்த்தது.

(ஆதி. உஎ. உகூ.

எஙு. இப்படியே யாக்கோபு ஆசீர்வாதம்பெற்றுக்கொண்டு ஈசாக்கை விட்டுப் புறப்பட்டவுடனே ஏசாவு வேட்டையாடி அதைச் சமைத்துத் தன் பிதாவிடத்துக்குக் கொண்டுவந்து, பிதாவே, நான் வேட்டையாடிக் கொண்டுவந்ததைப் புசித்து என்னை ஆசீர்வதியும். நானே உமது மூத்தமகன் என்றுன். ஈசாக்கோ மனம் பதைத்து, மகனே நீ வரமுன்னே நான்புசித்து ஆசீர்வதித்தேனே, அவன் யாவன்? அவனே ஆசீர்வதிக்கப்பட்டவனென்றுன். (ஆதி. உஎ. ஙுஙு.

எச. உடனே ஏசாவு உரத்த சத்தத்தோடே அலறி, என்பிதாவே, என்னையும் ஆசீர்வதியும், யாக்கோபு முன்னே என் சேஷ்டபுத்திர அதிகாரத்தை அபகரித்தான். இப்பொழுதும் எனக்குரிய ஆசீர்வாதத்தையும் அபகரித்து வென்றுனே. யாக்கோபென்னும் நாமம் இவனுக்

கே தரும். ஆயினும் பிதாவே, என்னையும் ஆ
சீர்வதியுமென்றான். (ஆதி. உஎ. ௩௬.
எடு. அதற்கு ஈசாக்கு, நான் அவனை உனக்
குத் தலைவனாக வைத்தேன். அவன் சகோதர
ர் எல்லாரும் அவனுக்குச் சேவைசெய்ய நிய
மித்தேன். தானியமுந் திராட்சரசமும் அவனு
க்குரியதாக்கினேன் என்றான். அதற்கு ஏசா
வு, பிதாவே, இந்த ஒரே ஆசீர்வாதம் மாத்திர
மோ உள்ளது, என்னையும் ஆசீர்வதியுமென்று
சொல்லி அலறி அழுதான்.* அதைக்கேட்டு ஈ
சாக்கு மகனே, உன் வாசஸ்தானம்செழித்த பூ
மியோடும் வானத்தின் பனியோடும் இருக்கும்.
நீ உன் கத்தியைக்கொண்டு சீவிப்பாய். நீ மே
ற்கொள்ளுங்காலத்தில் உன் கழுத்திலிருக்கும்
நுகத்தை முறிப்பாயென்றான். (ஆதி. உஎ. ௩எ.
எகூ. இவனோ தன் பிதாவின் மரணத்தின்
பின் யாக்கோபைக் கொலைசெய்ய எண்ணியி
ருந்தான். அதை ரிபெக்காள் அறிந்து யாக்
கோபை அழைத்து, என் மகனே, உன் சகோதரன்
உன்னைக் கொல்லமுன் என் சகோதரனாகிய லா
பான் அண்டைபோய் உன் சகோதரனுடைய
கோபம் தணியுமட்டும் அவனிடத்திலேதங்கியி
ரு. பின்பு நான் உன்னை வரஅழைப்பேன் என்
றாள். பிதாவும் அவனை அழைத்து நீ புறப்பட்டு
உன் மாதாவின்பிதாவாகியபெத்துவேல்வீட்டிற்
சேர்ந்து உன்மாமனாகிய லாபானுடையகுமாரத்
திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணிக்கொள்.
யெகோவா ஆபிரகாமுக்கு அருளிய ஆசீர்வாதத்

* எபிரே. கஉ. கசு, கஎ.

தை உனக்கும் உன் சந்ததிக்கும் அருளிச்செய்வா ரென்று சொல்லி அனுப்பிவிட்டான். அப்பொ ழுது யாக்கோபுக்கு வயசு, எசு. (ஆதி. உஅ. ரு.

எள. அவன் போகிற வழியிலே பொழுது அஸ்தமித்தபடியால் வூஸிலே தங்கி ஓர்கல்லை த் தலைக்கணையாக வைத்து உறங்குகையில் வா னபரியந்தம் உயர்ந்த ஓர் ஏணியிலே தேவதூத ர்கள் ஏறுகிறதும் இறங்குகிறதுமாயிருக்கவும்,* அதன் மேற்றலையில் யெகோவா நின்று, நான் ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், தேவன். நீ உறங்கும் பூமியை உனக்கும் உன் சந்ததிக்கும் அளிப்பேன். உன் சந்ததி பூதூளிபோற் பெரு கும். அதுபூமியின் நாற்றிசையிலும் பரம்பியிரு க்கும். உன் வமிசவழியாய்ப் பூமியின் கோத்தி ரங்கள் யாவும் ஆசீர்வதிக்கப்படும். நான் உன் னோடேகூட இருந்து உன்னை இத்தேசத்துக்கு த் திரும்பிவரப்பண்ணுவேனென்று சொல்லுகி றதாகவுந் தரிசனை அடைந்தான். (ஆதி. உஅ. கரு.

எஅ. யாக்கோபு விழித்தெழுந்து யெகோவா இந்த ஸ்தலத்திலே வாசமாயிருக்கிறார். இது வே தேவாலயம். இதுவே வானத்தின் வாச லென்று சொல்லித் தன் தலையணைக்கல்லை எடு த்து நிறுத்தி அதற்கு அபிஷேகஞ்செய்து அந் த ஸ்தலத்துக்குத் தேவஸ்தலமென்கிற கருத்தா ய்ப் பெத்தேலென்று பேரிட்டு, என்னை யெ கோவா என் நெறிகளிலே காப்பாற்றி நான் எ ன் பிதாவின் வீட்டுக்குச் சமாதானத்தோடே தி ரும்பிவரச் செய்யும்பொழுது எனக்குள்ள யா

* எபிரே. க. கச.

வற்றிலும் பத்திலொன்றை யெகோவாவுக்கு ஒப்புவிப்பேனென்று சங்கற்பமுஞ் செய்தான். (ஆதி. ௨௮. ௨௨.

௭௯. பின்பு யாக்கோபு எழுந்து துரிதமாய் நடந்து காரானுக்கு அயலூரிலுள்ள ஓர்கிணற்றருகே சென்று அங்கே வந்த இடையர்களிடத்தில் லாபானை அறிவீர்களாவென்று வினவ அவர்கள் அவனை அறிவோமென்றும் அவனுடைய குமாரத்தியாகிய ராகேல் கண்ணெதிரே வருகிறாளென்றுஞ் சொன்னார்கள்.

௮௦. உடனே யாக்கோபு எழுந்து ராகேலுடைய மந்தைக்குத் தண்ணீர் மொண்டுவார்த்துத்தன் வரவை அவளுக்கறிவிக்க,அவள் அதைத் தன் பிதாவுக்கு அறிவித்தாள். அவனுஞ் சந்தோஷத்துடனே அவனை அழைத்துத் தன் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சிலநாளின் பின்பு யாக்கோபு தனக்கு ஏழுவருஷம் மந்தை விசாரணைக்காரனாயிருக்கவும் தான் தன் இளைய மகளாகிய ராகேலை யாக்கோபுக்கு விவாகஞ்செய்துகொடுக்கவும்உடன்படிக்கைபண்ணினான். அந்தப்பிரகாரம் யாக்கோபும் ஏழுவருஷம் லாபானுடைய ஆட்டுமந்தையைப் பரிபாலித்து வந்தான். (ஆதி. ௨௯. ௧௫.

௮௧. அதன் பின் லாபான் ஒருநாள் தன் வெந்துக்களையும் அழைத்து விருந்துசெய்து தன் மூத்தமகளாகிய லேயாளை யாக்கோபுக்கு விவாகம்பண்ணிக் கொடுத்து அவளுக்குச் சில்பாளையும் அடிமையாகக் கொடுத்தான். மறுநாள் யாக்கோபு அவள் லேயாளென்று கண்டு லாபா

ளை நோக்கி நீர் என்னை ஏன் வஞ்சித்தீர்? இரா கேலினிமித்தமல்லவோ நானுமக்கு ஏழுவருஷ ந் தொண்டுசெய்தேன் என்றான்.

(ஆதி. ௨௯. ௨௪.

௮௨. அதற்கு லாபான் மூத்தவளிருக்க இளை யவளுக்கு விவாகஞ்செய்வது எங்கள் தேசவ ழக்கமல்ல. இன்னும் நீ ஏழுவருஷம் எனக்குச் சேவைசெய்வாயானால் லேயாளுடைய் விவா க சிறப்புக்குரிய ஏழுநாளும் முடிய நான் உ னக்கு ராகேலையும் மணம்முடித்துத் தருவேன் என்றான். அதற்கு அவனுஞ் சம்மதித்தான்.

(ஆதி. ௨௯. ௨௭.

௮௩. ஒருவாரஞ் சென்றபின் ராகேலையும் ம ணம் முடித்துக்கொடுத்து ராகேலுக்குப் பணி விடைக்காரியாகப் பில்க்காளையுங் கொடுத்தான். இப்படியே யாக்கோபு இவ்விரு ஸ்திரிகளுக்கு ம் குடும்பபதியாயிருக்கையில் யாக்கோபு ராகே லை நேசித்து லேயாளை வெறுத்து வந்ததினால் யெகோவா லேயாளுக்கிரங்கினார். லேயாள் ரூபேன், ஷிமியோன், லேவி, யூதா என்னும் நான்கு புத்திரரைப் பெற்றாள். (ஆதி. ௨௯. ௩௫.

௮௪. அதினாலே ராகேல் பொறாமைகொண் டு தன் பணிவிடைக்காரியாகிய பில்க்காளை யா க்கோபுக்குக் கையளித்தாள். அவளும் தாண் நப்தாலியென்னும் இரண்டு புத்திரரைப் பெற் றாள். அப்பொழுது லேயாளுந் தன் பணிவி டைக்காரியாகிய சில்ப்பாளை யாக்கோபுக்குக் கையளிக்க, அவளும் காத்து ஆஷேர் என்னும்

இரண்டு புத்திரரைப் பெற்ருள். அதன் பின் லேயாள் ஈஷகாரையும், செபுலோனையும் தினை ள் என்ற புத்திரியையும் பெற்ருள்.

(ஆதி. ௩0. ௨௧.

அரு. ராகேலும் கருப்பவதியாகி யோசேப் பைப் பெற்ருள். இப்படியே யாக்கோபு கா ரானிலே பதினெருபுத்திரரையும் ஒரு புத்திரி யையும் பெற்று இருக்கையில் இவன் தானுந் தன் குடும்பமும் தன் சென்மதேசத்துக்குப் போகும்படி லாபானிடத்தில் உத்தரவுகேட்க லாபான் யெகோவா உன்னுடனே இருந்து எ ன்னையும் ஆசீர்வதித்தார். ஆகையால் நீ விரு ம்புகிற சம்பளம் உனக்குத் தருவேன். நீ இ ன்னுஞ் சிலகாலம் என்னுடனே இரு என்ரு ன்.

(ஆதி. ௩0 ௨அ.

அகூ. அதற்கு யாக்கோபு நான் உமது ஆட் டுக்கூட்டத்தை மேய்ப்பேன். அவைகளுக்கு ள் இனிமேல் புள்ளியும், வரியும், பொதுநிறமு ம், மங்கல்வெண்மையும், கருமையுமுள்ளதா ய் ஈனும் ஒவ்வொரு குட்டியையும் எனக்குக் கொடுமென்ருன். அதற்கு லாபான் சம்மதித் து ஆடுகள் யாவற்றையும் பிரித்துக் குறித்தநிறங் களுள்ள ஆடுகளைத் தனது புத்திரர் வசத்திலும் அந்நிறமற்றவைகளை யாக்கோபு வசத்திலும் ஒ ப்பித்து மூன்றுநாட் பிரயாண தூரத்துக்கப்பா ல் விட்டுவைத்தான்.

(ஆதி. ௩0. ௩௬.

அஎ. அதன்பின்பு யாக்கோபு பரிபாலித்த ம ந்தைகளில் அதிக பங்கானவைகள் பொதுநிற

மும், புள்ளியும், வரியும், மங்கல்வெண்மையும் கருமையுமுள்ள குட்டிகளை ஈன்றன. ஆறு வருஷத்துக்குள் அவன் அநேக ஆடுகளையும் பணிவிடைக்காரரையும் பணிவிடைக்காரிகளையும் உடையவனானன். (ஆதி. ௩0. ௪௩.

அ௮ இப்படியே யாக்கோபு திரவிய சம்பன்னனாய் இருக்கிறதை லாபானும் அவனுடைய புத்திரருங் கண்டு பொறாமைகொண்டதை யாக்கோபு அறிந்து தேவ உத்தரப்படி இராகேலையும் லேயாளையும்அழைப்பித்து அவர்களுடனே யெகோவா என்னை எனக்குண்டான யாவற்றோடும் என் சென்மதேசத்துக்குப் போகும்படி கற்பித்தார். நாம் போவோம், புறப்படுங்களென்று சொல்லி அவர்களையும், தன் சம்பாத்தியங்களையும், மக்களையும் சேர்த்துக்கொண்டு லாபானுக்கறிவியாமல் ஒளித்துப் புறப்பட்டுக் கிலியாத் மலைக்கு நேரே போனான்.

(ஆதி. ௩௧. ௨௧.

அகூ. இந்தக் காரியத்தை யாக்கோபு போன மூன்றாம் நாளில் லாபான் அறிந்து தன் சகோதரரையுங் கூட்டிக்கொண்டு தொடர்ந்துபோய் ஏழாம்நாளிலே கிலியாத்திலே கூடாரமிட்டான். யாக்கோபும் அதிலே தான் தங்கினான். அப்போது யெகோவா லாபானுக்குத் தரிசனையாகி நீ யாக்கோபுக்கு யாதொரு தீங்குஞ்செய்யாதிரு என்று எச்சரித்தார். லாபானும் யாக்கோபைச்சந்தித்து நீஎன்னைவஞ்சித்துஎன்குமாரத்திகளையுங் கொண்டுவந்ததென்ன? நான் என் புத்திர புத்திரிகளை முத்தஞ்செய்து சந்தோஷத்

துடன் அனுப்பிவிடுவேனே. உனது தேவன் என்னை எச்சரியாதிருந்தால் உன்னைத் தண்டிப் பேனென்றான்.

௧௦. அதற்கு யாக்கோபு நீர் என்மேல் உக்கிரகோபங்கொள்ள நான் உமக்குச் செய்த குறையென்ன? நான் உமது குமாரத்திகளுக்காகப்பதினான்கு வருஷம் சேவித்தேன். ஆறுவருஷம் உமது மந்தைகளுக்காகச்சேவித்தேன். பகலின் வெய்யிலும் இரவின் பனியும்என்னைப்பட்சித்தன. நித்திரை என்கண்களுக்குத் தூரமாயிற்று. நீரோ என் சம்பளத்தைப் பத்துமுறை மாற்றினீர். என் தேவன் என்பட்சத்தில் இருந்து உம்மை எச்சரியாவிட்டால் நீர் என்னை இப்பொழுது வெறுமையாகவே அனுப்பிவிடுவீரென்றான். (ஆதி. ௩௧. ௪௧.

௧௧. அதற்கு லாபான் இந்தக்குமாரத்திகள் என்னுடையவர்கள், இவர்கள் மக்களும் என்னுடையவர்கள். இந்தப்பொருள்களும் என்னுடையவைகள். நான் உனக்கு யாதொருதீங்குஞ்செய்யக்கூடாது, நானும்நீயும் சமாதான உடம்படிக்கை பண்ணிக்கொள்வோமென்றான். (ஆதி. ௩௧. ௪௪.

௧௨. யாக்கோபும் அதற்குச் சம்மதித்து ஓர் கற்றூணை நிறுத்திக் கற்களினால் ஒரு மேடையை உண்டாக்கி அதற்கு * கலேயேத்தென்று பெயரிட்டான். லாபான் அதற்கு † மிஸ்பாவென்றுபெயரிட்டான். பின்பு இருகட்சியாரும் ஏகபந்தியிற் போசனம்பண்ணி அங்கே அன்

* கலேயேத், சாட்சிக்குவியல். † மிஸ்பா, கா

றிரவு தங்கி மறுநாட்காலமே எழுந்து, லாபான் தன் புத்திரபௌத்திரர்களை முத்தமிட்டு அவர்களைஆசீர்வதித்துத் தன்தேசத்துக்குத் திரும்பினான். (ஆதி. ௩க. ருரு.

௩௩. யாக்கோபு தன் தேசத்துக்குப் புறப்படுகையில் தன்னைச் சூழத் தேவதூதர்கள் சேனை நிற்கிறதைக் கண்டு அந்த இடத்துக்கு மக்னாயிமென்று பெயரிட்டுத் தன் தூதர்களை அழைத்து நீங்கள் என் தமையனாகிய ஏசா இருக்கிற சேயீருக்குப் போய் அவரைச் சந்தித்து நான் இதுவரைக்கும் லாபானிடத்திற் தங்கியிருந்து மனை மக்கள், கன்று காலி, அடியார் கூட்டத்தோடே வருகிறேன். உம்முடையதயைமாத்திரம் பெற்றுக்கொள்ள விரும்புகிறேனென்று சொல்லுங்களென்று கட்டளையிட்டனுப்பினான். (ஆதி. ௩உ. ரு.

௩௪. அவர்கள் போய் ஏசாவைக் கண்டு யாக்கோபு கற்பித்தபடிசொல்லித், திரும்பி யாக்கோபண்டைவந்து நாம் ஏசாவைக் கண்டு உமது வந்தனத்தைச் சொன்னோம். அவர் நானூறு சனங்களுடனே உம்மை எதிர்கொள்ள வருகிறாரென்றார்கள். அதைக் கேட்டு யாக்கோபு மிகவும்பயந்து என்பிதாக்கள் வழிபட்ட யெகோவாவே, என் சகோதரன் என் மனைமக்களையும், என் பரிவாரங்களையுஞ், சங்கரியாதபடிக்குக் காத்துக்கொள்ளுமென்று விண்ணப்பஞ்செய்து தன் சனங்களையும் தனது ஆடுமாடு முதலியவைகளையும் இரண்டாகப்பிரித்து வைத்துக்கொண்டு பலவெகுமதிகளை ஏசாவுக்கு அனுப்பித் தன்

மனைவிகளையும், பணிவிடைக்காரிகளையும், தன்மக்களையும், தனக்குள்ளவைகளையுஞ் சேர்த்து யாப்போக் ஆற்றுக்கப்பால் அனுப்பித் தான் தனியே தங்கினான். (ஆதி. ௩உ. கச. உச.

கூரு. அப்பொழுது யாக்கோபை ஒருவர் சந்தித்து அவனோடே மல்லாடி அவனுடைய இடுப்புச் சந்தைத் தட்டினதினாலே அவனுடைய இடுப்பின்சந்து சுழுக்கினாலும் அவன் நீர் என்னை ஆசீர்வதித்தாலன்றி உம்மை விடேனென்று விடாப்பற்றாய் நின்றபடியால் அவர் இவனுக்கு இஸ்ரவேல் என்ற நாமத்தைச் சூட்டி ஆசீர்வதித்தார். அதினாலே அவன் அந்த இடத்துக்குப் *பெனியேலென்று பெயரிட்டான். (ஆதி. ௩உ. ௩0.

கூசு. இப்படியே இவன் தேவ ஆசீர்வாதம் பெற்றுப் புறப்பட்டுப்போகையில் ஏசாவுஞ் சனங்களும் வந்தார்கள். அதை யாக்கோபு கண்டு தன் பிள்ளைகளை மாதாமார் நால்வரிடத்திலும் வெவ்வேறாய்ப் பிரித்துவைத்து அவர்களுக்கு முன்னே தான் நடந்துபோய் ஏசாவைக் கண்டு பூமிக்கு நேரே ஏழுதரந் தாழ்ந்து வணங்கினான். ஏசாவோ சமீபமாக வந்து யாக்கோபை முத்தஞ்செய்தான். அதன்பின் யாக்கோபுக்குப் பின்போனவர்களும்போய் அவனை வணங்கினார்கள். இப்படி அவ்விருவருஞ் சமாதானப்பட்டபின் ஏசாவு சேயீருக்குப் போனான். யாக்கோபு தொண்ணூற்றேழாம் வயதிலே சுக்கோத்தைச்சேர்ந்து குடியேறினான். இப்பொழுதே

* பெனியேல், தேவசமுகம். ஓசி. கஉ. ௩. ச.

ஏசாவு ஈசாக்கிடத்திற்பெற்ற ஆசீர்வாதம் சித்தியாயிற்று. இதற்கிடையிலே சென்றவருஷம், உக. (ஆதி. ௩௩. கஎ.

---

## ௩. அதிகாரம்.

(உம். பிரிவு.)

க. பின்பு யாக்கோபு ஷிகேமினுடைய பட்டணத்துக்கருகேபோய் ஒரு கூடாரமிட்டுத் தங்கி ஒரு வேதிகையை உண்டாக்கி அதற்கு இஸ்ரவேலின் தேவனே தேவன் என்கிற கருத்தாய், எல்எலோகே இஸ்ரவேல் என்று பேரிட்டான். (ஆதி. ௩௩. உ0.

உ. இவன் அங்கே வாசம்பண்ணுகையில் அத்தேசத்து அதிபதியின் புத்திரனாகிய ஷிகேம், லேயாளின் புத்திரியாகிய் தீனாளை இச்சித்து அவளைத் தனக்கு மனைவியாகக்கொள்ளும்படி கேட்கத், தன் பிதாக் காமோரை ஏவினான். காமோர்யாக்கோபிடத்தில் வந்து நாங்களும் நீங்களும் பெண்கொண்டு கொடுத்துச் சம்பந்தமாயிருப்போமென்று கேட்டான். (ஆதி. ௩௪. கூ.

௩. அதைக்கேட்ட யாக்கோபின் புத்திரர் நீங்கள் விருத்தசேதனம் அடைந்தால் நாங்கள் உங்களுடனேசம்பந்தம்பண்ணிச் சமாதானமாயிருப்போமென்றார்கள். அதைக் கேட்டு, காமோரும், ஷிகேமும், அவர்கள் பட்டினத்தார் யாவரும் விருத்தசேதனமடைந்து வருத்தமாயிருக்கையில் தீனாளின் சகோதரராகிய ஷிமியோனும், லேவியும் பட்டாக்களை எடுத்துக்கொண்

டு துணிகரமாய் அந்தப் பட்டணத்துக்குட் புகுந்து காமோரையும், ஷிகேமையும், அந்தப்பட்டணத்தாரையுஞ் சங்காரம்பண்ணித் தீனாளையும் அழைத்துக்கொண்டு அவர்கள் தேசத்தையுங் கொள்ளையிட்டு அவர்கள் ஸ்திரிகளையுங் குழந்தைகளையுஞ் சிறைப்படுத்திக்கொண்டு போனார்கள். (ஆதி. ௩௪. ௨௯.

௪. அதைக்கண்டு யாக்கோபு பயந்து தேவஉத்தரப்படி பெத்தேலுக்குப் போகப் புறப்படுகையில் தன் குடும்பத்தாரும் பரிவாரங்களும் வைத்திருந்த விக்கிரகங்களையும் அவைகளுக்கதிகுறியான பணிகளையும் அகற்றிப் பெத்தேலைச்சேர்ந்து அங்கேயொரு வேதிகையை உண்டாக்கி அதற்கு *எல்பெத்தேலென்று பேரிட்டான். (ஆதி. ௩௫. ௭.

௫. அங்கேயும் யெகோவா அவனுக்குத் தரிசனையாகி நீ பலசாதியாருக்குக் கோத்திரப் பிதா ஆவாயென்றும், அனேக இராசாக்கள் உன் வழியாய்ப் பிறப்பார்களென்றும், நான் இத்தேசத்தை உனக்கும் உன் சந்ததிக்குங் கொடுப்பேன் என்றும் வாக்குப்பண்ணினார். அவனும் அவ்விடத்தில் ஒரு கற்றூணை நிறுத்தி அபிஷேகஞ்செய்தான். பின்பு யாக்கோபு பெத்தேலைவிட்டு எப்ரூத்தாவுக்குப்போகப் புறப்பட்டு வழிநடக்கையில் ராகேல் பிரசவவேதனைப்பட்டுப் பேன்யாமீனைப் பெற்று மரித்தாள். (ஆதி. ௩௫. ௧௮.

௬. மூன்றுவருஷத்துக்குப்பின்பு யாக்கோபு

* எல்பேத்தேல், தேவாலயததின்தேவன்.

நூற்றிருபது வயதுள்ளவனுய் மம்ரேயில் சேர்ந்திருக்க, நூற்றெண்பது வயதாயிருந்த ஈசாக்கு மரித்தான். அப்பொழுது யாக்கோபுந் தமையனுமாகப் பிதாவை அடக்கம்பண்ணினுர்கள். ஏசாவுக்கு ஆதாளிடத்தில் எலிப்பாசும், பஸ்மாத்திடத்தில் ரேகுவேலும், அகோலிபாமாளிடத்தில் எயூஷும், யாலாமும், கோராகும், பிறந்ததினுலும், இவர்களுக்கு ஆடுமாடுகள் முதலிய சம்பத்துக்கள் மிகுதியாயிருந்ததினுலும், ஏசாவு யாக்கோபை விட்டுப் பிரிந்து சேயீர்மலையிலே போய்க் குடியிருந்தான். (ஆதி. ௩௬. கச.

எ. யாக்கோபு எபிரோனிலுள்ள மம்ரேயிலே வாசமாயிருக்கையில் அவனுடைய புத்திரனுகிய யோசேப்பு, கஎ. வயசுள்ளவனுய்த் தன்சகோதரருடனே ஆடுகளை மேய்த்து வருகையில் அங்கே தன் சகோதரர் செய்த குற்றங்களைத் தன் பிதாவுக்கு அறிவிக்கிறதினுலும், பிதா இவனைத் தன் வயோதிபத்திலே பிறந்த புத்திரனென்று அதிகம் நேசித்ததினுலும் அவனுடைய சகோதரர் அவனைப் பகைத்தார்கள். (ஆதி. ௩எ. ச.

அ. அப்படியிருக்கையில் யோசேப்புத் தாங்கள் வயலில் அரிகளைக் கட்டிக்கொண்டிருக்க, தன்னுடைய அரிக்கட்டு நிமிர்ந்து நிற்கவும் தன் சகோதரருடைய அரிக்கட்டுகள் அதைச்சுற்றித் தாழ்ந்து வணங்கவும் சொப்பனங் கண்டு அதைத்தன்சகோதரருக்கு அறிவித்தான். அதினுலும் அவர்கள் அவனைப் பகைத்தார்கள். (ஆதி. ௩எ. சு.

கூ. மேலும் அவன் சந்திரனுஞ் சூரியனும் ப

திஞெரு நட்சத்திரங்களுந் தன்னை வணங்கின தாக ஒரு சொப்பனங்கண்டு அதையுந் தன் பிதாவுக்குஞ் சகோதரருக்கும் அறிவித்தான். அதற்குப் பிதா நானும் உன் மாதாவும் உன் சகோதரரும் உன்னை வணங்க வருவோமாவென்று கடிந்துகொண்டான். சகோதரரும் அவனை முன்னையிலும் மும்மடங்கு வெறுத்தார்கள்.

(ஆதி. ௩எ. கக.

கo. பின்பு ஒருநாள் அவனுடைய பிதா அவனை அழைத்து உன் சகோதரர் ஷிகேமிலே ஆடு மேய்க்கிருர்கள், அங்கே நீபோய் அவர்களுடைய சுகசெய்தியையும் ஆடுகளின் செழிப்பையும் பார்த்துவந்து எனக்கு அறிவியென்று சொல்ல, அவன் போய்ச் சகோதரரையும் ஆடுகளையும் அங்கே காணுமல் தோத்தானுக்குப் போஞன்.

(ஆதி. ௩எ. கஎ.

கக. அவன் தூரத்திலே வருகிறதை அவர்கள் கண்டு, சொப்பனகாரன் வருகிருன். நாம் அவனைக் கொன்று பாழ்ங்குழியிலிட்டு அவனைத் துட்டமிருகங் கொன்றதென்று சொல்வோமென்று பாதுக் கட்டுப்பண்ணினதை ரூபேன் அறிந்து நீங்கள் அவனுடைய இரத்தத்தைச் சிந்தினதிஞல் என்ன பலன்? அவனைக் கொல்லாமல் வனத்தின் பாழ்ங்குழியிலே போடுங்களென்ருன்.   (ஆதி. ௩எ. உஉ.

கஉ. அவர்களும் அதற்கிணங்கி யோசேப்பைப் பிடித்து அவனுடைய வஸ்திரத்தைக் கழற்றிக்கொண்டு அவனை ஒரு வெறுங் கூவலில் விழுத்திஞர்கள். பின்பு யூதா எகிப்துக்குப் போ

கிற இஷ்மவேலரைக் கண்டு தன் சகோதரருட னே நாம் நம்முடைய சகோதரனைக் கொல்வதி னால் என்னபலன்? அவனை இவர்களுக்கு வி ற்போமென்று சம்மதப்படுத்தி அவனை இருபது வெள்ளிக்காசுக்கு விற்றார்கள். அவர்கள் அவ னை எகிப்துக்குக்கொண்டுபோய்ப் பார்வோனு டைய மெய்காப்பாளருக்குத் தலைவனான போ த்திப்பாருக்கு விற்றார்கள்.* (ஆதி. ருஎ. உஅ.

கரு. ரூபேன் திரும்ப அந்தக் குழியிடத்திற் போய் அதிலே யோசேப்பைக் காணாமல் துக் கித்துப் புலம்பினான். மற்றச் சகோதரரோ அவ னுடைய அங்கியை எடுத்து ஆட்டிரத்தத்திலே தோய்த்து யாக்கோபுக்கு அனுப்ப, யாக்கோபு அது யோசேப்பின் வஸ்திரமென்றுகண்டதினா ல் அவனைத் துட்டமிருகங் கொன்றதாயிருக்கு மென்று நினைத்துத் துக்கித்துப் புலம்பிக்கொ ண்டிருந்தான். (ஆதி. ருஎ. ருச.

கச. யெகோவா அவன் செயல்களை வாய்க் கப்பண்ணுகிறாரென்று யோசேப்பை விலைக்கு வாங்கின போத்திப்பார் அறிந்து அவனைத் தன் குடும்பத்துக்கு அதிகாரியாக்கித் தனக்குண்டா ன சம்பத்துக்கள் முற்றையும் அவன் வசத்தில் ஒப்பித்தான். அவனிமித்தம் யெகோவாவுடை ய ஆசீர்வாதம் போத்திப்பாருடைய திரவியங்க ள் சகலத்திலுந் தங்கியிருந்தது. (ஆதி. ருக. ரு.

கரு. அப்படியிருக்கையிற் போத்திப்பாரு டைய மனைவி யோசேப்பின்மேல் வைத்த இச் சைக்கு அவனிணங்காததினிமித்தம் அவள் அ

* அப்போ. எ. கூ.

வன்மேற் பொய்யாய் ஒரு குற்றத்தைச் சார்த்தி னதினால் அதை நம்பின போத்திப்பார் கோபங் கொண்டு அவனைப் பார்வோனுடைய சிறைச் சாலையில் வைப்பித்தான். அந்த இடத்திலும் யெகோவா அவன்மேற் கடாட்சம்வைத்ததினா ற் சிறைச்சாலைத்தலைவனும் இவனைச் சிறைப் பட்ட யாவருக்கும் விசாரணைகாரனாக்கினான்.

(ஆதி. ௩௯. ௨௨.

௧௬. இப்படியிருக்கையிற் பார்வோன் தன் பானதாரியும் சுயம்பாகிகளின் தலைவனுஞ் செய்த குற்றத்தினிமித்தம் அவ்விருவரையும் யோசேப்பிருந்த சிறைச்சாலையிற் சிறைப்படுத்தி னான். அவர்கள் சிறைப்பட்டிருக்கையில் பானதாரி ஒரு திராட்சக்கொடியில் மூன்று கிளைகளிருக்கவும் அவைகள் தளிர்த்திருக்கவும், அதிலே பூக்கள் மலர்ந்திருக்கவும், அதின் குலைகள் நன்றாய்ப் பழுத்திருக்கவும், தான் அதைப்பறித்துப் பாத்திரத்திற் பிழிந்து பார்வோனுடைய கையிற் கொடுக்கவும் சொப்பனங்கண்டான்.

(ஆதி. ௪௦. ௧௧.

௧௭. சுயம்பாகிகளின் தலைவன் தன் தலையின்மேல் மூன்று கூடைகளிருக்கவும், அதின் மேற்கூடையிலே தான் பார்வோனுக்குச் சமைத்த போசன பதார்த்தங்களிருக்கவும், அவைகளைப் பட்சிகளெடுத்துப் பட்சிக்கவுஞ் சொப்பனங்கண்டான். (ஆதி. ௪௦. ௧௭.

௧௮. இவ்விருவருந்தங்கள் சொப்பனங்களை யோசேப்புக்கு அறிவிக்க, யோசேப்பு, பானதாரி மூன்று தினத்தில் முந்தின உத்தியோகத்

தைப் பெறுவானென்றும், சுயம்பாகிகளின் த லைவன் மூன்றுதினத்திற் சங்காரப்படுவானென் றும் சொப்பனத்தின் தாற்பரியத்தைச் சொன் னான். (ஆதி. ௪0. ககூ.

ககூ. அதற்கு மூன்றும்நாள் பார்வோனுடைய சென்மநாளின் விருந்துகொண்டாடுகையில் அ வன் பானதாரியை முந்தின உத்தியோகத்தில் எற்படுத்திச் சுயம்பாகிகளின் தலைவனைக் கொ ல்லுவித்தான். இதற்கு இரண்டு வருஷத்திற்பி ன் பார்வோன் ராசா தான் நதியோரத்தில் நிற்க வும், செழிப்புள்ள எழு பசுக்கள் நதியில் நின் று எறி மைதானத்திலே புல்லைமேயவும், அவை களின்பின் கொழுப்பற்ற எழு பசுக்கள் நதியி னின்று எறிச் செழிப்புள்ள எழு பசுக்களையும் பட்சிக்கவும் ஒரு சொப்பனங் கண்டு விழித் தான். (ஆதி. ௪க. ௨0.

௨0. மறுபடியும் அவன் நித்திரையாயிருக்கை யிற் செழித்த எழுகதிர்கள் ஈனப்பட்டிருக்கவு ம், பின்பு கீழ்காற்றிலைலே தீய்ந்து சாவியான எழு கதிர்கள் ஈனப்படவும், சாவியான எழுக திர்களுஞ் செழிப்புள்ள எழு கதிர்களை விழுங் கவும், சொப்பனங் கண்டு இதன் தாற்பரியத் தை யோசேப்புச் சொல்லக்கூடுமென்று பா னதாரி சொல்லக் கேள்விப்பட்டு, யோசேப் பை அழைப்பித்துத்தன் சொப்பனத்தை அவனு க்கு வெளிப்படுத்த அவன் இராசாவே, உமது தேசம் எழுவருஷம் செழிப்பாய் விளையும், அத ன்பின் எழுவருஷம் விளைவில்லாமற் பஞ்சமு ண்டாகும். இதைத் தேவன் உமக்கு வெளிப்ப

டுத்திஞரென்ருன். (ஆதி. சக. ரு உ.
உக. இதைப் பார்வோன் கேட்டு யோசேப்பே, உன்னைப்போல விவேகமும் ஞானமுமுள்ள ஒருவன் ஓரிடத்திலுமில்லை. நீ என் வீட்டுக்கதிகாரியாய்இரு. என் சனங்களெல்லாரும் உனக்கமைந்திருப்பார்கள். என்னுடை ராசாசனமேயன்றி மற்றுள்ள முற்றிற்கும் நீயே அதிபனுவாய். நான் இந்த எகிப்துதேசம் முழுமைக்கும் உன்னை அதிகாரியாக்குவேனென்று சொல்லித், தன் முத்திரை மோதிரத்தை அவன் விரலுக்கிட்டு அவனுக்கு இராச வஸ்திரங்களையும் பொற்சரப்பணியையும் தரிப்பித்து, தன்னுடைய இரண்டாம்இரதத்தில் ஏற்றி* அவனுக்குச் சாபிநத்பானேயாசென்று† பேருமிட்டு, ஒன்என்ற நகரத்தின் ஆசாரியனுகிய பொத்திப்பேராவின் குமாரத்தியான ஆஸ்நாத்தை மனைவியாகவும் ஒப்பித்தான். அப்பொழுது அவனுக்கு முப்பது வயசு. இவ்னுக்கு எப்பிராயீமும் மனஷேயும் பிறந்தார்கள். (ஆதி. சக. சரு.
உஉ. இவன் செழிப்பான ஏழுவருஷத்திலும் விளைந்த தானியங்களிற் சேகரம்பண்ணி அந்தந்த நகரங்களிலே சேமித்துவைத்தான். ஏழுவருஷஞ்சென்றபின் சகல தேசங்களிலும் பஞ்சமுண்டானதிஞலே யோசேப்பு தன் தானியக்கிரகங்களைத் திறந்து சேமத்தானியங்களை எடுத்து விற்ருன்.‡ எகிப்தியர் எல்லாரும் முதல்

* அப்போஸ்தலர், எ. கO. † சாபிநத்பானேயாகு, அந்தரங்கதரிசி.
‡ அப்போஸ்தலர், எ. கக, கஉ.

தங்கள் கைப்பணங்களைக் கொடுத்துவாங்கினார்கள். அவைகள் இல்லாதபொழுது கன்றுகாலிகளையுங், குதிரை கழுதைமுதலிய வாகனங்களையுங் கொடுத்து வாங்கினார்கள். பின்பு நிலங்களைக்கொடுத்து வாங்கினார்கள். அதன்பின்பு தங்களை அடிமைகளாகக் கொடுத்து வாங்கினார்கள். இப்படியே எகிப்துநாட்டில் ஆசாரியருடைய மானிய நிலந் தவிர மற்றையாவும் பார்வோனைச் சார்ந்தன.

உங. யாக்கோபும் எகிப்திலே தானியம் உண்டென்றறிந்து தன்புத்திரரிற் பேன்யாமீனைத் தவிர மற்றைப்பிள்ளைகள் பத்துப்பேரையுந்தானியங் கொள்ளும்படி எகிப்துக்கு அனுப்பினான். இவர்கள் போய் யோசேப்பைக் கண்டு தாழ்ந்துவணங்க அவன் தன் சொப்பனத்தை நினைவுகூர்ந்து, தான் இவர்களை அறியாதவன்போல நீங்கள் எங்கேயிருந்து வந்தீர்கள்? நீங்கள் வேவுகாரர். இத்தேசத்தின் திறவுகளைப் பார்க்க வந்தீர்களென்றான். (ஆதி. சஉ. க.

உச. அதற்கவர்கள் உம்முடைய அடியாராகிய நாங்கள் பன்னிரண்டு சகோதரர். கானான் தேசத்திலிருக்கிற ஒருவனுடைய புத்திரர். இளையவன் பிதாவோடிருக்கிறான். ஒருவன் இல்லை. நாம் தானியங்கொள்ள வந்தோமென்க, யோசேப்பு, நீங்கள் வேவுகாரர் என்பதற்குச்சந்தேகமில்லை. உங்கள் இளைய சகோதரன் இங்கே வந்தாலொழிய நீங்கள் புறப்படுவதில்லையென்று பார்வோனுடைய தத்துவத்தைக்கொ

ண்டு சொல்லுகிறேன். உங்கள் சகோதரனை அழைத்துவரும்படி உங்களிலொருவனை அனுப்பி, மற்றவர்கள் சிறைச்சாலையில் இருங்கவென்று சொல்லி அவர்கள் யாவரையும் ஏகமாய்ச் சிறைச்சாலையில் வைப்பித்தான்.

(ஆதி. ௪௨. ௧௭.

௨௫. மூன்றும்நாளில் யோசேப்பு அவர்களை அழைப்பித்து நான் தேவனுக்குப் பயப்படுகிறேன். ஆகையால் உங்களிலொருவன் சிறைச்சாலையிலிருக்க ஒன்பதுபேரும்பஞ்சத்தால் வருந்துகிற உங்கள் குடும்பத்தாருக்குத் தானியங்களைக் கொண்டுபோய்க்கொடுத்து உங்கள்இளையசகோதரனையும் அழைத்துக்கொண்டு திரும்ப வந்து வியாபாரஞ்செய்யுங்களென்றான்.

(ஆதி. ௪௨. ௨௦.

௨௬. அதற்கவர்கள் உடன்பட்டு யோசேப்பை மறுபாஷைக்காரனென்று நினைத்து அவர்கள் எபிரேயபாஷையிலே, ஒருவரோடொருவர், ஐயோ! எங்கள் சகோதரனாகிய யோசேப்பு நம்மைக் கெஞ்சிக் கேட்டபொழுது நாம் அவனுக்கு இரங்காமற்போனோமே. அந்தப்பழியல்லவோ நம்மைச் சூழ்ந்துகொண்டதென்றார்கள்.

(ஆதி. ௪௨. ௨௨.

௨௭. அதை யோசேப்பு அறிந்து அவ்விடத்தைவிட்டுப்போய்த் துக்கித்துக்கண்ணீர்விட்டழுது திரும்பிவந்து ஷிமியோனைப் பிடித்துக் கட்டுவித்துவைத்துக்கொண்டு அவர்கள் கொண்டுவந்த பொதிகளிலே தானியத்தை நிரப்பி அவர்கள் கொடுத்த பணத்தையும் அவரவர் பொ

திகளிலே இடுவித்து அவர்களுக்கு வழியுணவையுங் கொடுப்பித்தான்.* (ஆதி. ௪௨. ௨௫.

௨௮. அவர்களோ அந்தப் பொதிகளைக் கழுதைகளின்மேல் ஏற்றிக்கொண்டுசெத்திரத்திற்சேர்ந்து ஒருவன் தன் கழுதைக்கு உணவுகொடுக்கப் பொதியை அவிழ்த்த பொழுது தான் கொடுத்த பணம்பொதிவாயிலிருக்கக்கண்டு பயத்தோடே யாக்கோபிடத்துக்குப் போய் எகிப்தின் அதிபதி தங்களை நடப்பித்தவைகள் இப்படியென்றும் அவன் உங்கள் இளைய சகோதரனை என்னிடத்திற்கு அழைத்து வரக்கண்டால் இவனை உங்களுடனே விடுவேன். நீங்கள் இத்தேசத்தில் வியாபாரஞ் செய்யலாமென்று சொன்னனென்றுஞ்சொன்னார்கள். (ஆதி. ௪௨. ௩௫.

௨௯. அதை யாக்கோபு கேட்டு யோசேப்பும் ஷிமியோனும் இல்லை. பேன்யாமீனையும் அழைத்துக்கொண்டுபோக எண்ணுகிறீர்கள். இப்படி என்னைப் பிள்ளையற்றவனாக்குகிறீர்களென்றான். அதற்கு ரூபேன் பேன்யாமீனை என் கையில் ஒப்புவியும். அவனை நான் திரும்ப அழைத்து வாராதிருந்தால் என் புத்திரரிருவரையும் கொல்லுமென்றான். (ஆதி. ௪௨. ௩௭.

௩௦. அதற்கு யாக்கோபு யோசேப்பு இறந்து போனான். இவனொருவனிருக்கிறான். வழியிலே இவனுக்கொரு தீங்கு நேரிட்டால் நான் துக்கத்தோடே சாகவரும். ஆகையால் இவனை உங்களோடே போகவிடேன் என்றான்.

(ஆதி. ௪௨. ௩௮.

* ௨ரோமர், ௧௨. ௧௭.

௯க. அவர்கள் கொண்டுவந்த தானியஞ் செலவழிந்தபோது யாக்கோபு தன் மக்களுடனே நீங்கள் மறுபடியும் எகிப்துக்குப் போய்த் தானியம் வாங்கிவாருங்களென்க, யூதா எகிப்தின் பிரபு உங்கள் இளைய சகோதரனை உங்களோடே அழைத்துவாராவிட்டால் நீங்கள் என்முகத்தைப் பார்க்கமாட்டீர்களென்று சொன்னார். நீர் பேன்யாமீனை எங்களோடே அனுப்பினாற்போவோம். நீர் இவனை எங்களோடே அனுப்பும். நானே அவனுக்கு உத்தரவாதியாய் இருப்பேனென்று சொன்னான். (ஆதி. சங. கூ.

௯உ. அதைக்கேட்டு யாக்கோபு நீங்கள், குங்குலியம், தேன், வெள்ளைப்போளம், முதலியசுகந்த திரவியங்களையும், தேரேபிந்துக் கொட்டை, வாதுமைக்கொட்டைகளையும், அவனுக்கு வெகுமதியாகக் கொண்டுபோகிறதுமன்றி, இரட்டிப்பான பணத்தையும் பேன்யாமீனையுங்கொண்டு போங்கள். அந்தப் பிரபு மறியலாயிருக்கிற ஷிமியோனையும் பேன்யாமீனையும் உங்களுடனேகூட அனுப்பும்படி தேவன் இரக்கஞ்செய்வாராகவென்று சொல்லி மறுபடியும் அனுப்பிவிட்டான். (ஆதி. சங. கச.

௯௩. அவர்கள் யாக்கோபு சொன்னபடி இரட்டியாய்க் கிரயங்களையும் வெகுமதிகளையுங் கொண்டு, பேன்யாமீனையுங் கூட்டிக்கொண்டு எகிப்துக்குப்போய்ச்சேர, யோசேப்பு அவர்களைக்கண்டு அவர்களுக்கு விருந்துசெய்யும்படி அவர்களைத் தன்வீட்டுக்கு அனுப்பிவிட்டான். அதைக்கண்ட இவர்கள் முன்னே தாங்கள்

கொடுக்கவேண்டிய விலைக்கிரயத்தைத் தாங்கள் திரும்பக் கொண்டுபோனதினிமித்தம் தங்களைச் சிறையாக்கி அனுப்புகிறானென்றெண்ணிப் பயந்து நாங்கள் முன்னே பெற்றுக்கொண்ட தானியத்தின் கிரயம் எங்கள் எங்கள் பைகளிலேயிருந்தன. அவைகளை நமது பைகளிலேயிட்டவன் யாவனென்று நாம் அறியோம்.

ஙச. நாம் அந்தப் பணங்களையும் இப்பொழுது கொள்ளுந் தானியத்தின் கிரயங்களையுந் திரும்பக்கொண்டுவந்தோமென்றார்கள். அதைக் கேட்ட உக்கிராணக்காரன், நீங்கள் பயப்படவேண்டாம். உங்கள் பணம் என்வசம் வந்துவிட்டது. உங்கள் தேவனே உங்களுக்குச் சேமத் திரவியத்தைத் தந்தாரென்றுசொல்லி அவர்களைச் சமாதானப்படுத்தி, ஷிமியோனையும் அழைத்துவந்து அவர்களோடேவிட்டு அவர்களுக்குப் பாதசுத்திக்குச் சலமுங்கொடுத்துக் கழுதைகளுக்குஉணவையுங் கொடுத்தான். (ஆதி. சங. உச.

ஙரு. மத்தியானம் யோசேப்பு வீட்டுக்குவந்தான். இவர்கள் தாங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை யோசேப்புக்குமுன் வைத்து, தாழ்ந்து வணங்கினார்கள். அவன் அவர்கள் சுக செய்திகளையும் அவர்கள்பிதாவின் சுகசெய்திகளையும் விசாரித்து அறிந்த பின் தன் இளைய சகோதரனாகிய பேன்யாமீன் அவர்களோடே நிற்கக் கண்டு அவனை ஆசீர்வதித்து மனதுருகித் தனியே போய் அழுது ஆறி, வெளியே வந்து, தன் வேலைகாரனைக்கொண்டு அவர்களுக்குப்

போசனம் படைப்பித்ததுமன்றி, அவர்களை அ
வரவர் வயசின்படி ஒழுங்காகப் பந்தியிலும்இ
ருத்துவித்தான். (ஆதி. சங. ஙங.

ஙசு. இவர்கள் புசித்துத் திருத்தியானபின்பு
யோசேப்புத் தன் உக்கிராணக்காரனுடனே இ
வர்களுக்கு வேண்டிய தானியத்தை இவர்கள்
பொதியிலே நிறைத்து அவரவர் பணத்தை அ
வரவர் பொதியின் வாயிலேஇட்டு இளையவனு
டைய பொதியின்வாயிலே தன் வெள்ளிப்பா
த்திரத்தையும் வைக்கும்படி கற்பித்தான். அவ
னும் அப்படியே செய்தான். (ஆதி. சச. உ.

ஙஎ. அவர்கள் அதிகாலையிலேஎழுந்து அனு
ப்புப்பெற்றுக்கொண்டு தங்கள் கழுதைகளின்
மேற் பொதிகளையும் ஏற்றிக்கொண்டு போனார்
கள். அவர்கள் நகரத்தைக் கடந்துபோகமு
ன் யோசேப்பு தன் உக்கிராணக்காரனை அ
ழைத்து, நீ அவர்களைத் தொடர்ந்துபோய், நீ
ங்கள் நன்மைக்குத் தீமைசெய்ததென்ன? நீங்க
ள் என் எசமானுடைய பானபாத்திரத்தைக் க
வர்ந்துகொண்டு வரலாமாவென்று சொல்லென்
றான். (ஆதி. சச. ரு.

ஙஅ. அந்தப்படியே அவன் போய்ச் சொல்
ல, அவர்கள் பிரமித்து, நாங்கள் முன்னே எங்
கள்பொதியில் அகப்பட்ட பணத்தைத் திரும்ப
க் கொண்டுவந்தோமே. அப்படியிருக்க நாங்
கள் உங்கள் எசமானுடைய பொன் வெள்ளிப்
பாத்திரங்களைத் திருடிவருவோமா? அவருடை
ய பொருள் ஆர்வசத்திற் காணப்படுமோ அவ
ன் கொலையுண்ணக்கடவன். நாங்களும் அவ

ருக்கு அடிமைகளாவோமென்று சொல்லித் தங்கள் பொதிகளை இறக்கி அவிழ்த்துவிட்டார்கள். அவன் அதைச் சோதித்தபொழுது அந்தப் பாத்திரம் பேன்யாமீனுடைய பொதியிலே காணப்பட்டது. (ஆதி. சச. கஉ.

௩௯. உடனே அவர்கள் தங்கள் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு பொதிகளைக் கழுதைகளின்மேல் ஏற்றிக்கொண்டு யோசேப்புக்கு முன் வந்து விழுந்து வணங்கினார்கள். உடனே யோசேப்பு நீங்களென்ன செய்தீர்களென்றான். அதற்கு யூதா நாமென்னசொல்லுவோம். பாத்திரத்தைவைத்திருக்கிறவனும்நாங்களும் உமக்கு அடிமைகள்தான் என்றான். (ஆதி.சச.கசு.

ச௦. அதற்கு யோசேப்பு அப்படிவேண்டாம். பாத்திரத்தை வைத்திருந்தவன்மாத்திரம் எனக்கு அடிமையாயிருக்கட்டும். நீங்களோ சமாதானத்துடன் போங்களென்றான். அதைக்கேட்ட யூதா, ஆ! என் ஆண்டவனே, உமது அடியானாகிய எங்கள் பிதாவின் ஒரு மனைவிக்கு இரண்டுபுத்திரர், அவர்களில் ஒருவன் காணாமற்போய்விட்டான். இவனொருவன்தான் இருந்தான். இவனையும் உமக்கு அடிமையாய்விட்டு நாங்கள் போனால், எங்கள் பிதாவின் சீவன் இவனுடனே நேசபந்தப்பட்டிருக்கிறது. இவனைக் காணவில்லையென்றவுடனே மரித்துவிடுவார். ஆதலால் அடியேன் உமக்கடிமையாயிருப்பேன். இவனை விட்டுவிடுமென்று கெஞ்சிக்கேட்டான். (ஆதி. சச. ௩௩.

சக. அதைக்கேட்டு யோசேப்புத் தன் அரு

கேநின்ற எகிப்தியர் யாவரையும் வெளியிலேஅ னுப்பிக் கண்ணீர்சொரிய அழுது, நீங்கள் விற் றுவிட்ட யோசேப்பு நானே. என்பிதாஇன்னு ஞ் சீவித்திருக்கிருராவென்ருன். அதை அவர் கள் கேட்டுக் கலங்கி யாதொரு உத்தரமுஞ் சொ ல்லாமல் மயங்கிநிற்க, அவன் அவர்களைச் சமீப மாய் அழைத்து, நீங்கள் என்னை விற்றதினிமித் தம் விசனப்படவேண்டாம். சீவரட்சையின் பொருட்டே தேவன் என்னை இவ்விடத்துக்கு அனுப்பினுர்.* (ஆதி. சரு. ரு.

சஉ. இப்பொழுது பஞ்சமுண்டாகி இரண் டு வருஷமாயிற்று. இன்னும் ஐந்துவருஷம் கொடிய பஞ்சமுண்டாயிருக்கும். ஆகையால் நீங்கள் என் பிதாவிடத்திற்போய் நான் இங்கே அதிகாரமுடையவனுய் இருக்கிறேனென்றும், அவர் தமது புத்திரபௌத்திரரையும், தனது ஆ டுமாடுகளையும் மற்றுந் தனக்குள்ள யாவற்றையு ங் கொண்டுவந்து கோஷேன்நாட்டிலே வாசம் பண்ணவேண்டுமென்றும், நான் அங்கே அவரை வைத்துக்காப்பாற்றிக்கொள்வேனென்றும்,சொ ல்லுகிறேன் என்று சொல்லுங்களென்று சொன் னபின் தன் தம்பியாகிய பேன்யாமீனுடைய கழுத்தைக்கட்டிக்கொண்டு அழுது மற்றையாவ ரையும் முத்தஞ்செய்தான். (ஆதி. சரு. கரு.

சரு. பார்வோன் இராசா யோசேப்பின் ச கோதரர் வந்தார்களென்று கேள்விப்பட்டு யோ சேப்பை அழைப்பித்து, உன் சகோதரர் தங்க

---

* அப்போஸ்தலர், எ. கரு.

ள் பொதிகளை ஏற்றிக்கொண்டு கானான்தேசத்துக்குப் போய்த் தங்கள் பிதாவையும் அவன் குடும்பத்தாரையும் அழைத்துக்கொண்டுவந்து எகிப்தின்பலன்களை அனுபவிக்க உத்தரவுதருகிறேனென்றான். யோசேப்பு அப்படியே அவர்களுக்குச் சொல்லி அவர்களுக்குப் பண்டிகளையும் வழிக்கு உணவையும் ஆளுக்கொரு மாற்றுவஸ்திரத்தையும், பேன்யாமீனுக்குமுந்நூறுவெள்ளிக்காசையுங் கொடுத்ததுமன்றித் தன்பிதாவுக்கு எகிப்தின்சிரேஷ்டபதார்த்தங்களையும் வழிக்குத் தானியத்தையும் அப்பத்தையும் உணவுகளையுங் கொடுத்தனுப்பினான்.* (ஆதி. சரு. உரு.

சச. அவர்களோ கானானுக்குப்போய், யாக்கோபினிடத்திற் சேர்ந்து யோசேப்பு எகிப்திலே அதிகாரியாயிருக்கிறதை அறிவித்து அவன் கொடுத்த பதார்த்தங்களையும் பண்டிகளையுங் காண்பித்தார்கள். அவைகளையாக்கோபுகண்டு மனம்பூரித்து நான் சாகமுன்போய் யோசேப்பைக் காண்பேன். என் புத்திரனாகியயோசேப்பு உயிரோடிருக்கிறதே போதும். நான்மரிக்கமுன்போய் அவனைக் காண்பேனென்று சொல்லிப்புறப்பட்டு பேர்ஷேபாவுக்குப்போய் (யெகோவாவுக்குப்) பலியிட்டான்.

(ஆதி. சரு. உசு.

சரு. அன்றிரவு யெகோவா அவனுக்குத் தரிசனையாகி, யாக்கோபே, நீ எகிப்துக்குப் போகப்பயப்படவேண்டாம். நான் உன்தேவன். நான் உன்னோடே வருகிறேன். அங்கே உன

* அப்போஸ்தலர், எ. கச.

க்கு ஒருபெரியசாதிதோன்றும். யோசேப்பு உ ன்னைச் சாக்காட்டுவான். நான் உன்சனங்களை மறுபடியும் கானான் தேசத்துக்குக் கொண்டுவ ருவேன் என்றார். (ஆதி. சகூ. ச.

சகூ. பின்பு யாக்கோபு பேர்ஷேபாவினின் றும் புறப்பட, அவனுடைய புத்திரர் பார்வோ ன் அனுப்பின பண்டிகளில் யாக்கோபையும் தங்கள் குழந்தைகளையும் ஏற்றிக்கொண்டு கா னானிலே தாங்கள்சம்பாதித்த திரவியங்களையுந் தங்கள் ஆட்டுக்கூட்டங்களையுங் கொண்டு எகி ப்துக்குப்போனார்கள். அப்பொழுது கானானை விட்டு எகிப்துக்குப்போனசனம் அறுபத்தாறு. எகிப்திலேயிருந்த யோசேப்பும் அவன்குடும்ப த்தாருங்கூட எழுபதுபெயர்.

(ஆதி. சகூ. உஎ.

சஎ. யாக்கோபு தன் குடும்பத்துடன் கோ ஷேன் நாட்டிற்சேர்ந்து, தான் வந்தசெய்தியை யோசேப்புக்கு அறிவிக்கும்படி யூதாவை அனு ப்பினான். யூதாபோய் யோசேப்புக்குச் செய் தியையறிவிக்க அவன் உடனே தன் இரதத்தி லேறிக் கோஷேன்நாட்டுக்குவந்தான். யாக் கோபு அவனைக்கண்டமாத்திரத்தில், மகனே, நீ உயிரோடிருக்கிறாயா? உன்முகத்தையுங் காண ப்பெற்றேன். இனிநான் மரித்தாலுமென்ன எ ன்றான். (ஆதி. சகூ. கூ0.

சஅ. யாக்கோபை யோசேப்புங் கண்டுகே ளிகூர்ந்து, நான்போய் என் பிதாவும் என் ச கோதரரும் அவர்கள் குடும்பங்களும் அவர்கள் மந்தைகளும் எகிப்துக்கு வந்திருக்கிறார்களெ

ன்று பார்வோனுக்குச்சொல்லி, நீங்கள் இங்கி ருக்க உத்தரவுபெறவேண்டுமென்று சொல்லித் தன் சகோதரரில் ஐந்துபேரை அழைத்துக்கொ ண்டுபோய்ப் பார்வோனுடைய சமுகத்தில் வி ட்டான். பார்வோன் இவர்களைக்கண்டு உங்க ள் தொழில் என்ன என்றான்.

(ஆதி. சஎ. ரு.

சகூ. அதற்கவர்கள் நாங்கள் இடையர். கா னான்தேசத்திலே பஞ்சங்கொடிதாயிருக்கிறது. மந்தைகளுக்கு மேய்ச்சலுமில்லை. ஆகையால் இங்கேவந்தோம். நீர் தயைசெய்து நாங்கள் கோஷேன்நாட்டிலேதங்க உத்தரவுதாருமென் றார்கள். அதைக்கேட்டபார்வோன் உன்பிதா வுஞ் சகோதரரும் இஷ்டமானபடி கோஷேனி லும் மற்றும்வளமான இடங்களிலுந் தங்கலா ம், அவர்களுக்குள் வல்லவர்களை எனதுமந்தை களுக்கு விசாரணைத்தலைவராக வைக்கலாமெ ன்றான். (ஆதி. சஎ. கூ.

ரு0. பின்பு யோசேப்புத் தன்பிதாவை அ ழைத்துவந்து பார்வோனுக்கு முன்விட, யாக் கோபு பார்வோனை ஆசீர்வதித்தான். அப்பொ ழுது பார்வோன் யாக்கோபைநோக்கி உமக்கெ த்தனைவயசென்றுகேட்க, அவன் என்னுடைய ஆயுள் என் பூருவபிதாக்களுடைய ஆயுள்போ ல அல்ல. நான் தேசாந்திரியாய்த்திரிந்தவருஷ ம் நூற்றுமுப்பதென்றான். (ஆதி. சஎ. க0.

ருக. பின்பு யோசேப்பு பார்வோனுடைய கட்டளைப்படி யாக்கோபையும் பரிவாரங்களை

யும் அழைத்துக்கொண்டுபோய்க் கோஷேனின் இராமேசேஸிலே குடியேற்றி அவர்களுக்குவேண்டிய ஆகாரமுங்கொடுத்து ஆதரித்தான்.
(ஆதி. சஎ. கஉ.

ருஉ. இஸ்ரவேலரோ கோஷேன் தேசத்திலே பதினேழுவருஷம் வாசம்பண்ணிச் சுகசீவிகளாயிருந்தார்கள். அப்பொழுது யாக்கோபுக்கு மரணகாலஞ் சமீபித்ததினால் அவன் தன் குமாரனாகிய யோசேப்பை அழைப்பித்து நீ, என்னை எகிப்திலே அடக்கம்பண்ணாமற் கானானுக்குக்கொண்டுபோய் என் பிதாக்கள் அடக்கம்பண்ணப்பட்ட இடத்தில் அடக்கம்பண்ணவேண்டுமென்று ஆணையிடுவித்துக்கொண்டு அனுப்பிவிட்டான்.
(ஆதி. சஎ. ௬க.

ருங. சிலநாட்சென்றபின்பு யாக்கோபு அந்தியகாலமாயிருக்கிறானென்று யோசேப்புக்கேள்விப்பட்டுத் தன் புத்திரராகிய மனாசேயையும் எப்ராயீமையும் அழைத்துக்கொண்டுபோக யாக்கோபு களிகூர்ந்து, யோசேப்பே, உன்னுடைய புத்திரர் இருவரும் என்னுடையவர்கள். அவர்கள் ரூபேனையும், ஷிமியோனையும் போலிருப்பார்களென்று சொல்லி அவர்களை அழைத்துக்கட்டி அணைத்து முத்தமிட்டுத் தன்வலக்கையை இளையவனாகிய எப்ராயீமினுடைய தலையிலும், தன் இடக்கையை மனாசேயின் தலையிலும் வைத்து இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்தவரும் சகல தீங்குகளிலும் நின்று என்னை மீட்டவருமாகிய தேவன் இந்தப் பாலகரை ஆசீ

ர்வதிக்கக்கடவரென்றான்.* (ஆதி. சஅ. கரு.

ருச. அதைக்கண்ட யோசேப்பு யாக்கோபுடைய வலக்கையை எடுத்து மனஷேயினுடைய தலையின்மேல்வைத்து, என்பிதாவே இவனே மூத்தவன் என்றான். அதற்கு யாக்கோபு, மகனே அதுஎனக்குத்தெரியும். இவனுமொருசாதிக்கு முதன்மையாவான். இவனும் பெருகுவான். இவனுடைய தம்பி இவனிலும் அதிகமாய்ப்பெருகுவான். அவனுடைய சந்ததியார் திரளானசாதிகளாவார்கள். இஸ்ரவேலர் ஒருவனை ஆசீர்வதிக்கில் தேவன் உன்னை எப்ராயீமைப்போலவும் மனஷேயைப்போலவும் ஆக்கக்கடவரென்று சொல்வார்களென்றான்.

(ஆதி. சஅ. உ0.

ருரு. பின்பு யாக்கோபு யோசேப்புடனே எனக்கு மரணகாலஞ் சமீபித்தது. தேவன் உங்கள் பட்சமாயிருந்து உங்கள்பிதாக்களின் தேசத்துக்கு உங்களைத் திரும்பவுஞ் சேரப்பண்ணுவார். நான் எமோரியர் கையிலிருந்து பற்றிக்கொண்ட பங்கையே உனக்குத்தந்தேன். என்று வாக்குப்பண்ணினான்.† (ஆதி. சஅ. உஉ.

ருசு. அதன்மேல் யாக்கோபு தன்புத்திரர்பன்னிருவரையும் தன்சமீபத்தில் வருவித்து,

க. ரூபேன் என் மஞ்சத்தை அசுசிப்படுத்தினவன். அதனால் அவன் மேன்மைபெறாமல் நிலையற்றிருப்பான். (ஆதி. சகூ. ச.

உ. ஷிமியோனும் லேவியும் துராலோசனைசெய்த கொலைகாரர், அவர்கள் கோபமும் மூர்க்க

---

* எபிரேயர், கக. உக. † யோவான், ச. ரு.

மும் சபிக்கப்படும். அவர்கள் யாக்கோபுக்குட் பிரிக்கப்படுவார்கள். இஸ்ரவேலருக்குள் விதைக்கப்படுவார்கள். (ஆதி. ௪௯. ௭.

௩. யூதாவைச்சகோதரர்பணிவார்கள். அவன் கை அவன் சத்துருக்களின் பிடரின்மேலிருக்கும். அவன் ஒரு சிங்கக்குட்டிபோல இரைகவர்ந்து மேலிட்டுவருவான். அவன் கிழசிங்கம் போலப்பதுங்கிக் கிடப்பான். அவனைஎழுப்புவார் ஒருவருமில்லை. ஷீலோவாகிய அபிஷேகர் வருமளவும் செங்கோல் யூதாவைவிட்டு நீங்குவதும், நியாயாதிபதி அவன் மரபில் இல்லாமற்போவதுமில்லை. சனங்கள் அவனைச் சேர்வார்கள்.* அவன் செழித்த திராட்சக்கொடியிடத்திலே, தன்பெண்கழுதையையுங்குட்டியையுங் கட்டுவான். திராட்சரசத்திலே தன் உடுப்பைத் தோய்ப்பான். அவன் கண்கள் திராட்சரசத்தினலே சிவக்கும். அவன் கண்கள் பாலினலே வெளுக்கும். (ஆதி. ௪௯. ௧௨.

௪. செபுலோன் சமுத்திரக்கரையில் வாசம்பண்ணுவான். அவனுடைய எல்லை சீதோன்தேசம்வரைக்கும் இருக்கும். (ஆதி. ௪௯. ௧௩.

௫. ஈஷகார்இளைப்பாறுதலேநலமென்றும்நாடேரம்மியமென்றுங் கண்டு தன்பிடரைச்சாய்த்துச் சுமையை ஏற்பான். அவன் ஊழியக்காரனுகி வரிகொடுப்பான். (ஆதி. ௪௯. ௧௫.

௬. தாண் இஸ்ரவேலுக்குள் நியாயாதிபதியாவான். குதிரைமேலிருக்கிறவன் மல்லாகக்கவி

---

* ஆக். ௪. ௩௩, ௩௨. உரோ. ௧௧. ௨௬.

ழும்படி குதிரைக்குழம்பைக் கடிக்க, வழியிற் கிடக்கிற சருப்பம்போலிருப்பான்.

(ஆதி. சகூ. கஎ.

எ. காத்தைப் படைக்கூட்டம் செயிக்கும். பின்பு அவன் அதைச் செயிப்பான்.*

(ஆதி. சகூ. ககூ.

அ. ஆஷேரின் ஆகாரம் புஷ்டியாகும். அவன் இராசாக்களுக்கு இதமான பதார்த்தங்களையும் விளைவிப்பான். (ஆதி. சகூ. உ0.

கூ. நப்தாலி விடுதலைபெற்ற பெண்மான், அவன் மதுரவசனங்களை வசனிப்பான்.

(ஆதி. சகூ. உக.

க0. யோசேப்பு செழித்துக்காய்க்கும்மரக்கொம்பு. அதின்கிளைகள் சுவரின்மேற்படரும். வில்வல்லவர் அவனைப்பகைத்தார்கள். உயர்ந்தவானத்தின் நன்மைகளையும், தாழ்ந்த சமுத்திரத்தின் நன்மைகளையும், தானியத்தின் நன்மைகளையும், கருப்ப நன்மைகளையும், இவனுக்கருளின சருவவல்ல தேவனுடைய ஆசீர்வாதத்தினால் அவன் கையில் உறுதிப்பட்டது. அவனுடைய புயம் பெலப்பட்டது. அவனில் நின்று இஸ்ரவேலரின் கன்மலையாகிய மேய்ப்பர் தோன்றுவார். உன்பிதாவின் ஆசீர்வாதங்கள் முற்பிதாக்களின் ஆசீர்வாதங்களிலும் சிரேஷ்டம். அவைகள் நித்திய பருவதங்களின் அந்தத்தினின்றும் தோன்றிவருகின்றன. அவைகள் இவன் உச்சியின்மேல் நிற்கும்.† (ஆதி. சகூ. உசு.

* உபாகமம் ருரு உ0. † உபாகமம் ருரு. கரு—கஎ.

௧௧. பேன்யாமின் கோனாயைப்போலப்பீறு வான். இவன் காலையிலே தன் இரையைப்பட் சித்து மாலையிலே கொள்ளையிடுவதைப் பங்கிடு வான் என்றான். (ஆதி. ௪௯. ௨௭.

கவனிப்பு.—இவன்சோன்ன வாக்கின்படி பன் னிரு சந்ததியாருக்கும் பிற்காலத்திற் சம்பவித்தது. இதை யாக்கோபு கிறிஸ்துநாதர்வர, ௧௬௮௯. வரு ஷத்திற்குமுன்னே சொன்னான். இவைகளைப்போ லவே இதற்கு ௨௬௮. வருஷத்துக்குப்பின் மரித்த மோசேயும், தன் மரணாந்தத்தில் இஸ்ரவேற்கோ த்திரத்தாருக்கு வருஞ் சம்பவங்களை எடுத்துச்சோ ன்னான். இவ்விரண்டுஞ் சமமாயிருக்கிறதென்று ஆ தி. ௪௯ம். அதிகாரத்திலும், உபாகமம் ௩௩ம். அ திகாரத்திலுங் காணலாம். இதினின்றும் ஒரு வரு ஷத்தின்பின்பு கானான்தேசம் பங்கிடப்பட்டது. அ ப்பொழுது மேற்குறித்தயாக்கோபும் மோசேயும்சோ ன்னபிரகாரம் தெய்வச்செயலாய் நிறைவேறின தென்று யோசுவா. ௨௧. அதிகாரத்திற் காணலாம்.

௩௭. இதன்பின் யாக்கோபு தன் புத்திரரை நோக்கி நான் இப்போது என் முன்னோர்களு டனே சேர்க்கப்படப்போகிறேன். எனது பா ட்டனாகிய ஆபிரகாம் விலைக்குவாங்கின் மக் பேலாவின் குகையில் அடக்கம்பண்ணப்பட் டிருக்கிற ஆபிரகாம், சாராள், ஈசாக்கு, ரிபெ க்காள், லேயாள், என்பவர்களுடனே என்னை யும் அடக்கம்பண்ணுங்களென்று சொல்லி ம ரித்தான். (ஆதி. ௪௯. ௩௩.

௩௮. பின்பு யோசேப்பு எகிப்தின் வைத்தி யர்களை அழைப்பித்து நாற்பதுநாளாகச் சுகந்த வருக்கங்களை இடுவித்து எழுபதுநாளளவும் து

க்கங் கொண்டாடியபின் அந்தப்பிரேதத்தைக் கானானிலே கொண்டுபோய் அடக்கம்பண்ணி வருவதற்குப் பார்வோனிடத்தில் உத்தரவுபெ ற்றுப்புறப்பட்டான். (ஆதி. ருo. எ.

ருகூ. அப்பொழுது யோசேப்புடனே எகிப் தின் முதியோரும், யோசேப்பின் குடும்பத்தா ரும், அவன் சகோதரரும், பிதாவின் குடும்பத்தா ருங் கூடிப்போய், யோர்தானுக்குக்கிழக்கே ஆ தாத்தின் போர்க்களத்திலே தங்கி ஏழுநாள் து க்கங்கொண்டாடிப் புறப்பட்டு, மக்பேலாவி லே போய்ச் சவச்சேமஞ் செய்து எகிப்துக்குத் திரும்பினார்கள்.* (ஆதி. ருo. கச.

சூo. யோசேப்பின் சகோதரர் தங்கள் பிதா இறந்துபோனபடியால் யோசேப்பு தாங்கள் செய்த கொடுமையை நினைத்திருந்து தங்கள்மே ற் பழிசாதிப்பான் என்று நினைத்ததை யோசே ப்பு அறிந்து, அவர்களுடனே தேவன் என்னை அனேக சனங்களுடைய ரட்சிப்புக்காக எகிப் துக்கு அனுப்பினார். அது உங்கள் செயலல்ல. நீங்கள் பயப்படவேண்டாமென்று சொல்லி அ வர்களை ஆறுதற்படுத்தினான். (ஆதி. ருo. உக.

சூக. யோசேப்பு நூற்றுப்பத்துவருஷம் உயி ரோடிருந்து, பிரபௌத்திரரையுங் கண்டு மரிக் குங்காலமானபோது அவன் தன் வெந்துக்களை அழைத்து யெகோவா ஆபிரகாமுக்கும், ஈசாக் குக்கும், யாக்கோபுக்கும் இட்டவாக்கின்படி கானானுக்கு நமது சந்தானத்தைச் சேரப்பண் ணுவார். அப்பொழுது என் எலும்புகளையும்

* அப்போஸ்தலர் எ. கசு, கசு.

கொண்டுபோய் அங்கே அடக்கம்பண்ணவேண்டுமென்று கட்டளையிட்டு மரித்தான்.* அவர்கள் அந்தப் பிரேதத்துக்குச் சுகந்தவருக்கங்களையிட்டு ஒரு பெட்டிக்குட் சேமித்துவைத்தார்கள். (ஆதி. ௫௦. உ௬.

௬உ. யோசேப்பு மரித்து அறுபத்திரண்டு வருஷங்களுக்குப்பின்பு யோசேப்பை அறியாத ஒருவன் பார்வோனுடைய பட்டத்துக்கு வந்து, இந்த இஸ்ரவேலர் நம்மைப்பார்க்கிலும் பெருக்கமும் பிரபலமுமுள்ளவர்கள். இவர்கள் நமக்கு விரோதிகளாய் எழும்பி நம்மைவிட்டுப் புறப்படவுங்கூடும். ஆகையால் அவர்களை ஒடுக்கி நடத்தவேண்டுமென்று தீர்மானித்து இஸ்ரவேலரைக் கடின ஊழியத்தினால் ஒடுக்கும்படி பீத்தோன், ராமேசேஸ், என்னும் சேமககரங்களைக் கட்ட இஸ்ரவேலரை ஊழியக்காரராக்கினான்.† (யாத். க. கக.

௬௩. இஸ்ரவேலர் எகிப்தியராலே இடுக்கண்படும்பொழுது யெகோவா அவர்கள் வசமாயிருந்துஅவர்களை அதிவிருத்தியாக்கினார். அதைக் கண்ட எகிப்தியர் இஸ்ரவேலர் தங்கள் சீவனையும் வெறுக்கத்தக்க கடூரமாய் நடத்தி, சாந்துவேலை, செங்கல்வேலை, வயல்வேலை முதலிய சகல வேலைகளையும் அவர்களைக்கொண்டே செய்வித்தார்கள். அதிலும் இஸ்ரவேலர் ஒடுங்காமல் அதிவிருத்தியாகிறதைப் பார்வோன் அறிந்து எபிரேயருடைய மருத்துவிச்சிகளை அழைப்பித்து நீங்கள் எபிரேயஸதிரீகளுக்கு மருத்து

* யாத. க௩. க௯. எபி. கக. உஉ. † சங். ௱௫. உஉ, உ௫.

வஞ்செய்யும்பொழுது பிறக்கிற குழந்தைகள் பெண்ணுகில் உயிரோடிருக்கட்டும், ஆணுகிற் கொன்றுபோடுங்களென்று கற்பித்தான்.*
(யாத். க. கசு.

சுச. மருத்துவிச்சிகளோ தேவனுக்கு அஞ்சினதினுலே இராசா சொன்னபடி செய்யாமல் விட்டுவிட்டதைப் பார்வோன் அறிந்து, மருத்துவிச்சிகளை அழைத்து நீங்கள் என் கட்டளைப்படி செய்யாமல் விட்டதென்னவென்று கேட்க, அவர்கள் எபிரேயஸ்திரீகள் எகிப்தியஸ்திரீகளைப்பார்க்க மகாபெலமுள்ளவர்கள். அவர்கள் நாம் சேருமுன்னமே பிரசவிக்கிருர்களென்ருர்கள்.
(யாத். க, ககூ.

சுரு. அதை அறிந்து பார்வோன் எபிரேயருக்குட்பிறக்கிற ஒவ்வொரு ஆண்குழந்தைகளையும் நைல்நதியிலிடும்படி கட்டளையிட்டான். அந்தப்பிரகாரம் இரண்டுவருஷமட்டாய் இஸ்ரவேலர் யாவரும் ஆண் குழந்தைகளை நதியிலிட்டுவந்தார்கள்.
(யாத். க. உஉ.

இப்படி நடந்துவருங்காலத்திலே லேவிகோத்திரத்திற் பிறந்த அம்ராமுக்கு மனைவியும் லேவிகோத்திரத்தாளுமாகிய யோகெபேத்திடத்திற் பிறந்த மோசே அதிரூபவானுயிருந்ததினிமித்தம்,† மாதா அவனை ஆற்றிலிடாமல் மூன்றுமாதமாக ஒளித்துவைத்தும், பின்புராசகட்டளைக்கஞ்சிப்பிள்ளையை ஒருநாணற்பெட்டிக்குள் வளர்த்தி நைல் நதியோரத்திலுள்ள நாணற் புல்லுக்குள்வைத்துக்குழந்தைக்குச்சம்பவிப்பதை அறி

* அப்போஸ்தலர் எ. ககூ. † எபிரேயர் கக. உங.

யும்படி அதின் சகோதரியாகிய மிரியமை அய லிலே விட்டுவைத்தாள். அவள் தூரத்திலே பார் த்துக்கொண்டு நின்றாள். (யாத். உ. ௪.

௬௬. அந்தச் சமயத்தில் நதியிலே நீராடப் போன பார்வோனுடைய குமாரத்தி அந்தப் பி ள்ளையைக் கண்டெடுத்து அதை வளர்க்க ஒரு கைத்தாய் வேண்டுமென்று பக்கலிலே நின்ற மி ரியமை விசாரிக்க, மிரியம் குழந்தையின் மா தாவைத்தானே கைத்தாயாக அழைத்து வந்தா ள். பார்வோன் குமாரத்தி அவளுடனே, நீ இ ந்தப் பிள்ளையை வளர்த்து எனக்குக் கொடு. நான் உனக்குச் சம்பளங் கொடுப்பேனென்று சொல்லி அவளிடத்தில் ஒப்பித்தாள். அவளும் அந்தப் பிள்ளையை ஏற்றுக்கொண்டுபோய் வள ர்த்து, கல்வி பயில வேண்டிய காலத்தில் ராச குமாரத்திக்கொப்பித்தாள். அவளும் இவனை நா ன் சலத்தினின்றும் எடுத்தபடியால் இவனுக்கு மோசேயென்றுபேரிட்டுக் கற்க வைத்தாள்.*

(யாத். உ. க0.

௬௭. இவன் எகிப்தின் கல்விகளிலும் சரீர பலத்திலுந் தேறினவனாகுங்காலத்தில் †ஒரு எ கிப்தியன் ஒரு எபிரேயனை அடிக்கிறதைக் க ண்டு, அவனைச் சங்கரித்துப் புதைத்தான். மறு நாள் எபிரேயரில் இருவர் சண்டையிடுவதைக் கண்டு அவர்களுள் அநியாயஞ்செய்தவனை நோ க்கி, நீ உன் சகோதரனுக்கு அநியாயஞ் செய் வதென்னவென்று கடிந்துபேச, நீ நேற்று எ கிப்தியனைக் கொன்றதுபோல என்னையுங் கொ

* அப்போஸ்தலர் எ. உக. † அப்போஸ்தலர் எ. உஉ.

லைசெய்யப் பார்க்கிருயா? உன்னை எங்களுக்கு நியாயாதிபதியாய் ஏற்படுத்தினவன் யாவன் என்முன். இப்படியே இவன்செய்த கொலைகாரியம் வெளிவந்தது* (யாத். உ. கசு.

கூஅ. இது செய்தியைப்பார்வோனும் அறிந்து மோசேயைக் கொலைசெய்ய எண்ணியிருந்தான். அதை மோசே அறிந்து, மீதியானுக்கோடி அத்தேசத்து ஆசாரியனுகிய ரெகுவேலென்றும், எத்திரோவென்றும் பெயர்கொண்ட ஆசாரியன் வீட்டிற்சென்று அவன் குமாரத்தியாகிய சிப்போராளை விவாகம்பண்ணி, அவனுக்கு ஆடுமேய்க்கிறவனுயிருந்தான். அங்கே அவனுக்குக் கெர்ஷோம் என்றும், எலீயேசர் என்றும்இரண்டு புத்திரர் பிறந்தார்கள்.† (யாத். உ. உஉ.

கூகூ. அப்பொழுது யெகோவா இஸ்ரவேலர் இட்ட ஓலத்தைக் கேட்டு அவர்களைப் பார்வோனுடையகையிலிருந்து மீட்டுக்கொள்ளச் சித்தமானுர். இப்படியிருக்கையில் ஒருநாள் மோசே ஓரேப்பென்னும் மலைச்சார்பில் ஆடுகளை மேய்த்துக்கொண்டு நிற்கும்பொழுது ஓர் முட்செடிக்குள் அக்கினிச் சுவாலை தோன்றியிருக்கவும், அந்தச் செடி வேகாமலிருக்கவும் கண்டு, அந்த நூதனத்தை அறிய அணுக, மோசேயே, மோசேயே, என்றுகூப்பிட்டு உன் பூருவபிதாக்களாகிய ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்கள் வணங்கிவந்த தேவன் நானே. இந்தஸ்தானம் பரிசுத்தமுள்ளது. நீ இ

---

* அபமோஸ்தலர் உஎ. உஅ, உகூ, கூச. † எபிரேயர் கக. உச, உகூ.

தற்கணுகாதே என்ருர். உடனே அவன்பயந்து தன் முகத்தை மூடிக்கொண்டான்.*

(யாத். ௩. ௬.

எ௦. அப்பொழுது யெகோவா மோசேயுடனே எகிப்திலிருக்கும் என்சனங்கள் இடும் ஒலத்தைக் கேட்டேன். நீ அவர்களை எகிப்தில்நின்று மீட்டுக் கானானியர், எத்தியர், எமோரியர், பெரிசியர், ஈவியர், எபூசியர், என்னுஞ் சாதியார் இருக்கிற இடமாகவும், பாலுந்தேனுமோடுகிற தேசமாகவுமிருக்கிற கானானுக்குக் கொண்டுபோ. நான் உன்னோடேயிருப்பேன். நீ அந்தச் சனங்களை அழைத்துவந்து இந்தமலையின்மேற் பலியிடுவாயென்ருர் † (யாத். ௩. க௦.

எக. அவன் ஆண்டவரே, உம்முடைய நாமம் என்ன என்ருன். அதற்கவர் நானேசுயம்பு. நானே ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்கள் பற்றியிருந்த தேவனுகியயெகோவா. இதுவே சதாகாலம் என் நாமம். இதுவேதலைமுறைதோறும் என்னை அறிகிற அறிகுறி. நீபோய் இஸ்ரவேலின் கோத்திரத்தலைவரைக்கூட்டி அவர்களுடனே உங்கள் பிதாக்களின் தேவனுகிய யெகோவா எனக்குத்தரிசனையாகித் தாம் உங்களைப் பாலுந் தேனுமோடுகிற தேசத்துக்குக் கொண்டுபோவார் என்றும், நீங்கள் எகிப்தைவிட்டுப் புறப்படவேண்டுமென்றும் சொன்னாரென்று சொல்லு. அவர்கள் உன் வாக்குக்குச் செவிகொடுப்பார்கள். (யாத். ௩. கஅ.

எஉ. நீயும் இஸ்ரவேலரின் தலைவரும் எகிப்

---

* அப்போஸ்தலர் எ. ௩௦, ௩௧. † அப்போஸ்தலர் எ. ௩௪.

திஇராசனிடத்திற்போய், நாங்கள் எங்கள் தேவனுகிய யெகோவாவுக்குப்பலியிட வனாந்தர வழியாய் மூன்றுநாட்பிரயாணம் பண்ண விடு என்றுசொல்லுங்கள். அவன் உங்களைவிடான். நான் என் கையை நீட்டி எகிப்தியரைத் தண்டிப்பேன். அதின் பின் அவன் உங்களை அனுப்பிவிடுவான். நீங்கள் எகிப்துக்குச் செய்த தொண்டினிமித்தம் அதைக் கொள்ளையிட்டுப் போவீர்களென்றார். (யாத். ந. உஉ.

எரு. அதற்கு மோசே அவர்கள் யெகோவா உனக்குத் தரிசனையாகவில்லையென்று என்னை நம்பார்களே என்க, யெகோவா நீ யுன் கையிற் கோலைத்தரையிலிடு. அது சருப்பமாகும். அதின் வாலைப்பிடி. அது கோலாகும். உன் கையை மார்பில்வை. வெண் குஷ்டம் பிடித்திருக்கும். மறுபடியும் உன் கையை மார்பில் வைத்து எடு. சுவாத்தியமாகும். ஆற்று நீரை மொண்டு தரையிலூற்று. அது இரத்தமாகும். இந்த அடையாளங்களினாலே அவர்கள் நீ என் தாசன்தான் என்று நம்புவார்களென்றார். (யாத். ச. கூ.

எச. அப்பொழுது மோசே ஆண்டவரே, நான் எக்காலத்தும் வாசாலனல்ல. என் நாவும் மந்தம். வாக்குந் தாமதம். நீர் வேறொருவனை அனுப்புமென்றான். அதற்கு யெகோவா நானே வாயைச் சிருட்டித்தவர். நீ போ. நான் உன் வாயிலிருந்து நீ பேசவேண்டியதை உனக்கறிவிப்பேன். உன் சகோதரனாகிய ஆரோன் வாசாலன். அவன் உன்னைக் காணவருகிறான். நீ அ

வன் வாயில் வார்த்தைகளைக்கொடு. நான் உன் வாயிலும் அவன் வாயிலுமிருந்து நீங்கள் செய்யவேண்டுவதையும் உங்களுக்குணர்த்துவேன். ஆரோன் உனக்குவாய், நீயே அவனுக்குப் பிரதிபதி. இந்தக்கோலை உன் கையிற் கொண்டுபோய் அற்புதங்களைச் செய்யென்றார்.

(யாத். ச. கஎ.

எரு. மறுபடியும் யெகோவா மோசேயுடனே உன் பிராணனைச் சேதப்படுத்தத் துணிந்த மனுஷர் இறந்துபோனார்கள். நீ அஞ்சாமல் எகிப்துக்குப்போ என்று சொல்ல, மோசே எத்திரோவிடத்தில் உத்தரவுபெற்றுத் தன் மனைவியையுந் தன்புத்திரர்களையும் அழைத்துக்கொண்டு, தேவ தண்டத்தையுங் கையில் எடுத்துப் பிரயாணமாய்ப் போனான். அப்பொழுதும் யெகோவா மோசேயைச் சந்தித்து, நான் உனக்குக் கற்பிக்கிற அற்புதங்களைப் பார்வோனுடைய சமுகத்திற் செய். அவனுடைய மனங்கடினப்படும். சனங்களை விடான். அப்பொழுது நீ பார்வோனைச் சேர்ந்து, இஸ்ரவேல் என் சேஷ்ட புத்திரன். எனக்குச் சேவைசெய்ய அவனைவிடு. விடாயேயாகில் நான் உன் சேஷ்ட புத்திரனையே சங்கரிப்பேன் என்று யெகோவா சொன்னாரென்று சொல்லென்றார்.

(யாத். ச. உரு.

எசு. அதன் பின் யெகோவா ஆரோனைச்சந்தித்து, நீ மோசேயிடத்துக்குப்போ என்று க

---

* ரோமர் கூ. ௩எ. ஈஅ. சங்கீதம். ஈ௫. உசு.

ட்டளையிட, அவனும் மோசேயண்டைபோய் நடந்த சங்கதிகள் முற்றையும் அறிந்து கொண்டு, இருவருங்கூடி எகிப்துக்குப்போய் இஸ்ரவேலின் கோத்திரத்தலைவரை ஒருங்குகூட்டி, யெகோவா இஸ்ரவேலின்மேற் கடாட்சம்வைத்ததையும், அவர் அற்புதங்களைச் செய்யவரங் கொடுத்ததையும் அறிவித்தார்கள். இஸ்ரவேலரும் நம்பினார்கள். (யாத் ச. உக.

எஎ. பின்பு மோசேயும் ஆரோனும்பார்வோனிடத்திற்போய், நாங்கள் வனாந்தரத்தில் யெகோவாவுக்காராதனை செய்யாதிருந்தால் அவர் எங்களைக் கொள்ளை நோயினாலும் யுத்தத்தினாலும் வாதிப்பார். ஆகையால் நீர் எங்களை அனுப்பிவிடுமென்று கேட்டார்கள். அதற்குப் பார்வோன் நான் யெகோவாவையும் அறியேன். உங்களைவிடுவதுமில்லை. நீங்களும்போய்ச் சுமையெடுங்களென்றான். பின்பு அவன் தன்னுடையகண்காணிகளை அழைத்து இந்தச் சோம்பருக்கு நீங்கள் வைக்கோல் கொடுக்கவேண்டாம். அவர்கள் தாங்களே வைக்கோலைச் சம்பாதித்து முன்போலச் செங்கல்தரும்படி கட்டளையிடுங்களென்றான். (யாத். ரு. க.

எஅ. கண்காணிகளும்அந்தப்படியேகட்டளையிட்டதினால் இஸ்ரவேலர் முந்தின வீதமாய்ச் செங்கல் ஒப்பிக்கக் கூடாமல் அடிக்கப்பட்டார்கள். அதினாலே அவர்கள் தங்கள் குறைகளைப் பார்வோனுக்கு முறையிட, பார்வோனும்அவர்களைக் கடிந்து துரத்திவிட்டான். இஸ்

ரவேலரோ மோசேயையும் ஆரோனையுஞ் சந்தித்துக் குறைசொன்னார்கள்.

(யாத். ரு. உக.

எகூ. அப்பொழுது மோசே யெகோவாவை நோக்கி, விண்ணப்பஞ் செய்ய, யெகோவர், பார்வோன் தண்டனைப்பட்டாலன்றிவிடான். நீ இஸ்ரவேலரிடத்திற்குப்போய், உங்கள் பிதாக்களின் தேவனாகிய யெகோவா எகிப்தியருடைய கைக்கு விடுவித்து உங்கள் பிதாக்களுக்கு வாக்குப்பண்ணின கானான்தேசத்தை உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்பாரென்று சொல்லென்றார். மோசேயும் அப்படியே அவர்களுக்கறிவித்தான். அவர்களோ தங்களுக்கு நேரிட்ட துக்கத்தினிமித்தம் அதை மதிக்கவில்லை.　　(யாத். சு. கூ.

அ0. யெகோவா மோசேயுடனே நான் உன்னை ஆரோனுக்கு அதிபனாக்கினேன். உனக்குச்சொல்வதை நீ ஆரோனுக்குச்சொல்லு. ஆரோன் அதைப் பார்வோனுக்குச்சொல்வானாக. நான் பலவகை அற்புதங்களைப் பார்வோனுக்குக் காட்டுவேன். அவன் கடினப்படுவான். எனது கைத்தண்டனையைக் கண்டு நானே யெகோவாவென்று எகிப்தியர் அறிவார்கள் என்றார்.　　(யாத். எ. ரு.

அக. பின்பு மோசேயும் ஆரோனும் பார்வோனுடைய சமுகத்திற்சென்று ஆரோன் தன் கைக்கோலைப் பார்வோனுக்கு முன்பாகப் போட்டான். அது சருப்பமாயிற்று. பார்வோனும் எகிப்தின் மாந்திரியர் தாந்திரியர் முதலிய

வித்தைக்காரருக்குக் கட்டளையிட, அவர்களும் தங்கள் கோல்களைப் பாம்பாக்கினார்கள். ஆரோனுடைய தண்ட சருப்பம் அவர்களுடைய தண்டசருப்பங்களை விழுங்கிற்று. அப்பொழுது பார்வோன் கடினப்பட்டான்.

(யாத். எ. கரு.

அஉ. பின்பு அவர்கள் பார்வோன் நதிக்கு வரும்பொழுது தங்கள்கோலை ஓங்கி ஆற்றின் நீரை அடிக்க, ஆற்றிலும் நீர் நிலைகளிலுமுள்ள சகல நீர்களும் இரத்தமாயிற்று. ஆற்றின் மீன்கள் யாவும் செத்து நாற்றமெடுத்தன.* எகிப்தின் வித்தைக்காரரும் அப்படியே செய்தார்கள். பார்வோனோ மனக்கடினங்கொண்டு வீட்டுக்குத்திரும்பினான். சனங்களோ நதிக்கரையிலே குழிகளைத் தோண்டித் தண்ணீர் அள்ளினார்கள். இதுவே முதலாம் வாதை. (யாத். எ. உச.

அரு. இந்த வேதனைதொடங்கின எழாம் நாளில் ஆரோன் தன் கையிற்கோலை எகிப்தின்நதிகளின் மேலும் நீர்நிலைகளின் மேலும் ஓங்க, தவளைகள் எறிவந்து எகிப்தை மொய்த்துக்கொண்டன.† பார்வோன்மோசேயையும்ஆரோனையும் அழைப்பித்து நீங்கள் இந்தவேதனை நீங்கும்படி உங்கள் தேவனைப்பிரார்த்தியுங்கள். யெகோவாவுக்குப் பலியிட உங்களை அனுப்புவேன் என்றான். பார்வோன் சொன்னபடி மோசேவேண்டுதல் செய்ய, எகிப்தின் தரைகளில்மொய்த்திருந்த தவளைகள் செத்துப்போயின. பார்வோ

---

* சங்கீதம், ாடு. உகூ. † சங்கீதம், ாடு. கூ௰.

னும் சொற்தவறிக்கடினப்பட்டான். இது இ
ரண்டாம் வாதை. (யாத். அ. கரு.

அச. மூன்றுமுறை யெகோவாவின் சொற்
படி ஆரோன் தன் கைக்கோலினுற் பூதுளி
யை அடிக்க, அதுபேன்களாகி எகிப்தின் மனி
தரிலும் மிருகங்களிலும் பற்றிக்கொண்டது.
மாயாவிகள் அப்படிச்செய்யக் கூடாததினுல்
இது தேவவிரல் என்றுர்கள். (யாத். அ. கக.

அரு. நான்காம்முறை யெகோவா விதித்தப
டி கோஷேன்நாடுதவிர எகிப்துத்தேசம் முற்
றும் வண்டுகள் மொய்த்துத் தேசத்தைக் கேடு
படுத்திற்று. அதைக்கண்ட பார்வோன், மோ
சேயையும் ஆரோனையும் அழைப்பித்து, இத்
தேசவிக்கினம் நீங்க உங்கள் தேவனைப் பிரார்
த்தித்து உங்கள் தேவனுக்கு இத்தேசத்திற் பலி
யிடுங்களென்றுன். அதற்கு மோசே நாங்களி
டும்பலி எகிப்தியருக்கு வெறுப்பு. நாங்கள் மூ
ன்று நாள்மட்டும் பயணம்போய் வனத்திலே ப
லியிடுவோமென்றுன். அதற்குப் பார்வோன் நீ
ங்கள் அதிதூரம் போகாமல் வனத்திலே பலியி
டுங்களென்றுன். அதற்குமோசே நீர்சொன்னப
டியே நாம் பிரார்த்திப்போம். பார்வோனுகிய
நீர் வஞ்சியாதிருமென்று சொல்லிப்புறப்பட்டு
ப்போய் யெகோவாவைப் பிரார்த்திக்கத், தேச
த்தின் வண்டுகள் ஒழிந்துபோயின. பார்வோ
ஞே சனங்களைவிட மாட்டேனென்று கடின
ப்பட்டான். (யாத். அ. கூஉ.

அகூ. ஐந்தாம்முறையும் அவர்கள் பார்வோ

---

சங்கீதம், எரு. கூரு.

ணிடத்திற் போய் நீர் எங்களை அனுப்பி விடா திருந்தால் யெகோவாவின் கரம் உங்கள் மிருக சீவன்கள் மேல் வருமென்றூர்கள். அதையும் அவன் மதியாததினுல் மூன்றும்நாளில் இஸ்ர வேலருடைய மிருகசீவன்களொழிய எகிப்திய ருடைய மிருகசீவன்கள் யாவும் கொள்ளைநோ யினல் மாண்டுபோயின. அதைக்கண்டும் பார் வோன் அவர்களை விடவில்லை.

(யாத். கூ. எ.

அஎ. ஆரும்முறையும் யெகோவாகற்பித்தப டி மோசே சூளையின் சாமபலை அள்ளி, வானத் துக்கு நேரே வீசத், தேசத்திலுள்ள மிருகங்கள் மேலும், மனிதர்மேலும், மாயாவிகள்மேலும், எரிகொப்புளங்கள் உண்டாயிற்று. அதற்கும் அவன் விடவில்லை. (யாத். கூ. கஉ.

அஅ. எழாம்முறை யெகோவா நாளையின்னே ரம்மிகவுங் கொடிய கன்மழை எகிப்திலே வரு ஷிக்கப்பண்ணுவேன். ஆதலால் ஆடுமாடு முத லியயாவையும் அவரவரே தன்தன் வீட்டிற் சே ர்த்துக்கொள்ளச் சொல்லுங்களென்று மோசே க்கும் ஆரோனுக்கும் கற்பித்தார். அவர்களும் அப்படியே பார்வோனுக் குஞ் சனங்களுக்கும் அறிவித்தார்கள். யெகோவாவின் வாக்கை ந ம்பிப் பயந்த ஒவ்வொரு மனுஷரும் தன் தன் பணிவிடைக்காரரையும் மிருகங்களையும் வீட் டிலே சேர்த்துக்கொண்டார்கள். தேவவாக்கை மதியாத யாவரும் வெளியிலே விட்டுவிட்டா ர்கள். மறுநாள் மோசே தன் கோலை வானத் துக்கு நேரே உயர்த்த, யெகோவா இடிமுழக்க

த்தையும் கல்மழையையும் தீத்திரளையும் வருவி த்ததினாலே வெளியிலுள்ள மனிதர், மிருகங்கள், பயிர்வகைகள் முற்றும் அழிந்தன.* இஸ்ரவே லரிருந்த கோஷேன் நாட்டில் மாத்திரம் இந்த அழிவில்லை. (யாத். கூ. உசு.

அகூ. அதைக் கண்ட பார்வோன் மோசே யையும் ஆரோனையும் அழைத்து நானும் என்ச னங்களும் துன்மார்க்கர். யெகோவா நீதியுள்ள வர். நான் உங்களைப்போகவிடுவேன்; இடிமுழ க்கமுங்கல்மழையும் ஓயும்படியெகோவாவைப் பிரார்த்தியுங்களென்றான். அதற்கு மோசே நா ன் யெகோவாவைப் பிரார்த்திப்பேன். இந்தவே தனை நின்றுபோம். அதனாற் பூமி யெகோவாவு டையதென்பதை நீர் அறிகிறதேயன்றி நீங்கள் யெகோவாவுக்கு அஞ்சுவதில்லையென்று நான் அறிவேனென்று சொல்லிப் புறப்பட்டு யெ கோவாவை நோக்கி விண்ணப்பஞ்செய்தான். உடனே அந்த வேதனை நின்றுபோயிற்று. பா ர்வோனோ மனக்கடினப்பட்டான்.

(யாத். கூ. ருரு.

கூ0 எட்டாம்முறை மோசேயும் ஆரோனு ம் பார்வோனிடத்திற் போய் நீர் யெகோவாவு க்கு ஆராதனைசெய்ய இஸ்ரவேலரை விடாதிரு க்கில் விட்டில்கள் உமது தேசத்தை மொய்த்து ச் கல்மாரிக்குத் தப்பியிருக்கிற சகலத்தையும் தின்றுவிடும். இதை எபிரேயரின் தேவனாகி ய யெகோவா சொன்னாரென்று சொல்லிப் புற

*சங்கீதம், எஅ. சஉ. சகூ.

ப்பட, பார்வோனுடைய பணிவிடைக்காரர், இராசாவே, இவன் இன்னும் நமக்குக் கண்ணியாயிருக்கவேண்டுவதென்ன? எகிப்து நாசமாயிற்றென்பதை நீர் இன்னும் அறியவில்லையா? இவர்கள் தங்கள் தேவனுக்கு ஆராதனைசெய்ய, அனுப்பிவிடுமென்றார்கள். (யாத். கo. எ.

கூக. அதைக்கேட்ட பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைத்து, நீங்கள் உங்கள்தேவனுக்கு ஆராதனைசெய்யப் போங்கள். அதற்காக யார் யார் போகவேண்டுமென்று கேட்டான். மோசே சகல எபிரேயரும் ஆடுமாடுகளும் போகவேண்டுமென்றான். அதற்குப் பார்வோன் நான் உங்களை விடுவதுபோல யெகோவாவும் உங்களோடிருப்பார். உங்களில் ஆடவர் மாத்திரம்போகலாம். மற்றச் சனங்களும் ஆடு மாடுகளும் போகப்படாதென்றுசொல்லித் துரத்திவிட்டான். மறுநாள் மோசே தேவ கட்டளைப்படி எகிப்தின்மேற் தன் கோலை ஓங்க, அன்றிரவும் பகலும் கீழ்காற்று வீசிற்று. மறுநாள்வைகறையில் விட்டில்கள் வந்து தேசம் முழுதும் பறந்து, சகல பயிர்வகைகளையுங் கனிவகைகளையும் பட்சித்தன.* (யாத். கo. கரு.

கூஉ. அதைக்கண்ட பார்வோன் மோசேயை அழைப்பித்து, நான் உங்களுக்கும் உங்கள் தேவனுக்கும் விரோதமாய்ப் பாவஞ்செய்தேன். இந்தப் பாவத்தை நீங்கள் மன்னித்துத் தேசத்துக்காய் உங்கள் தேவனைப் பிரார்த்தியுங்களென்று இரந்து கேட்க, மோசேயும் அப்படியே பி

* சங்கீதம், சஉ. சஉ.

ரார்த்தித்தான். உடனே மேல்காற்று எழும்பி விட்டில்களை வாரிக்கொண்டு போயின. அப்பொழுதும் பார்வோன் அவர்களை விடவில்லை. (யாத். ௧௦. ௨௦.

கூரு. ஒன்பதாம்முறை மோசே தேவகட்டளைப்படி தன் கையை வானத்துக்கு நேரே நீட்ட, மகா அந்தகாரமான இருள் எகிப்திலே உண்டாயிருந்தது. அதினுமேல மூன்றுநாள் அளவும் ஒருவரையொருவர் காணவுமில்லை.* வேறிடத்துக்குப் போகவுமில்லை. இஸ்ரவேலர் இருந்தஇடங்களில் மாத்திரம் அந்தகாரம் பிடிக்கவில்லை. (யாத். ௧௦. ௨௩.

கூச. அப்பொழுது பார்வோன் மோசேயை அழைப்பித்து, உங்கள் ஆடுமாடுகளை இங்கேவிட்டு, நீங்கள் போய் யெகோவாவுக்கு ஆராதனை செய்யுங்கள் என்றான். மோசே நாம் யாதொன்றையும் விடுவதில்லையென்றான். பார்வோன் நீ என்முகத்தை விட்டகன்றுபோ. இனி என் சமுகத்தில் வந்தாற் சாவாயென்றான். மோசே நானும் இனி உமது முகத்தைக் காண்பதில்லையென்றான். (யாத். ௧௦. ௨௯.

கூடு. பத்தாம்முறை யெகோவா மோசேயுடனே நான் இன்னுமொரு வாதையை எகிப்திலே வருவிப்பேன். அதின்மேற் பார்வோன் உங்களை உங்கள் சம்பத்துக்களுடனே போகவிடுவான். நீங்கள் உங்கள் அயலாரிடத்திற் பொன் வெள்ளிப் பணிகளை வாங்குங்கள். நான் அத்தசாமத்தில் எகிப்துக்கூடாகப் போவேன். எகிப்

* சங்கீதம், ௱ஞ. ௨அ.

தின் இராசாமுதற் குடிகளீறுகவுள்ள ஒவ்வொருவருடைய சேஷ்ட புத்திரரும் சங்காரப்படுவார்கள். அப்படியே மிருகங்களின் தலையீற்றனைத்தும் இறக்கும். ஆகையால் நீங்கள் இந்த மாதம் பத்தாந்தினத்தில் அவரவர் புசிக்கத்தக்க பிரமாணமாக ஒருவருஷத்து ஆட்டுக்கடாக்களை வரித்துவைத்து, இந்தமாதம் பதினலாந்தினத்துச் சாயந்தரத்தில் அதை அறுத்து அதினிரத்தத்தில் எடுத்து, அவரவர்வீட்டு நிலைகளிலேதெளித்து அவ்விரவில் அதன் மாமிசத்தை நெருப்பில் வாட்டிப் புளியாத அப்பத்தோடும் கசப்புள்ள கீரையோடும் புசித்து, மீந்ததைத் தகிக்கவேண்டும்.		(யாத். கஉ. கப.

கூகூ. நீங்கள் அதைப் புசிக்கையில், உங்கள் இடைக்குக் கச்சணிந்து, காலுக்குச் செருப்பிட்டுக், கையிற் கோல்பிடித்துப் புசியுங்கள். அவ்விரவில் நான் எகிப்தின் முதற்பிறப்புக்கள் அனைத்தையும் சங்கரிப்பேன். இந்தத் தினம் உங்களுக்கு ஞாபகக்குறியாகும். இது உங்கள் தலைமுறைதோறும் பஷ்கா உற்சவத் தினமாயிருக்கவேண்டும். ஏழுநாள் அளவும் புளியாத அப்பம் புசிக்கவேண்டும். அவ்வேழுநாளும் போசனபாக வேலையேயன்றி வேறொரு வேலையும் செய்யப்படாதென்றார்.		(யாத். கஉ. கசு.

கூஎ. இதைக் கேட்டு மோசே இஸ்ரவேலரின் கோத்திரத்தலைவரைச் சேர்த்து யெகோவா தனக்கு வெளிப்படுத்தின யாவையும் அறிவிக்க, அவர்கள் தலைதாழ்ந்து வணங்கிக்கொண்டு போய் அந்தப்பிரகாரமே செய்தார்கள். அந்த

நாள் அர்த்தராத்திரியில் யெகோவா எகிப்தின் முதற்பிறப்பு அனைத்தையுஞ் சங்கரித்ததினால் எகிப்து முழுதும் பெரும் புலம்பலுண்டாயிற்று. (எபி. ௰க. உஅ.; யாத். கஉ. ௩௦.

௯அ. உடனே பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து, நீங்கள் உங்கள் ஆடுமாடுகளையுங் கொண்டுபோய், உங்கள் தேவனுக்கு ஆராதனைசெய்யுங்கள். என்னையும் ஆசீர்வதியுங்கள் என்றான். தேசத்துச் சனங்களும் இவர்களைப் புறப்படுத்தத் துரிதம்பண்ணினார்கள். இஸ்ரவேலர் எகிப்தியரிடத்தில் வஸ்திராபரணங்களை வாங்கிக்கொண்டு புறப்பட்டார்கள்.* எகிப்தியர் இஸ்ரவேலரைக்கொண்டு அநீதமாய் வேலைகொண்டதற்கு இது நீதமான சம்பளமாய் முடிந்தது.

௯௯. இவர்களுடனே அனேக அன்னியசனங்களும் ஆடுமாடுகளும்புறப்பட்டன. இவர்கள் எகிப்திலே வாசம்பண்ணின வருஷம் இருநூற்றுப்பதினைந்து. கானானிலிருந்து எகிப்துக்குப் போனசனம், எ௦. இப்பொழுது எகிப்தை விட்டுப் புறப்பட்ட சனங்களில் ஆயுததாரிகள் ஆறிலக்கத்து மூவாயிரத்தைந்நூற்றைம்பதுபேர். ஆபிரகாம் வாக்குத்தத்தம்பெற்ற நாள்முதல்இஸ்ரவேலர் எகிப்தைவிட்டுப் புறப்பட்ட காலம்வரைக்கும் சென்ற வருஷம் நாலூற்றுமுப்பது. (யாத். கஉ. ச௦.

க௦௦. தாற்பரியம். இந்தப் பஸ்காவின் ஆட்டுக்கடா கிறிஸ்துநாதருக்கு முற்குறிப்பாயிருந்த

---

* சங்கீதம் ௱௫. ௩௯, ௩அ. எபிரே. கக. உஅ.

௯. இந்தப்பஷ்கா உற்சவம் இஸ்ரவேலர் எகிப்தின் அடிமைத்தனத்துக்கு நீங்கலான நாள்முதல் கிறிஸ்துநாதர் பரமண்டலத்துக்கு எழுந்தருளிய நாள்வரைக்குஞ் சென்ற ஆயிரத்து ஐந்நூற்றிருபத்திஞன்கு வருஷம் கைக்கொள்ளப்பட்டது. இப்பொழுது இந்தப் பஷ்கா கிறிஸ்துநாதருடைய மாமிசத்தையும் இரத்தத்தையும் நினைவுகூருகிற இராப்போசனமென்கிற நாமத்துடனே வளங்கிவருகிறது.

---

## ச. அதிகாரம்.

இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் புறப்பட்ட நாள்முதற் சலோமோன் தேவாலயங் கட்டுவித்தநாள் வரைக்குஞ் சென்ற, சசஅ. வருஷ சங்கதி.

க. இப்படியே இஸ்ரவேலர் பஷ்காவை ஆசரித்து முடித்துத் தங்கள்சகலசம்பத்துக்களையும் யோசேப்பின் என்புகளையுங் கொண்டு புறப்பட, யெகோவா மோசேயைச் சந்தித்து, நீங்கள் தீவிரித்து மிக்தோலுக்கும் சமுத்திரத்துக்கும் இடையிலே பீயகீரோத்துக்கு முன்பாகச் சமுத்திர்க்கரையிலே பாழயமிறங்குங்கள். பார்வோன் உங்களைத்தொடருவான். அப்பொழுது நானே யெகோவா என்பதை அவனுக்கு அறிவிப்பேனென்ருர். அதைக் கேட்டு இஸ்ரவேலர் திரும்பிப்போய்ச் சமுத்திரக்கரையிலே பாளயமிட்டார்கள்.　　(யாத். கச. கூ.

உ. இஸ்ரவேலர் புறப்பட்ட செய்தியைப் பார்வோன் கேள்விப்பட்டுத்தன்னுடைய இரததுரகபதாதிகளுடனே தொடர்ந்துபோய் இஸ்ரவே

லரை அணுக, அவர்கள் கண்டு பயந்து ஓலமிட்டார்கள். அப்பொழுது யெகோவா மோசேயுடனே, நீ உன் கோலைச் சமுத்திரத்தின்மேல் நீட்டு, அது வழிவிடும். அதின்வழியாய் நீயுஞ்சனங்களும் நடந்துபோங்கள். எகிப்தியரும் உங்களைத் தொடர்ந்து வருவார்கள். நானே யெகோவாவென்பதை அவர்களுக்கறிவிப்பேனென்றார். (யாத். கச. கஅ.

ங. அந்தப்படியே மோசே தன் கையிற்கோலை நாணற்கடலின் மேல் நீட்ட, சமுத்திரம் இரண்டாகப் பிரிந்து இருபுறமும் மதில்போல நின்றது. ஒரு தேவதூதன் அவர்கள்முன் போக, இஸ்ரவேலர் சமுத்திரத்துள் இறங்கி உலர்ந்த தரைவழியாய் நடந்தார்கள். அவர்கள் பிறகே பார்வோனுஞ் சேனைகளும் சமுத்திரத்திலிறங்கிப்போனார்கள். இஸ்ரவேலருக்கு முன்னே போன தூதன் விலகி அவர்களுக்குப் பின்னே வர, இரு சேனைக்கும் இடையே மேகத்தூணும் வந்தது. அவ்விரவு இஸ்ரவேலருக்குப் பகலாயிருந்தது. எகிப்தியருக்கோ அந்தகாரமாயிருந்தது. (யாத். கச. உ0.

ச. அந்த இரவு விடிய எகிப்தியருடைய தேர்க்கால்கள் யாவுங் கழன்றன. அதைக்கண்ட எகிப்தியர் யெகோவா இஸ்ரவேலருக்காகப் போராடுகிறார். நாம் அவர்களைவிட்டுத் திரும்புவோமென்று யோசிக்க மோசே தன் கையிற்கோலைத் தேவகட்டளைப்படி சமுத்திரத்தின்மேல் நீட்டினான். சமுத்திர சலம்புரண்டு பார்வோனையுஞ் சேனையையும் மூடிக்கொண்டது. இஸ்

ரவேலர் போனஇடமோ முன்போலப் பிரிந்துவழிவிட்டுமெதிலாய் நின்றது.* (யாத். கச. உகூ.

ரு. இப்படியே யெகோவா தங்களை இரட்சித்து எகிப்தியரைப் பட்சித்ததை இஸ்ரவேலர் கண்டு யெகோவாவையும் மோசேயையும் விசுவாசித்தார்கள். கரையேறினவுடனே ஆரோனுடைய சகோதரியாகிய மிரியம் மிருதங்கத்தை எடுத்துப்பாட, மறு ஸ்திரிகள் ஆனந்த நடனஞ்செய்ய, மோசே முதலிய சகலரும் களிகொண்டு யெகோவாவைப் பாடுங்கள். அவர் மகிமையோடு சயங்கொண்டார். குதிரையையும் குதிரைவீரரையும் சமுத்திரத்திலே தள்ளிவிட்டார். அவரே என் பலம். அவரே என் கீதம். அவரே என் ரட்சகர். அவரே என் பிதாக்களின் தேவன். நான் அவரையே வாழ்த்துவேன். அவரே யெகோவா. யெகோவாவே, உமது வலக்கரம் சத்துருவைச் சின்னபின்னப்படுத்திற்று. உமது மாற்றுரைக் கவிழ்த்தீர். உமது கோபம் வைக்கோலைப்போல அவர்களைப் பட்சித்தது. உமது சுவாசத்தினுலே சலம் குவிந்துநின்றது. ததும்புகிற வெள்ளம் உறைந்துபோயிற்று. சத்துருக்கள் சமுத்திரத்தில் ஈயம்போலத் தாழ்ந்தார்கள். பராக்கிரமசாலிகளுக்குள் யார் உமக்கு ஒப்பு? நீர் உமது வலக்கையை நீட்ட பூமி அவர்களை விழுங்கிற்று. உமது செயத்தைக் கேட்கும்பொழுது சனங்கள் நடுங்குவார்கள். பெலிஸ்தியர் திகிலடைவார்கள். எதோமியர் கலங்குவார்கள், மோவா

* சங். ௭௬. அ, கக. க. கொரி. ம. க, உ.

பியர் விதிர்விதிர்ப்பார்கள், கானானியர் பயந்து கரைவார்கள். நீர்மீட்டுக்கொண்ட சனங்கள் கடந்துபோகுமட்டும் அவர்கள் கல்லைப்போல அசைவற்றிருப்பார்கள். யெகோவா தாம்மீட்டவர்களைத் தமது சுதந்தர பூமியில் நாட்டி அரசாளுகிறார் என்றும் சல்லாபகீதம் பாடினார்கள். (யாத். கரு. உக.

சு. அவர்கள் செங்கடலைவிட்டு ஊர்வனத்திற் சேர்ந்து தண்ணீர் கிடையாமல் மூன்றுநாள் நடந்து மாராவிற் சேர்ந்து அதின் சலமுங் கசப்பாயிருந்ததினாற் குறைகூறினார்கள். மோசே யெகோவா கற்பித்தபடி ஒருமரத்தை வெட்டி, அந்தச் சலத்திலிட அது நல்ல சலமாயிற்று. அவர்கள் குடித்துத் தாகந்தணிந்து ஏலீமிற் சேர்ந்தார்கள். (யாத். கரு. உஎ.

எ. பின் ஏலீமைவிட்டு இரண்டாம் மாதம்பதினைந்தாந்திகதி சீன்வனத்திற் சேர்ந்தார்கள். அங்கே அவர்கள் போசனம் இல்லாமற் குறைவுபட்டு,நாங்கள் எகிப்திலே திருத்தியாய்ப் புசித்திருந்து யெகோவாவின் கையால் இறந்துபோனால் நலம். நீங்கள் எங்களைப் பட்டினியினாற் கொல்லும்படிக்கோ கொண்டுவந்தீர்களென்று குறைகூறினார்கள். அப்பொழுது அவர்களுணவுக்காக வானத்தினின்று கொத்தமல்லியளவு பருமையும் வெண்மைநிறமும் அதிக தித்திப்புமுள்ள ஆகாரம் வருஷிக்கப்பட்டது. அவர்கள் அதற்கு மன்னாவென்றுபெயரிட்டு அதிலே அன்றன்று தாங்கள் புசிக்கத்தக்கமட்டுக்குச் சேர்த்துவைத்துப் புசித்தார்கள். மறுநா

ளைக்குச் சேடமாய் வைத்தால் அதிலே கிருமி யுண்டாய்க் கெட்டுப்போம். ஏழாம்நாள் மன்ஞ வருஷமில்லாமையால் ஆரும் நாளில்இருமடங்காகச் சேர்த்துவைத்து ஏழாம் நாளிலே புசித்தார்கள். அன்றையில் மன்ஞமாத்திரம் கிருமிபிடித்ததுமில்லை, பதன் அழிந்ததுமில்லை. (யாத். கசு. உஎ.

அ. இந்தவிதமாய் மன்ஞ இஸ்ரவேலர் கானுனுக்குச் சேரும்வரைக்கும் சென்ற நாற்பது வருஷம்மட்டாக வருஷிக்கப்பட்டது. இந்த மன்ஞவில் ஒரு ஓமர் மன்ஞவை ஒரு பாத்திரத்திற் சேர்த்து யெகோவாவின் சன்னிதியில் வைத்தார்கள். பின்பு அது சாட்சிப்பெட்டிக்குள் வைக்கப்பட்டது. (யாத். கசு. ௩௫.

கூ. பின்பு இஸ்ரவேலர் சீன்வனத்தை விட்டு இரிவீதீமிற் சென்று கூடாரமிட்டார்கள். அது நீரில்லாதவறுங் கானுயிருந்ததினுலே தண்ணீர் கிடையாமற் சனங்களும் ஆடுமாடுகளும் தவித்துவருந்தி மோசேயுடனே குறைகூற மோசே தேவகட்டளைப்படி ஓரேப் மலையிற் தன் கையிற் கோலினுலே அடித்தான். அப்பொழுது அந்த மலையிலிருந்து தண்ணீர் புறப்பட்டது. அதிலே அவர்களுங் குடித்து, மிருகங்களுக்கும் ஊட்டினுர்கள். அதினுல் அதற்கு மோசே * மாசா என்றும் மேரிபா† என்றும் பேரிட்டான். (யாத். கஎ. எ.

கO. அப்பொழுது அமலேக்கியர் இஸ்ரவேலருடனே யுத்தஞ்செய்யும்படி இரிவீதீமிலேவ

* மாசா. சோதனே. † மேரிபா, விடாமுரண்.

ந்து நிற்க, யோசுவாவுஞ் சனங்களும் போய் எ
திர்த்தார்கள். மோசேயும் ஆரோனும் ஊர் என்
பவனும் பிரார்த்திக்கும்படி மலையில் ஏறினார்க
ள். மோசே கோல் பிடித்த கை சோர்ந்து தாழ
அமலேக்கியர் செயமடைந்தார்கள். அவன் தன்
கையை உயர்த்த இஸ்ரவேலர் செயமடைந்தா
ர்கள். அதனால் மற்றையிருவரும் அவன்கை
யைத் தாங்கிநிற்க அவன் விண்ணப்பத்தில் நி
லைகொண்டிருந்தான். மற்றவர்கள் யுத்தஞ்செ
ய்தார்கள். அஸ்தமனமாகுமட்டும் யுத்தஞ்செய்
து அமலேக்கியர் தோற்று ஓடினதினால் மோ
சே அந்த இடத்தில் ஒரு பலிபீடத்தைக் கட்டி
அதற்கு யெகோவா*நிசியென்று பெயரிட்
டான். (யாத். கஎ. கசு.

கக. அவர்கள் யுத்தத்தைவிட்டு வனத்திலே
பாளயமிட்டிருக்கையில், மோசேயின் மாமனா
கிய எத்திரோ அவன் மனைவியாகிய சிப்பொரா
ளையும் அவன் மக்களாகிய கெர்ஷோமையும் எ
லீயேசரையும் அழைத்துக்கொண்டு வந்து மோ
சேயின் கூடாரத்திற் சென்று, எகிப்திலே யெ
கோவாசெய்த அற்புதங்கள் முழுவதையும் மோ
சே சொல்லக் கேட்டுச் சந்தோஷப்பட்டு, உங்
களை எகிப்தியருடைய கைக்கும் பார்வோனு
டையகைக்கும் தப்புவித்த யெகோவாவே சரு
வேஸ்பரன் என்று சொல்லி அவரைத் துதித்
தான். (யாத். கஅ. கஉ.

கஉ. மறு நாள் மோசே சனங்களுடைய நி
யாயம் விசாரிக்கும்படிக்குக் காலமே துவங்கி

---

*யெகோவா நிசி, யெகோவாவின் செயத்துவசம்.

அந்திபடுமட்டும் தாமதித்திருந்ததை எத்திரோ கண்டு, மோசேயுடனே நீ இப்படிச் செய்வது தகாது. நீ சனங்களுக்குப் பிரமாணங்களைக் கற்பி. அதற்கு வழுவினவர்களை விசாரிக்கும்படி பிரபுக்களையும் நிசமி. அவர்கள் விசாரிக்கட்டும். அவர்களுக்குமேற்பட்ட பெருங்காரியம் மாத்திரம் உன்னிடத்தில் வரட்டும் என்றான்.

(யாத். கஅ. உரு.

கரு. அதைக் கேட்டு மோசே சனங்களுக்குட் சாமர்த்தியமுள்ளவர்களைத் தெரிந்து பிரபுக்களாகவைத்தான். அவர்கள் சொற்ப காரியங்களைத் தாங்களே தீர்மானம்பண்ணி மேற்பட்ட காரியங்களை மோசேவசத்தில் ஒப்புவித்தார்கள். எத்திரோவோ திரும்பித் தன்னூருக்குப் போனான். (யாத். கஅ. உஎ.

கச. அவர்கள் அவ்விடம்விட்டு மூன்றும்மாதம் முதலாந் தினத்திற் சீனாய் வனத்தைச் சேர்ந்து பாளயமிறங்கினார்கள். அப்பொழுது யெகோவா மோசேக்குத் தரிசனையாகி, நான் எகிப்தியருக்குச் செய்ததையும், கழுகுகள் தங்கள் குஞ்சுகளைத் தங்கள் சிறகுகளிலே தாங்குவதுபோல உங்களைத் தாங்கிவந்ததையும் நீங்கள் கண்டீர்கள். நீங்கள் என் வாக்குக்கு அமைந்து என் உடன்படிக்கையைப் பற்றிநடந்தால், நீங்களே என் பொக்கிஷமும், எனக்குரிய பரிசுத்தசாதியும் ஆசாரிய ராச்சியமும் ஆவீர்களென்று சனங்களுக்கு அறிவிக்கச் சொன்னார். அந்தப்பிரகாரம் மோசே சனங்களுக்கு அறிவிக்கச் சன

ங்கள் யெகோவா நமக்குக் கற்பிக்கிறவைகளை எல்லாம்செய்வோமென்றார்கள். (யாத். ௧௯. அ.

௧௫. யெகோவா மோசேயுடனே நாமிதினின்றும் மூன்றாம் நாளில் இந்த மலையிலே பிரஸ்தாபமாவோம். யாவருந் தங்களைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு எக்காளத்தொனியைக் கேட்கும்பொழுது மலைக்குச் சமீபத்தில் வரலாம். ஒருவர் இதிலேறவுந் தொடவும்படாதென்று அறிவிக்கச் சொன்னார். அதை அவன் அவர்களுக்கு அறிவிக்க அவர்களுந் தங்களைப் பரிசுத்தப்படுத்தி மூன்றாம்நாளுக்காயத்தமாயிருந்தார்கள். (யாத். ௧௯. ௧௫.

௧௬. மூன்றாம்நாள் விடிய, யெகோவா மலையிலே தோன்றினார். மலையின் மேற் கார்மேகமும் மின்னும் முழக்கமும் எக்காளத் தொனியுந் தோன்றின. புகைக்காடும் பரந்தது. மலையும் அதிர்ந்தது. அப்பொழுது யெகோவா மோசேயுடனே நீ போய்ச் சனங்கள் மலையை அணுகாதபடி உறுதியாய் எச்சரித்துவாவென்று கற்பித்தபின்,* (யாத். ௧௯. உ௫.

௧. நீ அடிமையாயிருந்த இடமாகிய எகிப்து தேசத்தினின்றும் உன்னைப் புறப்படச்செய்த யெகோவாவாகிய நானே உன்தேவன். என்னையன்றி நீ வேறுதேவர்களைப் பற்றிக்கொள்ளவேண்டாம்.

உ. தொழிற்படுத்திய எந்த விக்கிரகத்தையாகிலும் மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமிக்குக்கீழே சலத்திலுமுள்ள எந்த வஸ்துவி

* எபிரேயர் ௧உ. ௧அ, உ௧.

ன் பிரதிரூபத்தையாகிலும் நீ உனக்குண்டாக்க வேண்டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவுஞ் சேவிக்கவும் வேண்டாம். உன் தேவனும் யெகோவாவுமாகிய நான் பிதாக்கள்செய்த அதிக்கிரமத்தை என்னைப் பகைக்கிற பிள்ளைகளிடத்தில் மூன்று நான்கு தலைமுறை வரைக்கும் விசாரிக்கிற எரிச்சலுள்ள தேவனாயிருக்கிறேன். என்னிடத்தில் அன்புவைத்து என் கட்டளைகளைக் காத்துக்கொள்ளுகிறவர்களுக்கு ஆயிரந்தலைமுறை வரைக்கும் தயை செய்கிறவராயிருக்கிறேன்.

௩. உன் தேவனாகிய யெகோவாவின் நாமத்தை வீணாய் வழங்காயாக. யெகோவா தமது நாமத்தை வீணாய்வழங்குகிறவனைத் தண்டியாமல் விடார்.

௪. ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்கநினைப்பாயாக. ஆறுநாளும் நீ வேலைசெய்து உன்சகல கிரியைகளையும்நடத்துவாயாக. ஏழாம்நாள்உன் தேவனாகிய யெகோவாவின் ஓய்வுநாள். நீயானாலும், உன் புத்திரனானாலும், உன் புத்திரியானாலும், உன் பணிவிடைக்காரனானாலும், உன்பணிவிடைக்காரியானாலும், உன் மிருகசீவனானாலும், உன் வாசல்களிலுள்ள பரதேசியானாலும், அதிலே யாதொரு வேலையுஞ் செய்யவேண்டாம். யெகோவா வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள யாவையும் ஆறுநாளிலுண்டாக்கி ஏழாம்நாளில் ஓய்ந்திருந்தார். அதினால் யெகோவா ஓய்வுநாளைஆசீர்வதித்து அதைப் பரிசுத்தப்படுத்தினார்.

ரு. உன் தேவனாகிய யெகோவா உனக்கு அளிக்குந் தேசத்தில் உன் ஆயுசு நீடித்திருப்பதற்கு உன் பிதாவையும் மாதாவையும் கனம்பண்ணுவாயாக.*

சு. கொலை செய்யாயாக.†

எ. விபசாரஞ் செய்யாயாக.‡

அ. களவுசெய்யாயாக.

கூ. பிறனுக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சிசொல்லாயாக.

கO. பிறனுடைய வீட்டை இச்சியாயாக. பிறனுடைய மனைவியையும், பணிவிடைக்காரனையும், பணிவிடைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பிறனுடைய மற்றெந்தப் பொருளையும் இச்சியாயாக என்று பத்துவார்த்தைகளை அருளிச்செய்தார். (யாத். உO. க. கஎ.

கஎ. மேலும் யெகோவா நான் வானத்திலிருந்து உங்களுடனே பேசினதைக் கண்டீர்கள். நீங்கள் என் சமுகத்திலே பொன் வெள்ளி விக்கிரகங்களை உண்டாக்கிவைக்கவும் உளியிட்ட கற்களினாலே எனக்கு வேதிகையை உண்டாக்கவும் வேண்டாம். நீங்கள் மண்ணினாலே வேதிகையை உண்டாக்கி அதிலே நமக்குப் பலிகளைச் செலுத்துங்கள்.

நீங்கள் எபிரேயரில் ஒருவனை அடிமையாகக்கொண்டால் அவன் எழாம் வருஷத்திலே விடுதலையாகவேண்டும். அவன் தன் எசமானனுடைய அடிமைகளில் ஒருத்தியை விவாகம்பண்

* எபேசி. சு. உ, ங. † மத். ரு. உக, உஉ. ‡ மத். ரு. கஎ. உஅ.

ணியிருந்தால் அவளும் அவளுடைய பிள்ளைக ளும் எசமானிடத்தில் அடிமையாயிருக்க, அவ ன் மாத்திரம் விடுதலையாக வேண்டும். அப்ப டிப்போக அவனுக்கு மனமில்லாதிருந்தால் நி யாயாதிபதி முகதாவிலே காது குற்றப்பட்டு எ ப்போதும் அடிமையாயிருக்கலாம்.

ஒருவனுடைய புத்திரியை மற்றொருவன் அ டிமையாகக்கொண்டிருந்தால் அவள் அவனுக் கு அடிமையாகவே இருக்கவேண்டும். அவளை த் தான் விவாகம்பண்ணுவேனென்று வாக்குப் பண்ணியும் பின்பு அதற்குப் பிரியமற்று இரு ந்தானாகில் அவள் விடுதலையாக வேண்டும். அவன் அவளைத் தன் மகனுக்கு விவாகம் செய்ய வாக்குப்பண்ணியும் அப்படிச் செய்யா தேபோனால் அவன் அவளைத் தன் புத்திரியை ப்போலப் பாவித்து அவளுக்கு அன்னம் வஸ் திரம் விவாகமென்னும் மூன்றையும் நிருவகித் து வைக்கவேண்டும்.

ஒருவன் மற்றொருவனை மனதார அடித்துக் கொன்றால் அவன் கொலையுண்ண வேண்டும்.

ஒருவன் மற்றொருவனைக் கைமோசமாய் அ டித்துக்கொன்றால் அவன் அடைக்கலப் பட்ட ணத்துக்கு ஓடவேண்டும். ஒருவன் மற்றொரு வனைக்கொல்ல எண்ணிக் கபடமாய் வந்தால் அவனைப் புறம்பே கொண்டுபோய்க் கொலை செய்ய வேண்டும்.

பிதாமாதாவை அடிக்கிறவனும் அவர்களை நி ந்திக்கிறவனும் மனிதரைத் திருடி விற்கிறவனு ம் கொலையுண்ணவேண்டும்.

சீவனுக்குச் சீவனும் கண்ணுக்குக் கண்ணும், கைக்குக் கையும், காலுக்குக் காலும், இழக்கவேண்டும்.* இரணத்துக்கு இரணமும், தழும்புக்குத் தழும்பும், பெறவேண்டும்.

ஒரு மாடு மற்றொருவனைத் தாக்கிக் கொன்றால் அந்தமாடு கல்லெறியுண்டு சாகவேண்டும். ஒரு மாடு வழக்கமாய் முட்டுகிறதாயிருக்க அறிந்திருந்த எசமான் அதைக் கட்டிவையாமல் அவிழ்த்துவிட, அது ஒருவனைத் தாக்கிக்கொன்றால் அந்தமாடும் அதின் எசமானனும் கொலையுண்ண வேண்டும்.

ஒருவன் ஆடுமாடுகளைத் திருடினால் நான்கு மடங்கு இறுக்கவேண்டும்.

ஆடுமாடுகளை விட்டுப் பயிர்ச்சேதம்பண்ணினவனும் அக்கினியைக் கொழுத்திப் பயிரைக் கெடுத்தவனுஞ் சேதப்பட்டளவுக்கிறுக்க வேண்டும்.

ஒருவரிடத்தில் அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருள்களைத் திருடினவனும் திருடப்பட்ட பொருளை வைத்திருக்கிறவனும் இருமடங்கு இறுக்கவேண்டும்.

ஒருவனுடைய ஆடுமாடு முதலிய மிருகங்கள் மற்றொருவன் வசத்தில் விட்டிருக்கையில் அவைகள் கைதப்பிப்போய்விட்டாலும், செத்துப்போனாலும், பீறுண்டுபோனாலும் பிரதி அளிக்க வேண்டுவதில்லை. களவுபோய்விட்டால் பிரதி அளிக்கவேண்டும்.

ஒருவன் மற்றொருவனிடத்தில் இரவலாய் வா

* மநுதேயு, ௫. ௯௮

ங்கின உடமை உடையவனுடைய சமுகத்திலி ருக்கஅது சேதப்பட்டால் வாங்கினவன் இறுக் கவேண்டுவதில்லை. உடையவன் இல்லாதிருக் கையிற் சேதப்பட்டால் இரவல் வாங்கினவன் இறுக்க வேண்டும்.

சூனியக்காரரும், மிருகமைதுனரும், அன்னி ய தேவர்களுக்குப் பலியிடுகிறவர்களும் கொ லையுண்ண வேண்டும்.

பரதேசிகளையும், அநாத பிள்ளைகளையும் உப த்திரவப்படுத்தவும், தரித்திரசகோதரனிடத்தில் வட்டிவாங்கவும், அதிபதிகளை நிந்தித்துத் தூஷ ணிக்கவும், பழிச்சொல்லை அங்கிகரிக்கவும், து ர்ச்சங்கத்திற் சேரவும், பொய்ச்சாட்சி சொல்ல வும், தீயர் மிகுசனர் என்று அவர்களைப் பற்றிக் கொள்ளவும், வழக்கோரஞ்சொல்லவும்,அந்நிய தேவநாமங்களைமதிக்கவும் வேண்டாம். வருஷ த்தின் முதலாம்மாதம் பதினன்காந் திகதிபுளிப் பில்லா அப்ப உற்சவத்தையும், அதற்கு இரண் டாந் தினத்தில் முதற்பல உற்சவத்தையும், அ தினின்றும் எழு வாரங்களிற் பின் அறுப்பி ன் உற்சவத்தைபுங் கொண்டாட வேண்டும். முதற்பலன்களையும் முதற் புத்திரனையும் ஆடு மாடுகளின் முதலீற்றையும் தேவனுக்கு ஒப்பு வியென்று சற்பித்தார். இந்த அறுப்பின் உற்ச வத்துக்கேபெந்திக்கோஸ்தென்றும்பெயர். இ ந்த உற்சவத்தைக் கொண்டாடுவதற்கே சகல தேசத்து யூதச்சபையாருங் கூடிவந்திருக்கையி ல் அப்போஸ்தலருடைய சரித்திரம், உம். அதி காரத்திற் சாண்கிற பரிசுத்தாவியின் அபிஷே

கம் நடந்தது. தேவ சன்னிதியில் வரும் எந்த மனுஷனும் வெறுங்கையோடே வரவேண்டா மென்றும், ஆண்மக்கள் யாவரும் தேவசன்னிதியில் வருஷத்தில் மூன்றுமுறை சேரவேண்டுமென்றும், புளிப்புள்ள அப்பத்துடனே பலியின் இரத்தத்தை நைவேத்தியம்பண்ணவேண்டாமென்றும், ஆட்டுக்குட்டியை அதின் தாயின்பாலிற் சமைக்கவேண்டாமென்றும் சொன்னார்.
(யாத். உ0. கஅ., யாத். உரு.கசு.

கஅ. அதுவுமன்றி கானானுக்கு உன்னைக்கொண்டுபோகும்படி ஒரு தூதனை உனக்கு முன்னே அனுப்புகிறேன். அவருடைய வாக்குக்கு எச்சரிக்கையாயிரு. அவரே உன்னை வழிநடத்தி, எமோரியர், எத்தியர், பெரிசியர், கானானியர், ஈவியர், எபூசியர், என்னும் அறுவகைச் சாதியாருமிருக்கிற கானானுக்குக்கொண்டுபோவார். நாம் அவர்களைச் சங்கரிப்போம். நீ அவர்கள் தேவர்களை நமஸ்கரியாமலும், சேவியாமலும், அவர்கள் கிரியைகளைப் பின்பற்றாமலும்விட்டு, அவர்களுடைய சிலைகளைத் தகர்த்து, உங்கள் தேவனாகிய யெகோவாவைச் சேவியுங்கள். அவர் உங்களை ஆசீர்வதிப்பார்.
(யாத். உரு. உரு.

கசு. அப்பொழுது கருஅழிவதும், மலடுகளும், அற்ப ஆயுசு உள்ளதும் உங்களுக்குள் இராது. சகல சனங்களும் உங்களுக்கு அஞ்சுவார்கள். செங்கடல்தொடங்கிப்பெலிஸ்தியருடைய சமுத்திரம்வரைக்கும் வனாந்தரந்தொடங்கி நதிவரைக்கும் உங்கள் ஆளுகையாகும். நீங்கள் அ

வர்களோடே சங்காத்தமாவதும் அவர்கள் தேவர்களைச் சேவிப்பதும் உங்களுக்குக் கண்ணியாகும் என்றார்.* (யாத். உகூ. கூகூ.

உ0. அப்பொழுது மோசே போய் யெகோவா இட்ட பிரமாணங்கள் முற்றையுஞ் சனங்களுக்கறிவிக்க, சனங்கள் யாவரும் நாம் யெகோவாவின் வாக்குகள் யாவற்றையும் கைக்கொள்ளுவோமென்று வாக்குப்பண்ணினார்கள். (யாத். உச. கூ.

உக. மோசே மலையடிவாரத்தில் ஒரு வேதிகையையுண்டாக்கிப் பன்னிரண்டு தூண்களை எழுப்பி அதிலே யெகோவாவை ஆராதித்து, உடன்பிடிக்கையைப் பிரதிஷ்டையாக்கி வாசித்ததுமன்றி, அதைப் பிரதிஷ்டைபண்ணின இரத்தத்தை எடுத்துச் சனங்கள் மேலே தெளித்து, இதுவே யெகோவாவும் நீங்களும்பண்ணின உடன்படிக்கையின் இரத்தமென்றுசொன்னான்.† (யாத். உச. அ.

உஉ. பின்பு மோசே ஆரோனையும், நாதாபையும், அபியூவையும் முதியோரில் எழுபதுபெயரையுங் கூட்டிக்கோண்டு மலையில் ஏறிப்போகையில், யாவரும் அவரைத் தரிசித்தார்கள். அவருடைய பாதத்தின் கீழ்த் தளம் நீல ரத்தினம் அழுத்திய பழிங்குக்கொப்பாக ஒளியுள்ளதாயிருந்தது. அப்பொழுது யெகோவா மோசேயுடனே, நீமலையைச் சுற்றி உச்சிக்குவா. அங்கே நான் உனக்கு வேத நூலையும், கற்பனைகளையும் எழுத்திலே தருவேன். நீ அவைகளைச் சனங்

* எபிரேயர் கூ. ககூ, உ0. † க. இராசாக்கள் ச. உக, உச.

களுக்குப் போதியென்று சொல்ல, மோசேயும் யோசுவாவும் மலையுச்சிக்கு ஏறினார்கள். உடனே ஒரு மேகம் மலையை மூடிற்று. யெகோவாவின் மகிமைப் பிரகாசம் சீனாமலையின் மேலே காணப்பட்டது. (யாத். உச. கரு.

உரு. அதுஇஸ்ரவேலருடைய கண்களுக்கு அக்கினிச் சுவாலை போலிருந்தது. மோசே நாற்பது நாள் இராப்பகல் அங்கே தங்கினான். அப்பொழுது யெகோவா, இங்கே நான் உனக்குக் காண்பிக்கிற பிரகாரம் எனக்கொரு ஆவாசத்தை உண்டுபண்ணி, அதிலே வைக்கும்படி இரண்டரைமுழ நீழமும், ஒன்றரைமுழ அகலமும், ஒன்றரைமுழ உயரமுமுள்ள ஒரு பெட்டியைச் செய்து, அதன் அக்ம்புறம் இரண்டையும் பொற்றகட்டால் மூடி, அதன் நான்கு பக்கத்திலும் பொன்னினாலே திரணைகளை வகுத்து, அதன் நான்கு மூலைகளிலும் பொன் வளையங்களைச் சேர்த்து, மரத்தினாலே காத்தண்டுகளைச் செய்து, அவைகளைப் பொற்றகட்டால் மூடி வளையங்களிலே செருகி, நான் உனக்குத் தரும் சாட்சிப்பத்திரத்தை அந்தப்பெட்டிக்குள்வை.

(யாத். உரு. ககூ.

உசா. மேலும் இரண்டரை முழ நீழமும் ஒன்றரைமுழ அகலமும் கொண்ட ஒருகிருபாசய பீடத்தைப் பொன்னினாலே செய்து, அந்தப் பெட்டியின்மேல் வைத்து, அதன் மேற் பொன்னினால் இரண்டுகெருபிகளைச் செய்து அவைகளை ஒன்றுக்கொன்று எதிர் முகமாய் வை. அந்தக் கிருபாசயத்தின் மேல் நான் உனக்குத் தரிசன

மாகிப் பேசுவேன் என்றார். (பிற்காலத்தில் அதின் சமுகத்தில் ஆரோனுடைய தளிர்த்த கோலும் மன்னாவும் வைக்கப்பட்டன.)

(யாத். உரு. உஉ.

உரு. அதுவன்றி இரண்டுமுழ நீளமும், ஒரு முழ அகலமும், ஒன்றரை முழ உயரமுமுள்ள ஒரு பீடத்தை மரத்தினாலே செய்து அதையும் பொற்றகட்டால் மூடி, அதிலே நாலு பொன் வளையங்களைச் சேர்த்து, அவ்வளையங்களிலே பொற்றகட்டால் மூடப்பட்ட காத்தண்டுகளைக்கடாவிவை. அந்தப் பீடத்தின்மேற் பொன்னினாலே செய்யப்பட்ட கரண்டிகள், கிண்ணங்கள், கெண்டிகள் முதலிய கலங்களையும், சமுகத்தப்பத்தையும், அதற்கு நேரே கிளைவிளக்கையும் வைக்க வேண்டும்.

(யாத். உரு. ௩௦

உசு. மேலும் நீமுப்பதுமுழ நீளமும், பத்து முழ அகலமுமுள்ள ஒரு ஆவாசத்தைச் செய்து, அதில் பத்துமுழங்கொண்ட ஸ்தானத்தைத் திரைச்சேலையால் மறைத்து அதற்குட் சாட்சிப் பெட்டியையும், சாட்சிப் பெட்டியின்மேற் கிருபாசயத்தையும் வை. அந்த ஆவாசத்தின் திரைச்சேலைக்கு வெளியேஇருபதுமுழ நீளமும், பத்துமுழ அகலமுமுள்ள ஸ்தானத்தைச் செய்து அதிலே சமுகத்தப்ப பீடத்தையும், பீடத்துக்கெதிரே ஆவாசத்தின் தென் புறத்தே கிளைவிளக்கையும் வை.  (யாத். உசு. ௩௫.

உஎ. அதைவிட ஐந்துமுழநீளமும், ஐந்துமுழ அகலமும், மூன்றுமுழ உயரமுமுள்ள ஒரு

பலிபீடத்தையும் உண்டாக்கி அதின் நான்கு மூலைகளிலும், நான்கு கொம்புகளை இசைத்து, அவைகளைப் பித்தளைத் தகட்டால் மூடு. அதற்குச் சாம்பற் பாத்திரம், அக்கினிப்பாத்திரம், கரண்டி, முட்கருவி முதலிய சகலத்தையும் பித்தளையினுற்செய்து, பலிபீடத்தின் கீழ் வைக்கும்படி ஓர் பித்தளைச் சல்லடையைச் செய்து, அவைகளுக்கும் காத்தண்டுகளைச் செய்து பலிபீடங்களின் வளையங்களிலே செருகி வை. (யாத். உஎ. எ.

உஅ. இதன் சுற்றுப்பிரகாரம் நூறுமுழ நீளமும் ஐம்பதுமுழ அகலமும் உள்ளதாய் இருக்கவேண்டும். அதின் தென் புறத்திற்கு நூறுமுழ நீளமுள்ள திரைப் புடைவையும், இருபது தூண்களும் இருக்கவேண்டும். வடபுறமும் அப்படியே இருக்க வேண்டும். மேற்குப் புறத்தில் ஐம்பதுமுழ நீளமுள்ள திரையும் பத்துத் தூண்களும் இருக்கவேண்டும். கிழக்குப் புறத்தில் தெற்கருகுக்குப் பதினைந்துமுழ நீளமுள்ள திரையும், மூன்று தூண்களும் இருக்கவேண்டும். மற்றப்புறமும் அப்படியே இருக்கவேண்டும். அதின் வாசலுக்கு விசித்திரத் தையல் ஆடையால் ஒரு திரையும் நான்கு தூண்களும் இருக்கவேண்டும். அதின் விளக்கு எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்க வேண்டும். இதுவே, இஸ்ரவேலருக்குத் தலைமுறைதோறும் இருக்கவேண்டிய நித்திய நியமம். (யாத். உஎ. உக.

உகூ. உன் சகோதரனுகிய ஆரோனையும், அ

வன் குமாரராகிய நாதாபையும், அபியூவையும் எலீயேசேரையும், ஈதாமாரையும் ஆசாரியராகத் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு ஆசாரிய வஸ்திரத்தைத் தரித்து, பொன்னினால் ஒரு பட்டத்தைச் செய்து, அதிலே யெகோவாவுக்குப் பரிசுத்தமென்று வரைந்து, அதை ஆரோனுடைய தலைப்பாவின் முன்பக்கத்திலே தரித்து அவனுக்கு அபிஷேகஞ்செய்து அவனைப் பிரதிஷ்டையாக்கு. மேலும் நீ ஒருமுழநீளமும், ஒருமுழ அகலமும், இரண்டுமுழ உயரமுமுள்ள ஒருதூபவேதிகையை மரத்தினால் உண்டாக்கி, அதைப் பொற்றகட்டால்மூடிக் கிருபாசயத்துக்கு முன் வைத்து, அந்தி சந்தி அதின்மேலே தூபமிடும்படி கற்பி. (யாத். உகூ. எ.

கூO. ஆசாரியர் தங்களைச் சுத்தி செய்யும்பொருட்டு, பித்தளையினால் ஒரு தொட்டிசெய்து, அதிலே சலத்தைப் பூரித்து வெள்ளைப் போளத்தையும், கருவாப்பட்டையையும், சுகந்தவசம்பையும், இலவங்கப்பட்டையையும், சீதவிருட்சத் தெண்ணெயையும் சேர்த்து. சுத்த அபிஷேகதைலத்தைச் செய்து, சபையின் ஆவாசத்துக்கும், சாட்சிப்பெட்டிக்கும், பீடத்துக்கும், அதின் பாத்திரங்களுக்கும், கிளைவிளக்குக்கும், அதின் கருவிகளுக்கும், தூபவேதிகைக்கும், தகனபலிவேதிகைக்கும், அதின்பாத்திரங்களுக்கும் தொட்டிக்கும் அபிஷேகம்பண்ணு.

(யாத். கூO. உஅ.

கூக. வடித்த வெள்ளைப்போளத்தையும், குங்குலியத்தையும், சுகந்த திரவியங்களையும், குந்து

ருவையும் ஒன்ருகப் பொடிபடுத்திச் சுகந்தது பவர்க்கமாக்கித் தூபமிடவேண்டும்.

(யாத். ௩0. ௩எ.

இவைகளைச் செய்யும்பொருட்டு யூதாவின் கோத்திரத்தானும் ஊரின் பௌத்திரனும் ஊரியின் புத்திரனுமாகிய பெத்சலேலேயும், தாண்கோத்திரத்திலுள்ள அகிசாமாகின் புத்திரனுகிய அகோலியாபையும் நியமித்துக்கொண்டேனென்று திருவாக்காய்ப்பேசிப் பத்துக்கற்பனேகளில் முதல் நான்கு கற்பனேகளே ஓர் கற்பலகையிலும், கடை ஆறுகற்பனேகளே ஓர் கற்பலகையிலுந் தமது கையெழுத்தாய் எழுதிக்கொடுத்தார். (யாத். ௩க. கஅ.

௩உ. மோசே இவைகளேப் பெற்றுக்கொண்டு மலேயை விட்டுவர நாற்பதுநாட் சென்றது. அதனுற் சனங்கள் கலங்கி ஆரோனிடத்திற்போய் எங்களே அழைத்துவந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ தெரியாது. ஆகையால் நீர் எங்களுக்கு முன்செல்லுந் தெய்வங்களே உண்டாக்குமென்று சொல்லித் தங்கள் மனே மக்களுடைய பொற்காதணிகளேக் கொடுக்க அவன் வாங்கி ஒரு இடப விக்கிரகத்தை உண்டாக்கிக் கொடுத்து நாளே யெகோவாவுக்கு உற்சவமென்று பிரசித்தப்படுத்திஞன். (யாத். ௩உ. சு.

௩௩. மறுநாள் யாவரும் அதற்குப் பலியிட்டுப்போசனபானம்பண்ணி உற்சவம் கொண்டாட எழுந்தார்கள்.

யெகோவா மோசேயுடனே உன் சனங்கள் நமது நெறியைவிட்டு வழுவி விக்கிரகா

ராதனைக்காரராகித் தங்களைக் கெடுத்துக்கொண்டார்கள். இவர்கள் வணங்காத கழுத்துள்ளவர்கள். நான் இவர்களை நிருமூலமாக்கி உன்னிலிருந்து ஒருபெரிய சாதியைத் தோற்றுவிப்பேனென்றார். (யாத். ௩௨. ௧௦.

௩௪. அதற்கு மோசே யெகோவாவே, நீர் உமது சருவவல்லமையினால் மீட்டுவந்த சனங்களை நிருமூலமாக்கினால் அவர்களை மலையின்மேல் நாசப்படுத்தும்படிக்கே யெகோவா அழைத்துப்போனாரென்று எகிப்தியர் பேசுவார்கள். ஆகையாற் தேவரீர் உமது தாசராகியஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபென்பவர்களையும், நீர் அவர்களுக்குச் சொன்ன வாக்குத்தத்தங்களையும் நினைந்து அவர்களுக்கிரங்கியருளுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டு, கற்பனைகள் எழுதப்பட்ட கற்பலகைகள் இரண்டையுங்கொண்டு மலையை விட்டிறங்கிவந்தான்.
(யாத். ௩௨. ௧௫.

௩௫. அப்பொழுது சனங்களுடைய ஆரவாரத்தை மோசேயுடனே வந்த யோசுவாகேட்டுப் பாளயத்திலே ஒரு ஆரவாரமுண்டாகிறதென்று சொல்ல, மோசே அது யுத்தசத்தமல்ல, கீதநாதமே கேட்கிறதென்றான். இப்படி இவர்கள் பேசிக்கொண்டு பாளயத்துக்குச் சமீபித்து அவர்களுடைய விக்கிரகாராதனையைக் கண்டு கோபங்கொண்டு தன் கையிலிருந்த கற்பலகைகளை மலைச்சாரலில் எறிந்துடைத்து, அவர்கள் விக்கிரகத்தைப்பறித்து நெருப்பிலிட்டு

எரித்துப் பொடிபடுத்திச் சலத்திற்றூவிச் சன ங்களுக்குக் குடிக்கக்கொடுத்தான்.

(யாத். ௩௨. ௨௦.

௩௬. பின்பு மோசே ஆரோனை நோக்கி, நீ இத்தனைபெரிய பாதகத்தை இவர்கள்மேல் வருவித்ததென்னவென்று அவனைக் கடிந்துகொண்டு பாளயவாசலில் நின்று யெகோவாவின் பட்சத்தார் யாவரும் என்னண்டை. வாருங்களென்க, லேவியர் யாவரும் அவனண்டை சேர்ந்தார்கள். மோசே அவர்களுடனே நீங்கள் இந்தப் பாளயமெங்கும்போய் உங்கள் உற்றூர் உறவர் என்று பாராமல் யாவரையுங் கட்சத்தினுலே சங்கரியுங்களென்று சொன்னான். அவர்களும் அப்படியே செய்தார்கள். அதினுலே மூவாயிரம் பேர்மட்டுக்கு மடிந்தார்கள்.

(யாத். ௩௨. ௨௮.

௩௭. மறுநாள் மோசே யெகோவாவிடத்திற் சேர்ந்து, ஆண்டவரே, இந்தச்சனங்கள் உமக்கு விரோதமாய்ச்செய்த பாவங்களை மன்னித்துக்கொண்டு அவர்களை இரட்சியும். அல்லது என்னுடைய நாமத்தை உமது ஞாபகத்திலிருந்து எடுத்துப்போடுமென்க, அவர் அவனுடனே, நீ போ, நான் அவர்களைத் தண்டிக்கிறவேளை தண்டிப்பேன்; நீ அவர்களை அழைத்துக்கொண்டு நான் உனக்குச்சொல்லும் இடத்துக்குப்போவென்று சொல்லி, திரும்பவும் பத்துக்கற்பனைகளை முன்போல வரைந்துகொடுத்து, இனி நான் உங்களுக்குள்ளேவரேன், என் தூதனை உங்களுக்குமுன் அனுப்புவேன், அவ

னே உங்களுக்குச் சகாயஞ்செய்வான்
ருர். (யாத். ௩௩. ௩.

௩அ. பின்பு மோசே கூடாரத்தைப் பெயர்த்துப் பாளயத்துக்குப் புறம்பேயிட்டு அதற்குச் சபையின் ஆவாசமென்று பேரிட்டு, அந்த ஆவாசத்துக்குட் பிரவேசித்தான். மேகத்தூண் இறங்கி ஆவாசவாசலில் நின்றது. யெகோவா மோசேயுடனே சம்பாஷித்தார். சனங்களெல்லாரும் தங்கள்தங்கள் கூடாரவாசலில் நின்று வணங்கினுர்கள். அப்பொழுது மோசே, ஆண்டவரே, உமது கிருபை எனக்குக் கிடைத்ததுண்டானுல் உமது வழியை எனக்குத் தெரிவித்தருளுமென்று பரிந்து வருந்திக்கேட்டான்.
(யாத். ௩௩. ௧௩.

௩௯. அதற்கு அவர் நான் உன்னுடன் வந்து உனக்கு இளைப்பாறுதலைத் தருவேன். நான் எவனுக்கு அனுக்கிரகஞ்செய்யத் திருவுளங்கொள்ளுகிறேனே, அவனுக்கு அனுக்கிரகத்தையும், எவனுக்குத் தயைசெய்யத் திருவுளங்கொள்ளுவேனே அவனுக்குத் தயையையுஞ்செய்வேன். யாவனுகிலும் என்னை முகாமுகமாய்க்கண்டால் உய்யமாட்டான். ஆகையால் நீ அந்தக் கல்மலைப்பிளப்பிலே நில். அங்கே என் பிற்புறத்தைமாத்திரங் காண்பாயென்ருர். அப்படியே அவன் அங்கேநின்று தேவமகிமையைக் கண்டான். (யாத். ௩௩. ௨௩.

௪0. பின்பு யெகோவாவின் கட்டளைப்படி மோசே இரண்டு சற்பலகைகளை எடுத்துக்கொண்டு மறுநாள்விடியசீனுய்மலையிலேற அவர்மு

ன்போல மோசேக்குத் தரிசனையாகி யெகோ
வா இரக்கமும் கிருபையும் நீடிய பொறுமையு
முள்ளவர். தயையிலுஞ் சத்தியத்திலும் பரிபூ
ரணர். அவர் ஆயிரந் தலைமுறைவரைக்கும் த
யைசெய்பவர். தீமையையும் அதிக்கிரமத்தை
யும் பாவத்தையும் மன்னிக்கிறவர். குற்றவா
ளிகளைச் சுத்தராக எண்ணமல் மூன்ரும் நான்
காந் தலைமுறைவரைக்கும் விசாரிக்கிறவர் என்
ன்ருர். (யாத். ருச. எ.

சக. அப்பொழுது மோசே தாழ்ந்துவணங்கி
ஆண்டவரே, எங்களை உமக்குச் சுதந்தரமாக ஏ
ற்றுக்கொண்டு எங்களுக்குள் வாருமென்ருன்.

அதற்கவர் நான் உன்ஞேடிருந்து மகா
அற்புதங்களைச் செய்வேன். கானனிலுள்ள ஆ
று சாதியாரையுந் துரத்திவிடுவேன். நீங்கள் அ
வர்களோடே சங்காத்தம்பண்ணமல் அவர்கள்
வேதிகைகளை இடித்து அவர்கள் சிலைகளைத் த
கர்த்து அவர்கள் வணங்குகிறவைகளை நிருமூ
லமாக்குங்கள். நீங்கள் அந்நிய தேவர்களை வ
ணங்கவும் அவர்களை வணங்குகிறவர்களுடன்
சங்காத்தம்பண்ணவும் வேண்டாம். நான் உங்
களுக்கு நியமித்த உற்சவங்களை விதிப்படி ஆ
சரியுங்கள் என்ருர். (யாத். ருச. கரு.

சஉ. பின்பு யெகோவா தான் முன்வாக்குமூ
லமாய்க் கொடுத்த விதிகளையும் மோசேயைக்
கொண்டு எழுதுவித்தார். சாட்சிப்பலகைகள்
இரண்டையும் தாமே எழுதிக்கொடுத்தார். அ
வன் மலையிலே நாற்பதுநாள் இராப்பகல் போ
சனபானம் இல்லாமற் தங்கியிருந்து இறங்கிவந்

து ஆரோனையும் சபையின் அதிபதிகளையும் அழைத்து யெகோவா தனக்கிட்ட கட்டளைகள் யாவையும் வெளிப்படுத்தினான்.

(யாத். ருச. ருஉ.

சரு. பின்பு இஸ்ரவேலர் ஆவாசம் முதலிய யாவற்றிற்கும் வேண்டிய சகல முஸ்தீதுகளையுந் தங்கள் தங்கள் சுயஇச்சைப்படி காணிக்கையாகக் கொண்டுவந்தார்கள். மோசே பெத்சலேலையும், அகோலியாபையும், மற்றும் விவேகிகள் யாவரையும் அழைப்பித்தான். அவர்களும் விருப்பத்தோடே வந்துமுன்னே யெகோவா மோசேக்குக் கற்பித்தபடி செய்து முடித்தார்கள். அவனும் யெகோவா தனக்குக் காண்பித்த மேரையாய்ச் சகலத்தையும் ஸ்தாபித்தான்.

(யாத். சO. ருரு.

சச. அப்பொழுது ஒருமேகம் ஆவாசத்திலே படிந்திருந்தது. அதின் உட்புறத்தில் யெகோவாவின் மகிமைப்பிரகாசம் பிரசன்னமாயிருந்தது. மேகம் ஆவாசத்தைவிட்டு எழும்பும்பொழுது சனங்கள் கூடாரத்தைப் பெயர்த்துக்கொண்டு பிறஸ்தானம் ஆவார்கள். அந்த மேகம் ஆவாசத்திலே படியும்பொழுது அதிலே நிறுத்தி அதுகிழம்பும் நாள்வரைக்கும் அங்கே தங்குவார்கள். யெகோவா இரவில் அக்கினித் தூணுகவும் பகலில் மேகத்தூணுகவும் சென்று அவர்களை வழிநடத்தினார்.

(யாத். சO. ருஅ.

சரு. அதன்மேல் யெகோவா சபையின் ஆவாசத்திலே பிரசன்னமாகித் தகனபலி, ஆலாத்திப்பலி, எந்துபலி என்பவைகளின் விதிகளை

யும், நைவேத்தியப்பலி, ஸ்தோத்திரப்பலி, சன ங்களின் புத்திபூருவமான பாவங்களின்பலி, சபையில் அபுத்திபூருவமாய்வந்த பாவத்துக்கு ப்பலி, அதிபதிகளின் அபுத்திபூருவமான பாவ ப்பலி, சாதாரணசனங்களின் அபுத்திபூருவமா ன பாவப்பலி, அறிந்ததை மறைத்த பாவப்பலி, தெய்வத்திரவியங்களைமனதார அபகரித்த பாவ ப்பலி, அறியாமையாலே தவறின பாவப்பலி, அயலாருக்கு விரோதஞ்செய்த பாவப்பலி, குற் றநிவிர்த்திப்பலி என்பவைகளின் விதியையு ங் கற்பித்தார். (லேவி. சூ.

சசூ. மேலும் அபிஷேகவிதி, போசனவிதி, ஆசூசவிதி, குஷ்டரோகவிதி, மேகரோகவிதி, இருதுவிதி, விவாகவிதி, உற்சவவிதி, ஓய்வுநா ள்விதி, பஷ்காவிதி, பெந்திக்கோஸ்துவிதி, சமு கத்தப்பவிதி, தண்டனைவிதி, மகோற்சவவிதி, இஷ்டவிதி, அடிமைவிதி, ஆசீர்வாதவிதி, சா பவிதி, நேரத்தைமீட்கும்விதி, தசபாகவிதியெ ன்பவைகளை வெளிப்படுத்தினர். இவைகளை லேவிஆகமம், க. அதி. தொடங்கி, எ. அதி. மு டியக் காணலாம்.

சஎ. மறுபடியும் யெகோவா சீனய்மலையி லே மோசேயைச் சந்தித்து, நான் உங்களுக்குக் கொடுக்கிற தேசத்திலே நீங்கள் ஆறுவருஷமட் டாய் வித்திட்டு விளைவியுங்கள். ஏழாம் வரு ஷத்திலோ தேசத்துக்கு இளைப்பாறுதல் உண் டாகும்படி நிலத்தில் வித்திடவும் திராட்சக் கொடிகளை நறுக்கவும்வேண்டாம். அதிலே தா னாய்த் தோன்றினபலன்கள் உங்களுக்கும் உங்

கள் கூலிக்காரருக்கும், பரதேசிகளுக்கும், மிரு கங்களுக்குமுடையது. (லேவி. உரு. க—எ.

சஅ. இன்னும் ஐம்பதாம் வருஷத்தில் யாவரும் யாவும் விடுதலையடையவேண்டும். அந்தவருஷம் மகோற்சவ தினம். இதிலே யாவரும் விடுதலையடைந்து தன்தன் சுதந்தரபூமிக்குத் திரும்பக்கடவன். இப்படியேநான் உங்களுக்கிட்ட கட்டளைகள் முற்றையும் யேணிநடந்தால் பருவமழைபெய்யும். பூமிவிளைவைத்தரும். விருட்சங்கள் பலிக்கும். நீங்கள் திருத்திப்பட்டுத் தேசத்திலே வாசம்பண்ணுவீர்கள். தேசஞ்சமாதானமாயிருக்கும். நீங்கள்ஒருவருக்கும் அஞ்சமாட்டீர்கள், துஷ்டமிருகம் தேசத்தை விட்டகலும். கட்கம் உங்கள் தேசத்திலே வராது. உங்களில் ஐந்துபெயர் நூறுபெயரையும் நூறுபெயர் பதினாயிரவரையும் செயங்கொள்ளுவீர்கள். நீங்கள் பழையதானியத்தையே புசித்துப் புதியதானியத்தை வைப்பீர்கள். நான் உங்களோடே வசிப்பேன். நீங்கள் என் சனங்களாவீர்கள்.

(லேவி. உசா. ரு.

சகூ. நீங்கள் என்கட்டளைகளைமீறி என் நியமங்களை அவமதித்தால் உங்களுக்குப் பயங்கரத்தையும், ஈளையையும், நடுக்கசுரத்தையும் வருவிப்பேன். உங்கள் இருதயம் பீறப்படும். நீங்கள் விதைத்ததை உங்கள் சத்துருக்கள் பட்சிப்பார்கள். நான் உங்களுக்கு விரோதமாய் முகம் மாறுவேன். நீங்கள் உங்கள் சத்துருக்களாலே கொலையுண்பீர்கள். உங்கள் சத்துருக்கள்

உங்களை ஆளுவார்கள். ஒருவரும் உங்களைத் தொடராதிருந்தும் பயந்தோடுவீர்கள். இவைகளைக்கண்டும் நீங்கள் மனந்திரும்பாதிருந்தால் இதிலும் எழுமடங்குஉங்களைத் தண்டிப்பேன்.

உங்களுக்கு வானம் இரும்பாகும். பூமி பித்தளையாகும். உங்கள் பிரயாசம் வீணுகும். உங்கள் தேசந் தானியம் விளையாது. விருட்சம் கனிதராது. இதற்கும் நீங்கள் வசப்படாவிட்டால் இன்னும் இதில் எழுமடங்கு கிலேசம் உங்களுக்கு நேரிடும். நீங்கள் புத்திரவீனராவீர்கள். உங்கள் மந்தைகள் குன்றிப்போம். உங்களுக்குள்ளே துஷ்டமிருகங்கள்வரும்.

(லேவி. உகூ. உஉ.

ருO. இதையும் நீங்கள் மதியாவிட்டால் உங்களுக்குள் யுத்தங்களும் பெருவாரிக்காய்ச்சலும் உண்டாகும். சத்துருக்களின் கையில் அகப்படுவீர்கள். உங்கள் ஆகாரமாகிய தஞ்சம் முறிந்துபோம். இதற்கும் நீங்கள் செவிசாயாதுபோனுல் நானே உங்களை எழுமடங்காய்த் தண்டிப்பேன். நீங்கள் உங்கள் மக்களுடைய மாமிசத்தைப் புசிப்பீர்கள். உங்கள் நகரங்களை அழிப்பேன். உங்கள் ரூபங்களைத் துண்டித்து உங்கள் பிணங்களை விக்கிரக பிணங்கள்மேல் எறிவேன். என்னுள்ளம் உங்களை வெறுக்கும். உங்கள் பட்டினங்கள் வெறுமையாகும். உங்கள் ஆலயம் பாழாகும்.

(லேவி. உகூ. நகூ.

ருக. உங்கள் விண்ணப்பங்களை நான் ஏற்றுக்கொள்ளாமல் உங்கள் தேசத்தைப் பாழாக்கு

வேன். உங்கள் சத்துருக்கள் இவைகளைக்கண்டு அதிசயிப்பார்கள். நீங்கள் புறத்தேசத்தாருக்குட் சிதறுண்பீர்கள். இப்படியே உங்கள் தேசம் பாழாகித் தன் ஓய்வை அடையும். உங்கள் சத்துருக்களுக்குமுன்நிற்கப் பெலனிராது. சத்துருக்களின்தேசம் உங்களைப் பட்சிக்கும். உங்கள் பிதாக்களின் பாவங்கள்நிமித்தமும் உங்களைத் தண்டிப்பேன்.

ருஉ. நீங்கள் உங்கள் பாவங்களையும் உங்கள் பிதாக்களின் பாவங்களையும் நினைத்து, மனஸ்தாபப்பட்டுத் திரும்பினால், நானும் என் உடன்படிக்கையை நினைத்து உங்கள் பாவங்களினிமித்தம் வந்த தண்டனைகளை விலக்கி உங்கள் பிதாக்களோடே நான்பண்ணின உடன்படிக்கையை நினைப்பேன். நானே யெகோவா வென்றார். (லேவி. உசு. சரு.

ருஙு. இந்தச் சங்கதிகளெல்லாம் நடந்தேற இஸ்ரவேலர் எகிப்தைவிட்டுப் புறப்பட்டநாள்முதல் சீனாய்மலையைவிட்டுப் புறப்படும்நாள்வரைக்கும் இரண்டுவருஷம் மட்டுக்குச் சென்றது. அப்பொழுது யெகோவாவின் உத்தரப்படி மோசே யுத்தசந்நத்தராய்ப் புறப்படத்தக்க பிராயமுள்ளவர்களைத் தொகைபார்க்கும்படி சங்கற்பித்து ஒவ்வொரு கோத்திரத்துக்கு ஒவ்வொருவராகப் பன்னிருவரை வரித்தனுப்பின விபரமும் தொகையும்.

| கோத்திரம். | தலைவர். | தொகை. |
|---|---|---|
| ரூபேன் | இலீசூர் | சகூரு00 |
| ஷிமியோன் | ஷிலூமியேல் | ருகூரு00 |
| யூதா | நாக்ஷோன் | எசகூ00 |
| ஈஷகார் | நிதனேல் | ருசச00 |
| செபுலோன் | இலியாப் | ருஎச00 |
| எப்ராயீம் | இலீஷாமா | ச0ரு00 |
| மனாஷே | கமாலீயேல் | ஙுஉஉ00 |
| பேன்யாமீன் | அபீதான் | ஙுருச00 |
| தாண் | அகியேசேர் | கூஉஎ00 |
| ஆஷேர் | பாகியேல் | சகரு00 |
| காத் | இலியாசப் | சருகூரு0 |
| நப்தாலி | அகீரா | ருஙுச00 |

லேவியர் அப்பொழுது தொகை பார்க்கப்படவி ல்லை. ஆதலாற் கண்டதொகை, கூ0ஙுருரு0.

பின்பு தொகைபார்க்கப்பட்ட லேவியருடன் கூ ட்டினால் ஆகத்தொகை, கூஉருஅஉஙு.

யெகோவா கற்பித்தபடி ஆவாசம் ஸ்தாபிக்கப் படுஞ் சமயத்திலே சனங்கள் தங்கள் கூடார ங்களை ஆவாசத்தைச்சுற்றி ஸ்தாபித்து அதிலே தங்கள்தங்கள் கோத்திரப்படி கொடியையும் ஏ ற்றுவார்கள். (எண். க. ருஉ.

ருச. இவர்கள் பாளயமிறங்கும்பொழுது ஆ வாசத்துக்குக் கிழக்கே யூதாகோத்திரத்தாருடை ய பாளயமும், வலதில் செபுலோனுடையதும், இடதில் ஈஷகாருடையதும், தெற்கே, முன் ஷிமியோனருடையதும், நடுவே ரூபேனரு டையதும், பின்னே காத்தியருடையதும், மே ற்கே பேன்யாமீன் எப்ராயீம் மனாஷே என்ப வர்களுடையதும், வடக்கே நப்தாலி தாண்

ஆஷேர் என்பவர்களுடையதும், அவரவர்கொ
டிகளுடனே ஸ்தாபிக்கப்பட்டன.
(எண். உ.

ருரு. பின்பு யெகோவாவின் கட்டளைப்படி,
லேவியருக்குள் பாலகர் முதல் விருத்தர் ஈறாக
ச் சகல ஆண்களும் எண்ணப்பட்டார்கள். எ
ண்ணப்பட்ட தொகை இருபத்திராயிரத்து இ
ருநூற்று எழுபத்துமூன்று. இவர்களுக்குள் மு
ப்பது வயது தொடங்கி ஐம்பது வயதுமட்டுமு
ள்ள சகலரும் ஆவாசத்தின் தொண்டுசெய்ய நி
யமிக்கப்பட்டார்கள். (எண். ரு. ருகூ., ச. உ.

ருசு. லேவியருடைய கூடாரங்கள் ஆவாச
த்தின் ஓரங்களில் இருந்தன. இப்படியே சக
லத்தையும் நிலைப்படுத்திய பின் அந்த ஆவாசத்
தில் யெகோவாவுக்கு ஆராதனை செய்தார்கள்.
அந்த நாள் தொடங்கி ஆவாசத்தின்மேற் ப
கற்காலத்தில் ஒருமேகமும்,இராக்காலத்தில்ஒரு
சோதியும் படிந்திருந்தது. அந்த மேகம் ஆ
வாசத்தை விட்டு எழும்பும்பொழுது மோசே,
சேனைபதியாகிய யெகோவாவே, எங்களுட
னே எழுந்தருளும். உமது சத்துருக்கள் சின்
னபின்னமாகட்டும். உமது பகைவர் உமது
சமூகத்தைவிட்டு ஓடிப்போகட்டும் என்றுசொ
ல்லுவான். (எண். கூ. கஎ.

அப்பொழுது ஆசாரியர் வெள்ளி எக்காளத்
தை ஊதுவார்கள். உடனே முதல் கீழ்த்திசைப்
பாளயத்தார் எழும்புவார்கள். இரண்டாம்மு
றை எக்காளம் ஊத தென்திசைப்பாளயத்தார்
எழும்புவார்கள். மூன்றும்முறை ஊத மேற்றி

சைப்பாளயத்தார் எழும்புவார்கள். நான்காம் முறை ஊத வடதிசைப்பாளயத்தார்எழும்புவார்கள். மேகம் முன்நடக்கையில் சனமும் வழி நடப்பார்கள். மேகம் கூடாரத்தின் மேற்படிந்த உடனே மோசே சனங்களை நிறுத்தி இஸ்ரவேலின் சேனாபதியாகிய கர்த்தாவே ஆயிரத்தாயிரவராகிய எங்களோடே தங்கியிருமென்று விண்ணப்பஞ் செய்வான். உடனே பாளயத்தார் சகலரும் கூடாரம் இட்டுத் தங்குவார்கள். (எண். ௧0. ரூ௫.

௫எ. இஸ்ரவேலர் எகிப்தை விட்ட, உம். வருஷம், உம். மாதம், உ0ம். தினத்தில் சீனாய்வனத்தை விட்டு இராப்பகல் மூன்றுநாள் நடந்து பாரான் வனத்திற் சேர்ந்தார்கள். அப்பொழுது இஸ்ரவேலர் மோசேயுடன், நாங்கள் இந்த மன்னாவை மாத்திரம் எப்படிப் புசிப்போமென்று குறைகூற, அவன் யெகோவாவே, ஒரு குழந்தையை ஒரு பிதா அணைத்துக்கொண்டு போகிறவிதமாய், இவர்களை அணைத்துக்கொண்டுபோக நான் திராணியுடையவனல்லவே. நான் இந்த உபத்திரவத்தைச் சகிப்பதெப்படியென்று முறையிட்டான். (எண். ௧௧. ௧௫.

௫அ. அப்பொழுது யெகோவா இந்தச் சனங்களில் முதியோராய் எழுபது பெயரைத் தெரிந்துகொள். அவர்களும் இவர்கள் பாரத்தைத் தாங்கட்டும். நாளை இவர்களுக்கு மாமிசத்தைப் புசிக்கக் கொடுப்பேன். அவர்கள் புசிக்கட்டுமென்றார். மோசே பாளயத்துக்குத் திரும்பிவந்து எழுபதுபெயரைத் தெரிந்து ஆவா

சத்துக்குக்கொண்டுபோனான். யெகோவா அ
ந்த எழுபது பெயரை மோசேக்குச் சகாயராக
நியமித்தார். (எண். கக. உரு.

ருகூ. அதன்மேல் யெகோவாவுடைய சித்த
ப்படி கீழ்காற்று எழும்பிச் சமுத்திரத்தின் கா
டைகளை வாரிக்கொண்டுவந்து பாளயத்தைச்
சூழ ஒருநாட் பிரயாண விஸ்தாரம் இரண்டு மு
ழ உயரமட்டுக்குக் குவித்துவிட்டது. சனங்
களோ அவைகளை எடுத்துப் புசித்துக் கெலிதீர
முன் யெகோவாவின் உக்கிரத்தில் உட்பட்டு
அனேகர் மாண்டார்கள். அதனால் மோசே அ
தற்குக் கிப்ரோத்அத்தாவா என்று பெயரிட்
டான். (எண். கக. நக—நச.

சுo. பின்பு சனங்கள் கிப்ரோத்அத்தாவா
வை விட்டுப் புறப்பட்டு அத்சேரோத்தைச் சே
ர்ந்து தங்கினார்கள். அவ்விடத்தில் மோசேயி
ன் சகோதரி மிரியம், மோசேக்கு விரோதமா
ய்ப் பேசினதினிமித்தம் வெண்குஷ்டமடைந்
தாள். அப்பொழுது மோசே யெகோவாவை
நோக்கிப் பிரார்த்தனைசெய்ய யெகோவா அவ
ள் எழுநாட் பாளயத்துக்குப் புறம்பே விலகி
யிருந்தபின், அவளைச் சபையோடே சேர்த்துக்
கொள்ளக் கட்டளையிட்டார். அதினால் அவ
ர்கள் அங்கே எழுநாட் தங்கிப் பின்பு புறப்ப
ட்டுப் பாரான் வனத்திற் தங்கினார்கள்.
(எண். கஉ. கரு.

சுக. அவர்கள் அங்கேயிருக்கையில், மோ
சே யெகோவா இட்ட கட்டளைப்படி பன்னி
ரண்டு கோத்திரத்திலும் பன்னிரண்டு பேரைத்

தெரிந்து கானான் தேசம் எப்படிப்பட்டதென்றும், அதின் சனங்கள் எப்படிப்பட்டவர்களென்றும், அவர்கள் தொகை சிலவோ பலவோ என்றும், அவர்கள் பட்டினம் எப்படிப்பட்டதென்றும், அவர்கள் வாசங் கோட்டையோ கூடாரமோவென்றும், நிலம் உவரோ நல்லதோவென்றும், பார்த்தறிந்துகொண்டு வரும்படி அனுப்பினான். (எண். கங. உ0.

சுஉ. அவர்கள் போய்ச் சீன்வனந் தொடங்கி ரேகோப்மட்டும் தேசத்தைச் சுற்றிப்பார்த்துப் பின்பு எப்ரோன்மட்டும் போய் அதிலிருந்து எஸ்கோலுக்குப் போய் அதிலொரு திராட்சக் குலையைக் கிளையோடே அறுத்துக்கொண்டு, அங்குள்ள மாதுளம்பழங்களிலும், அத்திப்பழங்களிலும், சிலதை எடுத்துக்கொண்டு நாற்பது நாட் சென்றபின் திரும்பிப் பாரானிலுள்ள காதேஷ் ஊரிலே வந்து மோசேயையும் சபையையுஞ் சந்தித்து தேசத்தின் சமாச்சாரங்களையுந் தெரிவித்துக் கனிவருக்கங்களையுங் காண்பித்துத் தேசம் மகா நல்லது. அது மதில்சூழ்ந்த பட்டினம். அங்கே ஏனாக்கின் புத்திரரும் அமலேக்கியரும் இருக்கிறார்கள். எத்தியரும், எபூசியரும், எமோரியரும், மலைநாட்டிலே இருக்கிறார்கள். கானானியர் சாக்கடலுக்கும் யோர்தானுக்கும் ஓரங்களிலிருக்கிறார்கள். அவர்கள் எங்களிலும் மகாபலவான்கள். நாங்கள் அங்கே போகமுடியாது. நாங்கள் அவர்கள்பார்வைக்கு வெட்டுக்கிளிகள் போலிருந்தோமென்றார்கள். (எண். கரு. ருரு.

கூகூ. அதைக் கேட்ட சபையார் எல்லாரும் பெருங்குரலிட்டுப் புலம்பி நாங்கள் எகிப்திலே மரித்தால் நல்லது. இந்த வனத்தில் மாண்டாலும் நலம். எங்கள் மனைவிகளும் குழந்தைகளும் கட்கத்துக்கிரையாகும்படியோ இங்கே வந்தோம். நாங்கள் எகிப்துக்குத் திரும்பிவிடுவதே சுகம். நாமிப்பொழுது மோசேயை விட்டு வேறொருதலைவனை நியமித்துக்கொண்டு எகிப்துக்கு நடப்போம் வாருங்களென்று மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் மொறுமொறுத்து யெகோவாவையுங் குறைகூறினார்கள்.
எண். கச. ச.

கூச. அதைக் கேட்ட மோசேயும் ஆரோனும் முகங்குப்புற விழுந்து புலம்பினார்கள். யோசுவாவும் காலேபுமோ, நாம் யெகோவாவுக்கு விரோதமாய் நடவாதிருந்தால் அவர்களுக்கு அஞ்சவேண்டுவதில்லை. அவர்களைக் காத்த நிழல் அவர்களை விட்டு விலகிவிட்டது. யெகோவா எங்களோடிருக்கிறார். நாம் போய்த் தேசத்தைச் சுதந்தரிப்போமென்றார்கள். சனமோ இவர்கள்மேற் கல்லெறியத்துணிந்தார்கள்.
(எண். கச. சo.

கூரு. அப்பொழுது யெகோவா மோசேயுடனே இந்தச் சனங்கள்எனது அற்புதங்களைக் கண்டும் என்னை விசுவாசிக்கக் கூடாதவர்களாய் இருப்பதால் நான் இவர்களைப் புறக்கணித்து எனது சுதந்தரத்தை விட்டு நீக்கி அவர்களைப் பெருவாரிக் காய்ச்சலினாற் சங்கரித்து உன்னிடத்

தில் மகா திரளான ஒரு சாதியைத் தோற்றுவிப் பேன் என்றார். (எண். கச. கஉ.

கூகூ. அதைக் கேட்ட மோசே, ஆ! யெகோ வாவே, நீர் எகிப்தியரினின்றும் இந்தச் சனங் களைப் புறப்படச் செய்தீர். உமது மகிமைக் கிருத்தியங்கள் முற்றும் தேசமெங்கும் பரம்பி யிருக்கிறது. இந்தச் சனங்களை நீர் சங்கரித்தா ல் யெகோவா தாம் பண்ணின வாக்கின்படி மு டிக்கக் கூடாமற் சனங்களை வனத்தில் அழித் துவிட்டார் என்பார்கள். ஆதலாற் தேவரீர் இ ந்நாள்வரையும் இவர்கள் குற்றங்களைப் பொறு த்துவிட்டதுபோல் இப்பொழுதும் பொறுத்து க்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பஞ்செ ய்தான். (எண். கச. ககூ.

கூஎ. அதற்குயெகோவா உனது விண்ணப்ப த்தின்படி இவர்களுக்கு மன்னித்தேன். இவ ர்கள் என்னைப் பலமுறையும் பரீட்சித்தபடியா ல் இவர்கள் நான்வாக்குப்பண்ணின தேசத்தை ச் சுதந்தரிக்க மாட்டார்கள். இவர்கள் கட்கத் துக்கிரையாவார்களென்று சஞ்சலித்த குழந்தை களும், என்னுடைய தாசனாகிய காலேபும் யோ சுவாவும் மாத்திரம் அதைச் சேருவார்கள். இவ ர்களோ வனத்தில் நாற்பது வருஷம் திரிந்து நாசப்படுவார்கள். நாளை நீங்கள் திரும்பிச் செ ங்கடல் வழியாய் வனாந்திரத்துக்குப் போங்க ளென்று கற்பித்தார். உடனே தேசத்தைக் கு றித்துத் துர்ச்செய்தி சொன்ன பத்துப்பேரும் ம ரித்தார்கள். (எண். கச. கூஎ.

கூஅ. உடனே சனங்கள் நாங்கள் யெகோவாவுக்கு முன்பாகப் பாவஞ் செய்தோம். இப்பொழுது நாம் போகிறோமென்று மலையின் மேல் ஏறினார்கள். உடனே அமலேக்கியரும் கானானியரும் வந்தெதிர்த்து இவர்களை ஓர்மா மட்டும் துரத்திவிட்டார்கள். இவர்கள் பாரான் வனத்துக்கு வந்தார்கள். (எண். கச. சரு.

கூக. இவர்கள் பாரான் வனத்தில் தங்கியிருக்கையில், கோரா, தாதான், அபீராம், என்பவர்களும் இருநூற்றைம்பது தலைவருங் கூடி, மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய்த் துராலோசனைசெய்து, சபையுஞ் சபையிலுள்ள ஒவ்வொருவரும் பரிசுத்தராயிருக்க, நீங்கள் உங்களை முதன்மைப்படுத்துகிறதென்னவென்று கேட்டார்கள். (எண். கசு. ரு.

மோசே யெகோவா தம்முடையவனும், பரிசுத்தனும் இன்னானென்று நாளைத் தெரிவிப்பார். அவர் தமது சமுகத்தில் அவனைச் சேர்ப்பார். நீங்கள் நாளைத் தூப கலசங்களிலே கந்தவருக்கங்களையிட்டு யெகோவாவுக்கு முன் கொண்டுவாருங்கள். அப்பொழுது யெகோவாவாற் தெரிந்துகொள்ளப்படுபவன் எவனோ அவனே பரிசுத்தமாவான். நீங்கள் ஆரோனுக்கு விரோதமாய் மொறுமொறுக்க அவன் எம்மாத்திரம் என்றான். (எண். கசு. கக.

எ0. அதற்கவர்கள் பாலுந் தேனும் பெருகுகிற எகிப்தை விட்டு எங்களை அழைத்துவந்தது அற்பகாரியமா? நீ எங்களுக்கு விளை நிலங்களையும், திராட்சத் தோட்டங்களையும், சுதந்தரமா

கக் கொடுப்பேன் என்று சொல்லி அழைத்து வந்தாயே? அந்தப்படி தந்தாயா? நீஇந்தச் சனங்களுடைய கண்களைத் தோண்டப் பார்க்கிறாயா? நாங்கள் வரமாட்டோமென்றார்கள்.

(எண். கசு. கச.

எக. பின்பு மோசே கோராகுடனே, நீயும் உன் கூட்டத்தாரும் யெகோவாவின் சந்நிதியில்அவரவர்தூபமுட்டிகளிலேதூபவர்க்கங்களை இட்டுக்கொண்டு வாருங்கள். ஆரோனும் அப்படியே வரட்டுமென்றான். அப்படியே யாவரும் மறுநாள் தங்கள்தங்கள் தூபமுட்டிகளில் அக்கினியையிட்டுத் தூபவர்க்கங்களையுந் தூவி ஆவாச வாசலிலே கொண்டுவந்து மோசேயோடும் ஆரோனோடும் நின்றார்கள். கோராகைச் சார்ந்த சபையாரும் அங்கே போய் நின்றார்கள்.

(எண். கசு. கக.

எஉ. அப்பொழுது யெகோவா நான் இந்தச் சபையை இந்த நிமிஷத்தில் அழிப்பேன். நீங்கள் அவர்களை விட்டு விலகுங்களென்றார். அதற்கு மோசே ஒருவன் செய்த பாவத்தினிமித்தம் சபையார் யாவரையும் சங்கரிப்பீரோவென்றான். அதற்கு யெகோவா சபையார், கோரா, தாதான், அபிராம் என்பவர்களுடைய கூடாரத்தை விட்டுப் போகும்படி நீ அவர்களுக்குக் கட்டளையிடு என்றார்.

(எண். கசு. உரு.

எஈ. மோசே அதை அறிவிக்க சபையார்யாவரும் அம்மூவரையும் அவர்கள் கூடாரங்களையும் விட்டு நான்கு திசையிலும் விலகி ஓடினார்

கள். உடனே பூமி பிளந்து கோராகு, தாதா ன், அபீராம் என்பவர்களையும், கூடாரத்திருந்த வர்களையும், அவர்களவர்கள் திரவியங்களையும் ஏகமாய் அமிழ்த்திவிட அவர்களும் பாதாளத்தி ல் அமுங்கினார்கள். அப்பொழுது தூபங்காட் டிநின்ற, உருo பேரையும் அக்கினி பட்சித்தது. இவர்கள் கொண்டுவந்த தூபகலசங்கள், உரு0. தையும் எடுத்துத் தகடாக்கி வேதிகையை மூடி னார்கள். (எண். கசு. ருஅ.

எச. மறுநாள் இஸ்ரவேற் சபையார் முதனா ள் நடந்த காரியத்தைச்சுட்டி மோசேக்கு வி ரோதம் பேசினதினால் அந்தச் சபையில் ஒரு பெரிய சங்காரந் தொடங்கிச் சனங்களை ஒரு புறமாய்ச் சேதப்படுத்தி வருகையில், மோசே யுடைய ஏவுதற்படி ஆரோன் பரிசுத்த அக்கினி யைத் தூபக் கலசத்திலிட்டு, அதன்மேல் தூப வருக்கத்தைத் தூவி ஏந்திப்போய் மரித்தவர்க ளுக்கும் உயிரோடிருக்கிறவர்களுக்கும் இடை யே நின்று பிராயச்சித்தஞ்செய்தான். உடனே சங்கார வேதனை நின்றுவிட்டது.

(எண். கசு. சஅ.

எரு. பின்பு மோசே பன்னிரண்டு கோ த்திரத்துக்கும் தலைவரான பன்னிரண்டுபேரு ம் ஆளுக்கொவ்வொருகோல் எடுத்துத் தங்கள் தங்கள் நாமங்களைத் தீட்டிக்கொண்டு வரும்ப டிகட்டளையிட்டுஅவைகளைவாங்கிஆவாசத்தில் வைத்து, மறுநாள் அந்த இடத்துக்குப் போக,ஆ ரோனுடைய கோல்மாத்திரம் இலை தளிர்த்துப் பூ வரும்பிப் புட்பித்து, மாதுளம்பழம் பழுத்தி

ருக்கக் கண்டு அந்தக்கோல்கள் எல்லாவற்
றையும் எடுத்துச் சகலருக்குமுன்பு கொண்
டுவர, தலைவர் யாவரும் தங்கள் தங்கள் கோல்க
ளை வாங்கிக்கொண்டார்கள். யெ:கோவா வி
தித்தபடி ஆரோனுடைய கோலைமாத்திரம் சாட்
சிப்பெட்டிக்கு முன்னே வைத்தான்.
(எண். கஎ. அ.

எசு. இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் புறப்
பட்ட, ரூஅம். வருஷத்தில் மறுபடியும் சீன்வ
னத்தைச் சேர்ந்து காதேசிலே தங்கினார்கள்.
அங்கிருக்கையில் மோசேயின் சகோதரியான
மிரியம் மரித்தாள். அங்கே சனங்கள் தண்ணீ
ர் கிடையாமல் வருந்திக் குறைகூறினதை மோ
சே யெகோவாவுக்கு முறையிட, யெகோவா
நீ உன் கோலைக் கையில் எடுத்துக்கொண்டு ஆ
ரோனையும் மற்றும் சபையாரையும் ஏகமாய்க்
கூட்டிக்கொண்டு இந்த மலையைப் பார்த்துப்
பேசு. அப்பொழுது அதிலிருந்து தண்ணீர் பா
யும். அதிலே சனங்களும், மிருகசீவன்களும்
குடிக்குமென்றார். (எண். உ0. அ.

எஎ. மோசேயோ, கலகக்காரரே, இந்தக்கல்
லிலிருந்து உங்களுக்குத் தண்ணீர் பாயப்பண்
ணுவோமாஎன்று சொல்லித் தன்கோலைக்கொ
ண்டு அந்த மலையில் அடித்தான். அதிலிருந்து த
ண்ணீர் பாய்ந்தது. அதிலே சனங்கள் குடித்தார்
கள். மிருகங்களுங் குடித்தன. (எண். உ0. கக.

யெகோவா மோசேயையும் ஆரோனையும்
நோக்கி நீங்கள் என்மேல் அபூரண விசுவாசங்
கொண்டு என்னை அவசங்கித்தபடியால் நான்

வாக்குப்பண்ணின தேசத்துக்கு இவர்களை அ
ழைத்துப் போகமாட்டீர்களென்றார்.

(எண். ௨௦. ௧௨.

௭௮. அக்காலத்தில்மோசே காதேஷிலிருந்து
கொண்டு ஏதோமினிராசாவுக்குத் தூதனுப்பி,
நாங்கள் எகிப்திலே பட்ட துயரங்கள் முழுதும்
உமக்குத்தெரியும். நாங்கள் பட்ட துயரத்தை
அறிந்து யெகோவா தமது தூதனை அனுப்பி எ
ங்களைமீட்டு இவ்விடத்திலே கொண்டுவந்தார்.
நாங்கள் உமது தோட்டங்கள் விளைநிலங்கள்வ
ழியாய்ப் போகாமலும், உமது துரவுகளிலே த
ண்ணீர் குடியாமலும் பெரும் பாதை வழியாய்
உமது தேசத்தின் ஊடே நடந்து போவோம்,
அதற்கு இடங் கொடுமென்றுசொல்லியனுப்பி
னான். (எண். ௨௦. ௧௭.

௭௯. அதைக் கேட்ட ஏதோமின் ராசன் ம
றுத்ததினாலே, இவர்கள் அவன் ஊரைவிட்டுத்
தெற்கே திரும்பி, ஏதோமின் ஓரத்திலுள்ள ஓர்
என்னும் மலைக்குப் போனார்கள். அங்கே யெ
கோவா மோசேயையும் ஆரோனையும் சந்தித்து
நீங்கள் மேரிபா சலசமீபத்தில் என் கட்டளை
யை மீறினபடியால் ஆரோன் இங்கே மரிக்க
வேண்டும்; ஆகையால் ஆரோனின் புத்திரனாகி
ய எலீயேசருக்கு இந்த மலையில் ஆசாரிய அபி
ஷேகஞ் செய்யென்று கற்பித்தார். மோசேயு
ம் அந்தப்படியே செய்தான். ஆரோன் அங்
கேமரித்தான். சனங்கள் ஆரோனுக்காக முப்
பது நாள் துக்கங்கொண்டாடினார்கள்.

(எண். ௨௦. ௨௯.

௮0. பின்பு இஸ்ரவேலர் கானனுக்கு வரு கிறார்களென்று கானன் இராசா கேள்விப்பட்டு தளங்களோடே வந்து இவர்களை எதிர்த்து யுத்த ஞ்செய்து சிலரைச் சிறைப்படுத்திக்கொண்டு போயும், இவர்கள் யெகோவாவுடைய சகாயத் தினால் மறுபடியும் அவர்களைச் சயங்கொண்டு சிறைமீண்டு ஏதோம் தேசத்தைச் சுற்றிப் போ கும்படி ஓர் என்னும் மலையினின்று செங்கடற் கரை வழியாய் நடந்து சீர் மலைச் சங்கிலியைக் கடந்துபோகையில், ஆகாரத்துக்குந் தண்ணீரு க்குஞ் சிறுமைப்பட்டதினாலும், வழி வருத்தத் தினாலும் யெகோவாவுக்கும் மோசேக்கும் வி ரோதம் பேசினார்கள். (எண். ௨௧. ௪.

௮௧. அதினிமித்தம் கொள்ளிவாய்ச் சருப்ப ங்கள் தோன்றி அனேகரைக் கடித்துக் கொன் றுபோட, அவர்கள் மனஸ்தாபப்பட்டு அறிக் கையிட்டபொழுது, யெகோவாவின் கட்டளை ப்படி மோசே ஒருபித்தளைச் சருப்பத்தைச்செ ய்து ஒரு ஸ்தம்பத்தின்மேல் உயர்த்தி வைத்தா ன். கொள்ளிவாய்ச் சருப்பத்தினாலே கடியு ண்டவர்கள் பித்தளைச் சருப்பத்தைப் பார்த்து ப் பிழைத்தார்கள். (எண். ௨௧. ௯.

௮௨. பின்பு பிரயாணப்பட்டு நடந்து ஒபோ த்தில் வந்து தங்கினார்கள். அதில் நின்றும் பு றப்பட்டு மோவாபுக்கு எதிராக வனத்திலே த ங்கினார்கள். அதினின்று சாரேத்துக்கு வந்து தங்கினார்கள். அதினின்றும் அர்னோன் நதி தீர த்தில் வந்து தங்கினார்கள். அதில் நின்றும் பே ருக்குப் போனார்கள். அதில்நின்றும் மத்தானா

வுக்குப் போனார்கள். அதினின்றும் நகாலியே லுக்குப் போனார்கள். அதினின்றும் பாமோத்துக்குப் போனார்கள். அதினின்றும் பிஸ்காவுக்குப்போனார்கள். (எண். உக. கக.

அரூ. பிஸ்காவிலிருந்து எமோரியருடைய ராசனாகிய, சீகோனுடைய தேசத்திலே பெரும்பாதைவழியாய்ப் போக உத்தரவு கேட்க, அவன் இடங்கொடாமல் தன் தளங்களோடே வந்து யுத்தஞ்செய்தான். இவர்கள் அவனைச் செயங்கொண்டு அவனுடைய தேசங்களை வசப்படுத்தி அதிலே வாசம்பண்ணி, பின்பு யாசேர் நகரத்தின் கிராமங்களைப் பிடித்து அங்கிருந்த எமோரியரையுந் துரத்திவிட்டார்கள்.

(எண். உக. ரூஉ.

அச. மறுபடியும் இவர்கள் பாஷான் வழியாய்ச் செல்ல, அதன் ராசாவாகிய ஒகு தன் தளங்களுடனே வந்து இவர்களோடெதிர்த்து யுத்தஞ் செய்தான். இவர்கள் அவனையும் அவன் புத்திரரையும் அவன் தளங்களையுஞ் சங்கரித்து அவன் தேசத்தையும் வசப்படுத்தினார்கள்.

(எண். உக. ரூரு.

அரு. பின்பு மோவாபின் சமபூமியிலே பாளயமிறங்கினார்கள். அதை மோவாபின் இராசனாகிய பாலாக் இஸ்ரவேலர் எமோரியருக்குச் செய்தவைகளைக் கேள்விப்பட்டுப் பயந்து, இஸ்ரவேலரைச் சபிக்கும்படி மெசொப்பொத்தாமியாவிலுள்ள பிலியாமென்னும் தீர்க்கதரிசியை அழைத்துவரும்படி சொல்லி அவனுக்குத் தட்சணையுங் கொடுத்தனுப்ப, அவர்கள் கொண்

டுபோய் இராசா தங்களுக்குச் சொன்ன வாக்குகளை அவனுக்கறிவித்தார்கள். அவன் அதைக் கேட்டு நீங்கள் இன்றிரவு இங்கே தங்கியிருங்கள். நான் யெகோவா சொல்வதைக் கேட்டு, உங்களுக்கு மறுமொழி சொல்லுவேன் என்ருன். (எண். உஉ. அ.

அகூ. அதைக் கேட்டுப் பிலியாமிடத்திற்போனவர்கள் அங்கே தங்கியிருக்க யெகோவா பிலியாமுக்குத் தரிசனையாகி, நீ இவர்களுடனே போகவேண்டாம். ஆசீர்வாதம் பெற்ற அந்தச் சனங்களைச் சபிக்கவும் வேண்டாம் என்ருர். அதைக்கேட்டுப் பிலியாம் நடந்த வர்த்தமானங்களைச் சொல்லி அனுப்பினுன். (எண். உஉ. கரு.

அஎ. அவர்கள் அதைக் கேட்டுப் பாலாக்கண்டைபோய்ச் செய்தியைஅறிவிக்கப், பாலாக்கு அவர்களிலும் விசேஷித்த பிரபுகளை அழைத்து நீங்கள் பிலியாமிடத்திற்போய் நீர் சொல்வதெல்லாவற்றையும் இராசா செய்வார். நீர் வந்து அந்தச் சனங்களைச் சபிக்கவேணுமென்று சொல்லி அழைத்துவாருங்களென்று அனுப்ப, அவர்களும் போய் அப்படியே சொன்னுர்கள். அதற்குப் பிலியாம் இராசா எனக்குத் தன் வீடு நிறைந்த திரவியத்தைக் கொடுத்தாலும் நான் யெகோவாவுடைய கட்டளையை மீறமாட்டேன், ஆகிலும் நீங்கள் இன்றிரவு இங்கே தங்குங்கள். யெகோவா எனக்குக் கற்பிக்கிறபடி செய்வேன் என்ருன். அவர்களும் அங்கே தங்கினுர்கள். (எண். உஉ. கஅ.

அஅ. அன்றிரவு யெகோவா அவனுக்குத் த

ரிசனையாகி, நீ அவர்களோடே போய் நான் உனக்குக் கற்பிக்கிறபடி செய் என்றார்.

(எண். உஉ. உ0.

பிலியாம் அதைக்கேட்டு அதிகாலையில் எழுந்து தன் கழுதையில் ஏறிக்கொண்டு இராசா தனக்குக் கொடுக்கும் திரவியங்களை வாங்கிக் கொண்டு அவன் சொல்லுகிறபடி செய்வதே நோக்கமாய்க் குறித்த பிரபுக்களுடனே கூடப் போனான். (எண். உஉ. உக.

அகூ. இவன் போகையில் யெகோவாவின் தூதன் உருவின கட்கத்துடனேவழியில்நிற்பதை அவன் கழுதை கண்டு வழியை விட்டு விலகி வயலிலிறங்க, பிலியாம் கழுதையை அடித்தான். அப்பால் யெகோவாவின் தூதன் இருபுறமும் சுவருள்ள திராட்சத்தோட்டத்துத் தெருவிலே போய் நிற்பதைக் கழுதை கண்டு, சுவர் ஓரமாய் ஒதுங்கப் பிலியாம் அப்பொழுதும் தன் கழுதையை அடித்தான். (எண். உஉ உரு.

மறுபடியுந் தூதன் ஒருகுச்சொழுங்கையிலே போய் நிற்கக் கழுதை கண்டு பயந்து விழுந்து படுத்தது. பிலியாம் அதிக வன்கண்ணனாய் அடித்தான். அப்பொழுது கழுதை தெய்வச் செயலாய் அவனுடனே பேசிற்று. யெகோவாவும் பிலியாமுடைய கண்களைத் திறந்தார். அவனும் யெகோவாவின் தூதனைக் கண்ணாரக் கண்டான். (எண். உஉ. உஎ.

கூ0. அப்பொழுது தூதன் இந்தக் கழுதை என்னைக் கண்டு பயந்து மூன்றுமுறை விலகவும் நீ அதை வன்கண்ணனாய் அடித்தாய். அதுவி

லகாமல் நேரே வந்தால் நான் உன்னையே சங்கரிப்பேன் என்றான். பிலியாம் என் வழி உமக்கு விரோதமாயிருந்தாற் திரும்பிப் போவேன் என்றான். அதற்குத் தூதன் நீஇவர்களோடே போய் நான் உனக்குச் சொல்லும் வாக்கையே நீயும் சொல்லென்று சொல்லி மறைந்தான்.

(எண். உஉ. ஙரு.

கூக. அதைக் கேட்டுப் பிலியாம் பாலாக்குடைய பிரபுக்களுடனே கூடிப் போக பாலாக்கு இவனுக்கு எதிர்கொண்டுபோய் உபசார வார்த்தைசொல்லி அழைத்து விருந்திட்டான். மறுநாட் பிலியாம் ஏழு வேதிகைகளைக் கட்டுவித்து ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும் ஆயத்தம்பண்ணுவித்து இஸ்ரவேலரைப் பார்க்கும்படி ஒரு மேட்டின்மேல் ஏறித் தேவனாற் சபிக்கப்படாதவனை நான் சபிப்பதெப்படி? நான் கன்மலை உச்சியில் நின்று இஸ்ரவேலரைக் கண்டேன். அந்தச் சனங்கள் தனித்திருப்பார்கள். யாக்கோபின் நுண்மணலைக் கணிப்பவன் யாவன்? அதில் நாலிலொன்றை மதிக்கவுங் கூடாது. என் மரணம் நீதிமானின் மரணமாகவும் என் முடிவு அவர்களுடைய முடிவாகவும் இருக்கக்கடவதென்றான்.

(எண். உங. சO.

கூஉ. அதைக் கேட்ட பாலாக்கு, நான் என் சத்துருக்களைச் சபிக்கும்படி கொண்டுவர, நீர் அவர்களை ஆசீர்வதித்தீரே. நீர் என்னுடனே வாருமென்று சொல்லிச் சோபீமின் வெளிக்கு அழைத்துப் போய் முன்போல வேதி

கைகளைக் கட்டி முன்போலவே பலிகளையுஞ் செலுத்தினான். (எண். உ௩. ௧௪.

௩௩. அப்பொழுது பிலியாம் இராசாவை அவ்விடம்விட்டுத் தனியே போய்த் தேவவாக்கைப் பெற்றுத் திரும்பப் பாலாக்கண்டைவந்து, இராசாவே தேவன் பொய்சொல்ல மனிதனல்ல, அவர் தாம் சொன்னதையே செய்வார். அவர் இவர்களை ஆசீர்வதித்துமிருக்கிறார். நான் அதை மாற்றமுடியாது. அவர் இஸ்ரவேலருக்குள் பாவத்தையும் துராசாரத்தையும் காணவில்லை. அவர்களுடைய தேவனாகிய யெகோவா அவர்களுடன் கூட இருக்கிறார். அவர்களுக்குள்ளே தொனியிருக்கிறது. இஸ்ரவேல் காண்டாமிருகத்தைப்போலப் பலவான். அவனுக்கு விரோதமான மாய வித்தையும் மாந்திரியமுமில்லை. அந்தச் சனம் பெண்சிங்கம்போல் எழும்பும். சிங்கக்குட்டிபோல் நிமிரும். அது தான் பிடித்த இரையைப் பட்சித்து, வெட்டுண்டவர்களுடைய இரத்தத்தைக் குடிக்குமுன் படுத்துக்கொள்ளாது என்றான்.

எண். உ௩. உ௩.

௩௪. அப்பொழுது பாலாக்கு நீர் இவர்களைச் சபிக்கவும்வேண்டாம், ஆசீர்வதிக்கவும் வேண்டாம், விடுமென்று சொல்லிப் பேயோரின் உச்சிக்கு அவனை அழைத்துக்கொண்டுபோய் முன் போல வேதிகைகளைக் கட்டிப் பலியிட்டான். அப்பொழுது பிலியாம் வனாந்தரத்துக்கு நேராய் அவர்களைப் பார்த்து யாக்கோபே, உன் கூடாரங்களும், உன் வாசஸ்தலங்க

ளும் எவ்வளவு சௌந்தரியம். அது மருதநி லம்போலவும், நதியோரத்தின் சோலைபோலவு ம், நீரருகேயுள்ள விருட்சங்கள்போலவும் இரு க்கின்றன. அவனுடைய ஏற்றச்சால்களில் இ ருந்து தண்ணீர்பாயும். அவனுடைய விதை நீர் நிலத்திலிருக்கும். அவனுடைய இராசாஆ காக்கிலும் மேன்மையுள்ளவன். அவனுடைய இராச்சியம் முக்கியம் என்பனவும் பிறவுமாகிய ஆசீர்வாதவாக்குகளைசொன்னான். (எண். ௨௪. ௭.

௩௫. இராசாக் கோபமூண்டு நான் என் ச த்துருக்களைச் சபிக்கும்படி உன்னை அழைப்பி த்தேன். நீயோமூன்றுமுறை அவர்களை ஆசீர் வதித்தாய். நான் உன்னை மேன்மைப்படுத்த எ ண்ணினேன். உன் தேவனாகிய யெகோவா தடு த்தார். நீ உன் இடத்துக்குப் போவென்றான்.

அப்பொழுது பிலியாம் இராசாவே, யாக் கோபிலிருந்து ஒரு நட்சத்திரம் தோன்றும். இ ஸ்ரவேலில் இருந்து ஒரு செங்கோல் எழும்பு ம். அது மோவாபியரையும், சேத்தின்சந்ததி யாரையும் நிருமூலமாக்கும். ஏதோமும் சேயீ ரும், அதற்குச் சுதந்தரமாகும். சாதிகளுக்குட் பிரதானமான அமலேக்கை அது நசுக்கும். கே னியன் மெலிவான் என்று சொல்லித் தன்னூரு க்குப் போனான். (எண். ௨௪. ௨௫.

௩௬. பாலாக்குடைய சங்கதி இப்படியிரு க்க, இஸ்ரவேலர் சித்தீமிலிருக்கையில், பிலி யாம் சொன்ன புத்தியை நம்பி மோவாபி ன் ஸ்திரிகளுடனே கலந்து அவர்கள் தெய் வங்களையும் நமஸ்கரித்தார்கள். அதினிமித்தம்

யெகோவாவுடைய கோபம் அவர்கள் மேற் பற்றி இருபத்திநாலாயிரம் சனம் வேதனைப்பட்டு மரித்தார்கள். அவ்வேதனை உண்டாயிருக்கையில், காஸ்பி என்னும் ஒரு மீதியானியஸ்திரீயும், சிம்றி என்னும் ஒருஇஸ்ரவேலனும் வருகிறதை எலீயேசரின் புத்திரனாகிய பீனிகாஸ் கண்டு ஒரு ஈட்டியை எடுத்து அவர்களைக் குற்றிக்கொன்று தேவகுரோதத்திற்குப் பிராயச்சித்தஞ்செய்தான். அந்த வாதை நின்றுபோயிற்று. (எண். உரு. கக.

கஎ. பின்பு யெகோவா மோசேயுடனே நீயும் என் கட்டளையை மீறினபடியால் நீ அபாரீமிலுள்ள நேபோ மலையின் பிஸ்காவென்னுஞ் சிகரத்திலேறி நான் ஆபிரகாம் முதலிய பூருவ பிதாக்களுக்கு வாக்குப்பண்ணின தேசத்தைப்பார். நான் ஆபிரகாம் முதலிய பூருவ பிதாக்களுக்கு வாக்குப்பண்ணின தேசத்தைக் கண்டறிவதன்றி அதைச் சேர்ந்தனுபவிக்க மாட்டாய். ஆகையால் நீ அபாரீமிலுள்ள நேபோ மலையின் பிஸ்காவென்னும் சிகரத்தில் நீ ஆரோனைப் போல உன் பிதாக்களுடனே சேர்க்கப்படுவாய். அதற்கு முன் நூனின் குமாரனாகிய யோசுவாவுக்கு அபிஷேகம் செய்துவையென்றார். மோசேயும் அப்படியே செய்தான்.

(எண். உஎ. கஉ. கஅ.

கஅ. பின்பு யெகோவா மோசேக்குக் கற்பித்தபடி இஸ்ரவேலருக்குள் ஒவ்வொரு கோத்திரத்துள் ஒவ்வோரு ஆயிரவராகத் தெரிந்து பன்னீராயிர யுத்தவீரரையும் ஆசாரியனான பீனி

காசையுங் கூட்டி மீதியானியருக்கு விரோதமா யனுப்ப, அவர்கள்போய் மீதியானியரையும் அவர்கள் இராசாக்களாகிய,ஏவி, ரேக்கேம்,சூர், ஊர்,ரேபா என்னும் ஐந்து இராசாக்களையும் பி லியாமையுங்கொன்று மீதியானியருடைய ஸ்தி ரீகளையுஞ் சிறையாக்கி அவர்கள்தேசங்களையுங் கொள்ளையிட்டுத் திரும்பிவந்தார்கள். அவர்க ளை எதிர்கொள்ளப்போன மோசே அந்த மீதியா னிய ஸ்திரிகளைக்கண்டு, தன்னுடைய தளகர்த் தர்மேற் கோபங்கொண்டு நமதுசபை யெகோ வாவின் பிரமாணங்களை மீறும்படி செய்த ஸ்தி ரீகள் இவர்களல்லவா? ஆதலாற் பாலப்பெண் கள் தவிர மற்றெல்லாப் பெண்களையுஞ் சங்கரி யுங்களென்று சகலரையுங் கொல்லுவித்தான்.

(எண். ௩௧. ௮—௧௭.

௩௩. அப்பொழுது ரூபேனரும் காத்தியரு ம் வந்து எங்களுக்கு ஆடுமாடுகள் மிகுதியாயிரு க்கிறது. இந்தத்தேசம் எங்கள் ஆடுமாடுகளுக்கு வசதியான இடம். ஆதலால் நீங்கள் தயைசெய் து இத்தேசத்தை எங்களுக்குக் கொடுக்கவேண் டுமென்று கேட்டார்கள். அதற்கு மோசே, மு ன்னே உளவாட்களாய்ப் போன பதின்மரும் வ ந்து தங்கள் சகோதரரை இளக்கரிக்கப்பண்ணி னார்கள். அதினிமித்தம் யெகோவா உங்கள் குழந்தைகளேயன்றி நீங்கள் கானானைச் சுதந்த ரிப்பதில்லையென்று சபதஞ்சொன்னார். அது போல நீங்களும் இந்தச்சனங்களுடைய மன தை இளக்கரிக்கப்பண்ணும்படி துணிகிறீர்கள் என்றான்.

(எண். ௩௨. ௧௫.

கOO. அதற்கு அவர்கள் எங்கள் ஆடுமாடுக ளும் எங்கள் குடும்பங்களும் இங்கே தங்கவி ட்டு நாங்கள் யுத்தசந்நத்தராய் அவர்களோடே நடப்போம். எங்களுக்குச் சுதந்தரவீதம் யோ ர்தானுக்குக்கிழக்கே பெற்றுக்கொண்டபடியா ல் நாங்கள் யோர்தானுக்கு மேற்குநாடுகளிலே சுதந்தரங் கேட்கமாட்டோமென்றார்கள்.

(எண். ஙஉ. கஅ.

கOக. அதற்குமோசே நீங்கள் இந்த வாக்கி ன்படி நடந்தால் யெகோவாவுடைய சமுகத்தி லே குற்றமற்றவர்களாய் இத்தேசத்திற்குத் திரு ம்பிவரலாமென்றான். அதற்கவர்கள் சம்மதித் ததினால் மோசே ஆசாரியனாகியஎலீயேசாருக் கும், யோசுவாவுக்கும், கோத்திரத்தலைவருக்கு ம், காரியத்தை அறிவித்து எமோரியருடைய இராசனாகிய சீகோனின் இராச்சியத்தையும் பாஷானுடைய இராசனாகிய ஓகின் இராச்சிய த்தையும், ரூபேனருக்கும், காத்தியருக்கும், சுத ந்தரமாகக் கொடுத்தான். (எண். ஙஉ. ஙங.

கOஉ. காத்தியர்தான், தீபோன், அதரோத், அ ரோவேர், அத்ரோத், ஷோபான்,யாசேர்,யொக் பிகா, பேத்நிம்ரா, பேதாறன்என்னும்பட்டினங் களைக்கட்டினவர்கள். ரூபேனர்தான்,எஷபோ ன்,எலியாலே,கீரியத்தாயீம்,நேபோ, பாகால்மி யோன், ஷிப்மாஎன்னும்நகரங்களைஉண்டாக்கி னவர்கள். மனாஷேயின்புத்திரனாகிய மாகீரின்ச ந்ததியார்கிலியாத்துக்குப் போய் எமோரியரைத் துரத்தி அதை வசப்படுத்தினார்கள். அப்பொழு து மோசே மனாஷேயின் புத்திரனாகிய மாகீ

ரின் கோத்திரத்தாருக்கு அதைக் கொடுத்தான். மனாசேயின் புத்திரனாகிய யாயீர்போய்க் கிலியாத்தின் சுற்றுப்பேட்டைகளை வசப்படுத்தி அவர்களுக்கு யாயீரின் கிராமங்களென்று பெயரிட்டான். நோபாக் போய் கேனாத்தையும் அதின் சுற்றுப்பேட்டைகளையும் வசப்படுத்தி அவைகளுக்கு நோபாக்கென்று பெயரிட்டான். இப்படியே இரண்டரைக்கோத்திரத்தாரும் யோர்தானுக்குக் கிழக்கே சுதந்தரம்பெற்றார்கள். (எண். ௩௨. ௪௧.

௧0௩. பின்பு மோசே தாங்கள் எகிப்தைவிட்டுப் புறப்பட்ட நாள்முதல் அந்நாள்மட்டுந் தங்கின அஞ்சல்களை, எண்ணாகமம், ௩௩. ம் அதிகாரத்தில் எழுதினான். ஆக அவர்கள் தங்கின அஞ்சல்கள் நாற்பத்திரண்டு. இஸ்றவேலர் எகிப்தைவிட்டு, ௧ ம். அஞ்சலிலே சீனாய்வனத்தில் வந்தார்கள் சென்ற, மீ. ௧. நாள். ௧௫. சீனாய்வனத்திற் தங்கின வருஷம், ௧. அதிலிருந்து ௪ ம். அஞ்சலிலே காதேஷபரனியாவுக்கு வந்தார்கள், சென்ற மீ. ஏறக்குறைய, ௨. அப்பொழுது தான் மோசே வேயரைக்கானானுக்கு அனுப்பினான். அவர்கள் கொண்ட அவிசுவாசத்தினிமித்தம் வழிதிரிந்து வனாந்திரத்தில், ௩அ. வருஷம் சுற்றினார்கள். ௩அ. வருடஞ்சென்றபின் மறுபடியும் காதேஷ் பரனியாவுக்குப் போனார்கள். அதிலிருந்துதெற்கேதிரும்பி ஓர்மலைக்கு வந்தார்கள். அதிலேஆரோன் மரித்தான். அதிலிருந்து செங்கடலுக்குவந்து சீ

ர் மலையைச் சுற்றிக் கிழக்கேபோய் வடக்கேதி ரும்பி நேபோ மலையைச் சேர்ந்தார்கள். அதிலே யெகோவா கானானை மோசேக்குக் காண்பித்தா ர். அதிலிருந்துதான் எமோரியரையும், பாஷா னையும், வசப்படுத்தி ரூபேனருக்குங், காத்தரு க்குங்கொடுத்தான். (எண். ௩உ. ௩௩.

கoச. பின்னும் யெகோவா மோசேயுடனே நீங்கள் சுதந்தரிக்கப் போகிற கானானுக்கு எல் லை தென்கிழக்குச் சீன்வனம், தெற்குக் காதே ஷ்பர்ணியா, தென்மேற்கு எகிப்துநதி, மேற்கு பெரிய கடலென்னும் மதித்தரேனியக் கடல், வடக்கு அமாத்து, வடகிழக்கு அத்சரேனா, கி ழக்கு கின்னரேத்கடல், யோர்தான்நதி, உப்பு க்கடல், இதற்குட்பட்ட பூமிமுற்றும் உங்களு க்குச் சுதந்தரமாகுமென்றார். (எண். ௩௪.

அதை மோசே சனங்களுக்கு அறிவித்ததும ன்றி இன்னும் அவர்களுடனே இரண்டரைக் கோத்திரத்தாரும் யோர்தான்நதிக்குக்கிழக்கே சு தந்தரம் பெற்றுக்கொண்டபடியால், மிச்சமான ஒன்பதரைக் கோத்திரத்தாரும் ஆசாரியனாகியஎ லியேசாரையும், நூனின்புத்திரனாகிய யோசுவா வையும் பிரபுக்களாக ஏற்படுத்தி யூதாகோத்திர த்துக்குக் காலேபையும், ஷிமியோன் கோத்தி ரத்துக்கு ஷிமுவேலையும், பேன்யாமீன் கோத் திரத்துக்கு எலிதாதையும், தாண் கோத்திரத்துக் கு புக்கீயையும், மனாசே கோத்திரத்துக்கு அன்னியலையும், எப்ராயீம் கோத்திரத்துக்கு கேமூவேலையும், செபுலோன் கோத்திரத்துக்கு இலீத்சாபானையும், ஈஷகார் கோத்திரத்துக்கு

ப்பலத்தியேலையும், ஆஷேர் கோத்திரத்துக்கு அகியுத்தையும், நப்தாலி கோத்திரத்துக்கு பிதாகேலையும் தலைவராகத் தெரிந்துகொண்டு சீட்டுப்போட்டுச் சீட்டு விழுந்தபடியே அவரவருக்குச் சுதந்தரம் பெற்றுக்கொள்ளுங்கள். (எண். ௩௪. கசு—உக.) உங்களுங்கள் சுதந்தர பூமியிலேதான் ஆசாரியருடைய பங்குமிருக்கவேண்டும். நீங்கள் லேவியருக்குக் கொடுக்கும்,சஉ. பட்டினங்களும் மதிற்புறத்தில் பேட்டைகளும் அவர்களுக்கிருக்கவேண்டும். இதைவிட ஆறுநகரங்கள் உங்களுக்கு அடைக்கலபுரங்களாய் இருக்கவேண்டும். அந்நகரங்களில்யோர்தான் நதிக்குக்கிழக்கே மூன்று நகரங்களிருக்கவேண்டும்,மற்றநகரங்கள்மூன்றும்கானானுக்குள்ளிருக்கவேண்டுமென்றுகட்டளையிட்டான்.(எண்.௩௫.

க௦௫. பின்பு மோசே யெகோவா சீனாயிற்றோன்றி, சேயீரிலுதித்துப் பாரானிலே பிரகாசித்தார். அவ்ருடனே பதினாயிரம் பரிசுத்தர் வந்தார்கள். அவருடைய வலக்கரத்திலே சீவசோதியான ஓர் பிரமாணந் தோன்றிற்று.*அவர் அவர்களை நேசித்தார். அவருடைய பரிசுத்தவான்கள் அவர் கையில் இருக்கிறார்கள். அவர்கள் அவரைப்பணிந்து அவருடைய வசனங்களைக் கிரகித்தார்கள். அவர் நியாயப்பிரமாணத்தைச் சபைக்குச்சுதந்தரமாகக்கொடுத்தார்.(உபா.௩௩.௩.

க௦௬.(க.) ரூபேன் சீவிப்பான். அவன்சனஞ் சுருங்காது. (உ.) யூதாவின்கை வலிமைபெறக்கடவது. அவனுடைய சத்துருக்களினின்றும்அவ

* அப்போஸ்தலர். எ. ௫௩.

ளை விடுவியும். (ரு.) லேவி உமது பிரமாணங்களை
ப் போதித்து உமது சமுகத்திலே, தூபவர்க்
கத்தையும் பலிகளையுமிட்டு உமது உடன்படி
க்கைக்குக் காத்திருக்கிறுன். அவனை ஆசீர்வதி
த்து அவன் கிரியைகளிற் பிரியமாயிரும். (சு.)
பேன்யாமீன் யெகோவாவின் சமுகத்தில் விக்
கினமின்றி வசிப்பான். அவர் அனுதினமும்
அவனைத் தாங்கி அவன் எல்லைக்குள் வசிப்பா
ர். (ரு.) யோசேப்புக்கு ஆகாயத்தின் ஆசீர்வா
தங்களும் கடல்படு திரவியங்களும், மலைபடுதி
ரவியங்களும், தரைபடுதிரவியங்களும் வர்த்தி
க்கும். யெகோவாவுடைய ஆசீர்வாதம் அவன்
உச்சியில்வரும். அவன் எப்ராயீம், மனுசே எ
ன்னுங் கொம்புகளைக்கொண்டு செயங்கொள்
வான். (கூ.) செபுலோன் பயணத்திலும், (எ.) ஈஷ
கார் கூடாரத்திலும் களிகூருவார்கள். அவர்கள்
சமுத்திர திரவியங்களையும், புதையல்களையும்,
அனுபவிப்பார்கள். (அ.) காத்து சிங்கத்தைப்
போலிருந்து புயத்தையும் உச்சியையும் பீறுவா
ன். (கூ.) தாண் சிங்கக்குட்டி. அவன் பாஷா
னின் நின்றும் பாய்வான். (கo.) நப்தாலி ஆசீர்
வாதத்தினுலே நிறைந்து மேற்றிசையையுந் தெ
ன்றிசையையுஞ் சுதந்தரிப்பான். (கக.) ஆஷேர்
எண்ணெயிலே தன்பாதத்தைத் தோய்ப்பான்.
இரும்புஞ் செம்பும் அவன் பாதரட்சையின் கீ
ழிருக்கும். அனுதி தேவனே இஸ்ரவேலருடை
ய அடைக்கலம். அவர் அவன் சத்துருக்களைத்
துரத்தி அவர்களை அழிப்பார். இஸ்ரவேலே,
யெகோவா உனது கேடகம். அவரே உன

து கட்கம். உன் சத்துருக்கள் உனக்கு வசப்ப டுவார்கள். நீ உயர்ந்த ஸ்தானத்தில்ஏறுவாயென் று ஆசீர்வாதஞ்சொல்லி, (உபா. ரூரு.) நேபோ விலுள்ள பிஸ்காவின் உச்சியிலேறிக் கானான் முழுவதையும் கண்ணாரக்கண்டு, கஉ0. வயதா யிருக்கையில் பிஸ்காவிலே மரித்தான். அவனை ப் பேத்பேயோருக்கெதிரான தாழ்ந்த பூமியில் தெரியாமலடக்கம்பண்ணினார். (உபா. ரூச. எ.

கOஎ. அதின்மேல் யோசுவா கானானையும் எரிகோவையும் உளவுபார்த்து வரும்படி இர ண்டு தூதரை அனுப்ப அவர்கள்போய் இராகா ப்பென்னும் ஒரு ஸ்திரீயுடைய மடத்தில் அன் றிரவு தங்கினார்கள். அதை இராசாக் கேள்வி ப்பட்டு அவர்களைப் பிடிக்கும்படி ஆட்களை அனுப்பினான். அவள் அவர்களைச் சணற்கம்பு க்குள் மறைத்து வைத்துக் கொண்டு புதிதாய்வ ந்த இருவர் இங்கே இருந்ததுமெய். அவர்கள் நகர வாயில் அடைக்கப்படாமுன் புறப்பட் டார்கள் என்றாள்.* அதை அவர்கள் நம்பி அ வ்விடத்தை விட்டு யோர்தான்மட்டுந் தேடிப் போய் அவர்களைக் காணாமற் திரும்பிப் போனா ர்கள். இவளோ இஸ்ரவேலர் அந்நகரத்தை அ ழிக்கும்பொழுது தன்னுடைய குடும்பத்தைக் காத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டு அவ ர்களைப் பலகணிவழியாய் இறக்கி விட்டாள். அவர்கள் போய் மூன்றுநாள் மலையில் மறைந் திருந்து மறுபடி யோர்தானைக் கடந்து பாளயத் திற் சேர்ந்து நடந்த சங்கதிகளை யோசுவாவுக்கு அறிவித்தார்கள்.     (யோசுவா. உ.

* யாக்கோபு. ரு. உரு.

கOஅ. மறுநாள் யாவரும் புறப்பட்டு யோர்தான்மட்டும்போய் அதிலே மூன்று நாள் தங்கினார்கள். பின்பு யெகோவா யோசுவாவுக்குக் கற்பித்தபடி ஆசாரியர்கள் உடன்படிக்கைப் பெட்டியைக் காவிக்கொண்டுபோய் யோர்தானிலே இறங்க, அந்நதியில்ஓடிவருகிறசலம் பெட்டிபோகிற வழிக்குவராமல், வரும் நீர் வடக்குப் புறத்திலே மதில்போலக் குவிந்து நிற்கத், தெற்கே நின்ற சலம் உப்புக்கடலுக்கு ஓடிப் போயிற்று. அப்பொழுது சனங்கள் யோர்தான் நதிவழியாயுலர்ந்த தரையிலே நடந்து எரிகோவுக்கெதிரே கரைஏறினார்கள். சனங்கள் கரையேறிமுடியுமளவும் பெட்டியைச்சுமந்த ஆசாரியர் பெட்டியையுங் காவிக்கொண்டுயோர்தானின் மத்தியில் நின்றார்கள். (யோசுவா. ௩. கஎ.

கOகூ. அதின்பிறகு யெகோவா யோசுவாவுக்குக் கற்பித்தபடி யோர்தானின் மத்தியிலிருந்து பன்னிரண்டு கற்களை எடுத்துக் கரைக்குக் கொண்டுபோய் அது தங்களுக்கும் தங்கள் பின் சந்ததியாருக்கும் நினைவுக்குறியாக நிறுத்தி, கம். ௴. கO. திகதி. எரிகோவுக்குக் கீழ்எல்லையான கில்காலிலே பாளயமிறங்கித் தங்கினார்கள். இந்தச் சங்கதியை எமோரியராசாக்களும், கானானியராசாக்களும், கேள்விப்பட்டுத் தைரியங் குன்றிஅடைகோட்டைப்பட்டுஇருந்தார்கள். அக்காலத்தில் யெகோவா கற்பித்தபடி சகல ஆண்மக்களும் விருத்தசேதனம் பண்ணப்பட்டார்கள். (யோசுவா. ரு. எ.

ககO. பின்பு இஸ்ரவேலர் அந்தமாதம், கசவ

கில்காலிலே பஷ்காவை ஆசரித்தார்கள். அப்பொழுதுதான் மன்னாவருஷம் நின்றது. அவர்கள் அங்கிருக்கையில் ஒருவர் கட்கதாரியாய் நிற்கிறதை யோசுவாகண்டு அணுகிப்போய் நீர் எங்கள் பட்சத்தவனோ? எங்கள சத்துருக்கள்பட்சத்தவனோ என்று வினவ, அவர் நான் யெகோவாவின் சேனாபதி. (யோசு. ரு. கசு.) நான் எரிகோவையும் அதின் ராசாவையும், அதின் யுத்தவீரரையும் உனக்கொப்பித்தேன். நீங்கள் அனைவரும் யுத்த சந்நத்தராகி இந்த எரிகோ நகரத்தை நாளொருதரம் சாட்சிப்பெட்டியையுங்கொண்டு எக்காளங்களையும் ஊதிச்சுற்றிவந்து ஏழாந்தினத்தில் அதை ஏழுமுறைசுற்றிவந்து பெருநாதஞ் செய்யுங்கள். அப்பொழுதே நகரத்தின் மதில் இடிந்து விழுமென்றார். அந்தப்பிரகாரம் அவர்கள் நாளொருமுறை ஆட்டுக்கடாக் கொம்பாலாகிய ஏழு எக்காளங்களை ஊதிக்கொண்டு ஏழு ஆசாரியர் முன்போக, யுத்தசந்நத்தர் அவர்கள் முன்போக, நடுவே சாட்சிப்பெட்டிபோக, பின்னணியிலே சனங்கள் போனார்கள். (யோசுவா. சூ. கக.

கககக. இப்படியே ஆறுநாளும் ஒருநாளொருமுறை நகரத்தைச் சுற்றிவந்து ஏழாம் நாளில் அதை முறைப்படி ஏழுமுறை சுற்றிவந்து ஆரவாரிக்க அதின் மதில் இடிந்துவிழுந்தது.* உடனே யாவரும் உட்பிரவேசித்து அதைச் சருவசங்காரம் பண்ணினார்கள். அந்நகரத்தை வேவுபார்க்கப் போன இருவரும் யோசுவாவின் உத்தரப்படி இராகாப்பின் வீட்டுக்குப் போய் அவ

* எபிரேயர். கக. கo

ளையும் அவள் குடும்பத்தாரையும் வெளியே அ ழைத்துவந்து தற்காத்தார்கள்.* அந்தநாள் அவ ர்களுக்கு மகோற்சவதினமும், ஓய்வுநாளுமாக க் கொண்டாடப்பட்டது. அதிலுள்ள பொ ன்வெள்ளி முதலிய லோகபாத்திரங்கள் யாவும் யெகோவாவின் ஆலய திரவியங்களாக வைக் கப்பட்டன. யோசுவா எரிகோநகரத்தைத் திரு ம்பக் கட்டத்துணிபவன் சபிக்கப்பட்டவன் எ ன்றுசபித்தான். அப்படியே இன்றும் அதுபூரு வஅஸ்திபாரத்தில் முன்போலக் கட்டப்படாம ற்பாழ்நகரமாய்க்கிடக்கிறது. இப்பொழுது அதி லேசிலகுறுநிலமன்னர்வாசம்பண்ணுகிறார்கள்.

௧௧௨. யோசுவா எரிகோவின் திரவியங்கள் யாவுஞ் சபிக்கப்பட்டதென்றும், அதைத் தனக் கென்று எடுத்துச் சேகரிக்கிறவன் சபிக்கப்பட் டவனென்றும், கற்பித்திருக்க, ஆகான் அவை களிற் சிலதை எடுத்துத் தன் கூடாரமத்தியிலே புதைத்து வைத்தான். இப்படியிருக்கையில் இ ஸ்ரவேலர் ஆயிநகரத்தாருடனே யுத்தத்துக்குப் போய் முப்பத்தாறு சனங்களை இழந்து தோற் று ஓடிவர, யோசுவா அதிக சஞ்சலமுள்ளவனா கி யெகோவாவைப் பிரார்த்தித்தான். யெகோ வா அவனுக்கு உன்சனங்கள் என் நியமத்தை மீறி எரிகோவின் சபிக்கப்பட்ட பொருள்களி ற் சிலவற்றை எடுத்துத் தங்கள் திரவியங்களுட னே சேமித்துக்கொண்டார்கள். அவர்கள் அவை களை வைத்துக்கொண்டதினால் நான் உங்களைக் கைவிடுவேன், நீங்கள் உங்கள்சத்துருக்களுக்கு எதிர்நிற்க மாட்டீர்களென்றார். (யோசு. எ.௧௬.

* எபிரேயர். ௧௧. ௩௧.

கக௩. யோசுவா அதைக்கேட்டு அந்தவஞ்சக னை அறியும்படி சீட்டுப்போட, ஆகான் வெளி ப்பட்டான். அப்பொழுது யோசுவா அவனை ப்பட்சமாய் அழைத்து நீ என்ன செய்தாய் என் று கேட்க, அவன் நான் ஒரு பாபிலோனிய வ ஸ்திரத்தையும், உ௦௦. ஷேக்கல் வெள்ளியையு ம்,ரு௦. ஷேக்கல் நிறைகொண்ட ஒருபொற்பாள த்தையும் எடுத்து என்கூடாரமத்தியிற்புதைத்தே ன் என்றான். அப்பொழுது யோசுவா ஆட்களை அனுப்பி அவைகளை எடுப்பித்துக்கொண்டு அவ னையும் அவன்மக்களையும் அவன்திரவியங்களை யுங்கொண்டு அக்கோர் பள்ளத்துக்குப் போய் அவர்களைக் கல்லெறிந்து கொன்று அவனையும் அவனுடைய திரவியங்களையுஞ் சுட்டுப்போட் டான்.* (யோசு. எ. உரு.

ககச. அதின்பிறகு யெகோவா கற்பித்தபடி படையெடுத்துக்கொண்டு ஆயிக்குச் சமீபமாய் ப்போய் முப்பதினாயிரம் படைவீரரைத்தெரிந் து அவர்களுடனே நீங்கள் நகரத்துககு மறுபுறத் திலேபோய்ப் பதிவிருங்கள். நாங்கள் எதிர்ப் புறமாய்ப் போய் எதிர்த்து யுத்தஞ்செய்து புறங் கொடுத்து ஓடுகிறோம். அவர்கள் நகரத்தைவி ட்டு எங்களைத் தொடர்ந்து வருவார்கள். நீங்க ள் நகரத்திலுட் பிரவேசித்து அதைச்சுட்டுப் போடுங்களென்று சொல்லி அனுப்பியபின், இன்னும் ஐயாயிரம் பேரைத்தெரிந்து நகரத்துக் கு மேற்குப் புறமாக வைத்துத் தானும் சேனையு ம் அதின் எதிர்ப்புறத்திற் பாளயமிறங்கினார்க ள். (யோசு. அ.

* க. தீமோதேயு. ௬. ௬. க௦. கருஉ

கககு. அதைக் கண்ட ஆயியின் சனங்களும் இராசாவும் யோசுவாவோடும், அவன் சனங்களோடும் வந்தெதிர்க்க இவர்கள் தோற்றோடுகிறவர்கள்போல் வனாந்தரவழியாய் ஓடினார்கள். அப்பொழுது ஆயி நகரத்தார் சகலரும் நகரவாசலைத் திறந்துவிட்டு இஸ்ரவேலரைத் தொடர்ந்து ஓடப், பதிவிருந்தவர்கள் வந்து அதில் உட்பட்டு நெருப்பிட்டார்கள். யோசுவாவும் சனங்களும், திரும்பி எதிர்த்தார்கள். ஆயியின் சனங்களும் இராசாவும் ஓட இடமில்லாமற் பொறியில் அகப்பட்ட எலிபோல அகப்பட்டுக்கொள்ள, மூன்று அணியிலுள்ள இஸ்ரவேலரும் ஒருமித்து ஆயி நகரத்திலுள்ள பன்னீராயிரம் ஆத்துமாக்களைச் சங்கரித்து ஆயியின் இராசாவையும் ஒரு மரத்திலேதூக்கிக்கொன்று நகரத்தையும் கொள்ளையிட்டார்கள். பின்புயோசுவா ஏபால் மலையிலே ஓர்வேதிகையை உண்டாக்கி யெகோவாவுக்குப் பலியிட்டு வேதப் பிரமாணத்தையும் முற்றாக வாசித்து முடித்தான்.

(யோசுவா. அ.

கககூ. இஸ்ரவேலருடைய பல பராக்கிரமவீரங்களைக் கேள்விப்பட்ட கிபியோனியர் பழைய பைகளையும், பழைய துருத்திகளையும், பழைய செருப்புக்களையும், பீறல் வஸ்திரங்களையும், பூஞ்சுபிடித்த அப்பங்களையும் கொண்டு யோசுவாவிடத்தில் வந்து நாங்கள் பரதேசிகள். நீங்கள் எங்களுடனே சமாதான உடன்படிக்கையைப்பண்ணவேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு இஸ்ரவேலர் நீங்கள் இத்தேசத்தி

ல் வாசம்பண்ணுகிறவர்களாய் இருக்கக்கூடும். அப்படியிருக்க, நாங்கள் உங்களோடே உடன் படிக்கைபண்ணுவதெப்படியென்று மறுத்தும், அவர்கள் இட்ட ஆணையை நம்பி அவர்களுட னே உடன்படிக்கைபண்ணிக்கொண்டார்கள். (யோ. கூ. கரு.

ககஎ. மூன்றாம்நாளில் இஸ்ரவேலர் பயண ம்பண்ணி அவர்கள் பட்டினங்களிலே சேர்ந் தபொழுது அவர்கள் அத்தேசத்தவர்களென்று அறிந்து நீங்கள் எங்களை வஞ்சித்தீர்கள்; ஆகை யால் நீங்கள் சபிக்கப்பட்டவர்கள். இனி நீ ங்கள் தேவனுடைய ஆலயத்துக்கு விறகு வெ ட்டுகிறவர்களுந் தண்ணீர் அள்ளுகிறவர்களுமா ய்ச் சீவியுங்களென்றான். (யோசு. கூ. உக.

ககஅ. இதை யெருஷலேமின் இராசனாகிய அதோனிசெதேக் கேள்விப்பட்டு இஸ்ரவேலரு டனே சமாதானஞ் செய்த கிபியோனியரைச் சங்கரிப்பதற்கு நீங்கள் எனக்குத் துணைப்ப டையாய் வரவேண்டுமென்று எப்ரோனின் இ ராசனாகிய ஒகாமையும், யர்மூத்தின் இராசனாகி ய பீராமையும், லாகீஷின் இராசனாகிய யபீய வையும், எக்லோனின் இராசனாகிய திபீருவை யும், அவர்கள் தளங்களையும் அழைத்துக்கொண் டு தானுந் தன் தளங்களுடனே கிபியோனியரு டன் யுத்தத்துக்குப் போனான். அப்பொழுது கி பியோனியர் யோசுவாவிடத்திற் போய் எமோ ரின் இராசாக்கள் யாவரும் எங்களுடன் யுத்தஞ் செய்ய வந்திருக்கிறார்கள். ஆகையால் நீங்கள்

எங்களுக்கு உதவிசெய்யுங்களென்று மன்றாட, யோசுவாவுஞ் சனங்களும் எழுந்துபோய் அவர்களோடே யுத்தஞ் செய்தார்கள். அவர்கள் தோற்று ஓடுகையில் யெகோவா வானத்திலிருந்து கற்கள் அவர்கள்மேற் சொரியப்பண்ணினார். இஸ்ரவேலருடைய கட்க வாயினால் மடிந்தவர்களிலும், கல்மாரியால் மாண்டவர்கள் அனேகர். அந்தத் தினத்திலேதான் யோசுவா சந்திர சூரிய அஸ்தமனத்தை ஒருநாளாகத் தடுத்தான். (யோசு. கo. கரு.

இப்படியே யோசுவா தெய்வ சகாயத்தினாலே சத்துருக்களைச் செயித்துக் கில்காலுக்குத் திரும்பிப்போயிருக்கையிற் புறங்கொடுத்தோடிய இராசாக்கள் ஐவரும் மக்கேதாவின் மலைக்குகையில் ஒளித்திருக்கிறார்களென்று கேள்விப்பட்டு அந்தக் குகை வாசலைப் பெரிய கற்களால் அடைத்து மறித்துக்கொண்டு அவர்கள் பின்னணியைச் சருவ சங்காரமாக நாசப்படுத்துவித்தான். (யோசு. கo. உசு.

கககூ. பின்பு யோசுவா குகையில் அகப்பட்ட இராசாக்கள் ஐவரையும் பிடித்து அவர்களைக் கொன்று ஐந்து மரங்களிற் றூக்குவித்து, மக்கேதாவின் இராசாவையும் அதின் சனங்களையுஞ் சங்கரித்து அந்த இராச்சியத்தையும் வசப்படுத்தினான். அதினின்றும் லிப்னாவுக்குப் போய் அதின் இராசாவையுஞ் சனங்களையுஞ் சங்கரித்து அதையும் வசப்படுத்தினான். அதினின்றும் லாகீசுக்குப் போய் அதின் இராசாவையுஞ் சனங்களையும் சங்கரித்து அவனுக்குத் துணைசெ

ய்ய வந்த கேசேரையும் படைகளையுஞ் சருவ சங்காரஞ்செய்தான். (யோசு. கo. ருரு.

கஉo. பின்பு லாகீசையும் லாகீஷில் நின்று எக்லோனையும் சருவசங்காரம்பண்ணி எப்ரோனுக்குப் போய் யுத்தஞ்செய்து, அதின் இராசாவையும், அதின் சனங்களையுஞ், சமஸ்த சீவன்களையும் சங்கரித்துத் தேசத்தை வசமாக்கிக்கொண்டு, தீபீருக்குப் போய் அதற்குமப்படியேசெய்தான். இப்படியே காதேஷ்பர்னீய தொடங்கிக் காசாவரைக்குமுள்ள இராச்சியங்களையும் கிபியோனிலுள்ள கோஷேனையும் அடிப்படுத்திக்கொண்டு கில்காலுக்குத் திரும்பினான். அப்பொழுது ஆத்சோரின் இராசாவாகிய யாபீனையும், மாதோனின் இராசாவாகிய யோபாபையும், ஷிம்ரோனின் இராசனையும், வடக்கே மலைநாடுகளிலும், கின்னரோத்துக்குத் தென்னாடுகளிலும், கிழக்கிலும் மேற்கிலுமிருந்த கானானியரையும், மலைகளிலிருந்த எமோரியர், எத்தியர், பெரீசியர், எபூசியர் என்பவர்களையும், மிஸ்பாவிலுள்ள ஈவியரையுஞ் சேர்த்துக்கொண்டுபோய் இரததுரகபதாதிகளுடன் மேரோவின் சலசமீபத்திலே பாளயம்இறங்கினார்கள். (யோ. கக.

கஉக. அப்பொழுது யோசுவா தேவ உத்தரவு பெற்றுத் தன் தளங்களுடனே போய், எதிர்த்துச் சருவ நாசஞ் செய்தபின், ஆத்சோருக்குப் போய் அதின் இராசாவையும் தேசத்தையும் சங்கரித்தான். அந்நாளிலே சங்கரிக்கப்பட்ட ராசாக்கள் முப்பத்தொன்று. (யோசு. கஉ. உச.

இப்படியே செயவீரனாயிருந்த யோசுவா

விருத்தனான பொழுது யெகோவா அவனுக்குத் தரிசனையாகி இவர்கள் சுதந்தரிக்கவேண்டிய நகரங்கள்அனேகமாயிருக்கிறது. அதை நான் அவர்களுக்குக் கொடுப்பேன். ஆதலால் யோர்தானுக்குக் கிழக்கே சுதந்தரம்பெற்றுகொண்ட இரண்டரைக் கோத்திரந் தவிர, மற்ற ஒன்பதரைக் கோத்திரத்துக்கும் தேசம் முழுவதையும் சீட்டுப்போட்டுப் பங்கிட்டுக் கொடுஎன்றார். (யோசு. கரு. எ.

கஉஉ. யோசுவா தேசத்தைப் பங்கிட்ட விபரம்யோசுவாவின் புத்தகம், கசம். அதிகாரந்தொடங்கி, ககூம். அதிகாரம் வரைக்கும் காணலாம். அடைக்கல நகரங்களைப்பற்றி, உ0 ம். அதிகாரத்திற் காணலாம். ஆசாரிய நகரங்களைப் பற்றி, உக ம். அதிகாரத்திற் காணலாம்.

கஉரு. இப்படியே யெகோவா கானான் தேசத்தை அவர்களுக்குக் கையளித்து அவர்களை இளைப்பாறப்பண்ணினபின், யோசுவா ரூபேனியரையுங், காத்தியரையும், மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரையும் அழைத்து, மோசே உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த தேசத்துக்குப் போய் உங்கள் தேவனாகிய யெகோவாவில் அன்புவைத்து அவர் விதித்தபடி நடந்து அவருடைய கட்டளைகளைப் பேணிக்கொண்டு, அவரைச் சார்ந்து உங்கள் மனதிகளினால் அவருக்குத் தொண்டுசெய்ய எச்சரிக்கையாயிருங்கள், என்று சொல்லி அனுப்பிவிட அவர்கள் யோர்தானுக்குக் கிழக்கே போய்க் குடியேறியிருக்கையில் யோர்தானுக்கருகே ஒருவேதிகையைக்

கட்டினார்கள். அதை இஸ்ரவேலர் கேள்விப்ப
ட்டு விசனங்கொண்டு அவர்கள் யெகோவாவை
விட்டு விலகினது என்னவென்று விசாரிக்கும்
படி ஆசாரிய புத்திரனாகிய பீனிகாசையும் குடு
ம்ப பதிகளான பதின்மரையும் அனுப்ப அவர்
கள் போய் விசாரித்தார்கள். (யோசு. உஉ.

கஉச. அதற்கவர்கள் நாங்கள் யெகோவாவி
ன் ஆலயத்தைச் சார்ந்த சனம் என்பதை எங்க
ள் சந்ததியாரும் உங்கள் சந்ததியாரும் அறியும்
பொருட்டாகவே யெகோவாவின் சன்னிதி
வேதிகைபோல் ஒரு வேதிகையைச் செய்தோ
ம். அதுவேயல்லாமல் இதிலே யாதொரு ப
லிகளைச் செலுத்துகிற முகாந்திரமாய் இந்த வே
திகையைக் கட்டினதல்லவென்று சொன்னார்க
ள். அதையறிந்து இஸ்ரவேலர் சமாதானமா
யிருந்தார்கள். (யோசுவா. உஉ.

கஉரு. இப்படியே நெடுநாள் இஸ்ரவேலர் ச
மாதானம் பெற்றிருக்கையில் விருத்தனான யோ
சுவா தனக்கு மரணாந்தம் முடுகியிருக்கிறதென்
று அறிந்து இஸ்ரவேலின் முதியோரையும் அ
திபதிகளையும், நியாயாதிபதிகளையும், சனங்க
ளையும், சமுகமாக்கி, நீங்கள் அந்நிய சாதிகளு
டனே ஐக்கமாகாமலும், அவர்கள் தேவர்க
ளைப் பூசியாமலும்; வேதப்பிரமாணத்தை விட்
டு விலகாமலும், அந்நியருடனே சம்பந்தம்ப
ண்ணாமலும், எச்சரிக்கையாயிருங்கள். அப்
பொழுது யெகோவா உங்களுக்குச் சகல நன்
மையும் தருவார். நீங்கள் உங்கள் உடன்படி
க்கையை மீறி அந்நிய தேவர்களைப் பற்றிக்கொ

ள்வீர்களாகிற் சகல தீங்கும் உங்களைப் பற்றிக் கொள்ளுமென்று சொல்லி, ககo. வயதாயிருக்கையில் மரணமடைந்தான். அதன்பின்பு ஆரோனின் புத்திரனாகிய எலீயேசாரும் மரித்தான். (யோசுவா. உச. ரு௫.

கஉசு. யோசுவா மரித்தபின்பு காலேபு தலைவனாக நியமிக்கப்பட்டான். யூதாவின் சுதந்தர பூமி அப்பொழுதும் வசப்படுத்தப்படாமல் இருந்தபடியால் யூதாவின் கோத்திரத்தார் ஷிமியோனியரையும் சேர்த்துக்கொண்டு புறப்பட்டுக் கானானியரையும் பெரீசியரையுஞ் சயங்கொண்டு, பேசேக்கின் இராசனாகிய அதோனிபேசெக்குடனே யுத்தஞ்செய்து அவனைப் பிடித்து அவனுடைய பெரு விரல்களையுந் துண்டித்து, அவனை யெருஷலேமுக்குக் கொண்டு போனார்கள். அவன் முன்னே எழுபது ராசாக்களுடைய விரற்களைத் தறித்தபிரகாரம் அவனுக்குச் சம்பவித்தது. இதிலே தன் வினை தனக்குச் சூழுமென்பது நிறைவேறிற்று.

(நியாயாதி. க. எ.

கஉஎ. பின்பு யூதாவின் சந்ததியார் யெருஷலேமைப் பிடித்துக்கொண்டு நகரத்தையும், மலைத்தேசங்களிலும், தாழ்ந்த பூமியிலும் வசித்த கானானியரையும் சங்கரித்து எப்ரோனுக்குப் போய் ஷேஷாய், அகிமான், தல்மாய், என்னும் மூவரசர்களையுங் கொன்று தீபீருக்குப் போனார்கள். அப்பொழுது காலேபு கீரியாத்செப்பேரென்று பேர்கொண்ட திபீரை வசப்படுத்துகிறவனுக்கு என் புத்திரியாகிய அக்சா

ளை விவாகம்பண்ணிக்கொடுப்பேன் என்று வா க்குப்பண்ணினதினால் காலேபின் தம்பியாகி ய கேனாசின் புத்திரனான ஒத்னியேல் அதைப் பிடித்து அக்சாளையும் விவாகம்செய்தான். பி ன்பு யூதாவின் கோத்திரத்தாரும் போய்ச்சிப்பா த்தைப் பிடித்து அதற்கு ஓர்மா என்று பேரிட்டு க், காசாவையும், அஷ்கிலோனையும், எக்ரோ னையும், அதன் பேட்டைகளையும் பிடித்தார்க ள். (நியா. க. கஅ.

சஉஅ. எக்ரோனைக் காலேபுக்குக் கொடு த்தார்கள். காலேபு ஏனாக்கின் புத்திரர் மூவ ரையுந் துரத்தி ஆட்சிபெற்றான். பேன்யாமீன ர் யெரூஷலேமிலே எபூசியருடன் சமாதானப் பட்டிருந்தார்கள். (நியாயாதி. க. உக.

கஉகூ. யோசேப்பின் வமிசத்தார் பெத்தேலை ப் பிடிக்கப் புறப்பட்டு அதை உளவுபார்க்க ஆ ட்களை அனுப்பி நகரவாசலை அறிந்து அதற்கு ட்பட்டுச்சருவசங்காரஞ்செய்து பிடித்துக்கொ ண்டார்கள். மனாஷேயின் பாதிக் கோத்திரத்தா ர் பேத்ஷியானையும், தானாகையும், தோரையும், இப்லியமையும், மெகிதோவையும் வசப்படுத்தி த் திறைவாங்கி வந்ததே ஒழிய அவர்களைத் துரத் திவிடவில்லை. எப்பிராயீமரும் கானானியரைத் துரத்திவிடவில்லை. செபுலோனியருங் கித்ரோ ன் குடிகளையும் நகலோலின் குடிகளையும்துரத் திவிடவில்லை. ஆஷேரியரும், அக்கோ, சீதோ ன், அக்லாப், அக்சீப், எல்பா, அபீக், ரேகோ ப் என்பவைகளின் குடிகளைத் துரத்திவிடவில் லை. நப்தாலியரும் அப்படியே விட்டார்கள். (நியா. க. ருகூ.

கரூ0. அப்பொழுது யெகோவாவின் தூதன் அவர்களைச் சந்தித்து நீங்கள் எனது கட்டளையை மறுத்து அந்நியரோடே சமாதானமாயிருக்கிறபடியால் அவர்கள் உங்கள் விரோதிகளாவார்கள். அவர்கள் தேவர்கள் உங்களுக்குக் கண்ணிகளாவார்கள் என்றார். அதைக் கேட்ட இஸ்ரவேலர் புலம்பினார்கள். அந்தத் தலைமுறையார் மரித்தபின் எழும்பின தலைமுறையார் யெகோவாவை விட்டு அந்நிய தேவர்களையும் பாகாலையும் அஷ்தாரோத்தையும் சேவித்தபடியால் யெகோவா அவர்களைக் கைவிட, அவர்கள் தங்கள் சத்துருக்களுக்கு எதிர்நிற்கமாட்டாமல் கிலேசப்பட்டபொழுது யெகோவா அவர்களுக்கு நியாயாதிபதியை நியமித்தார். அப்படி நியமித்தும் அவர்கள் சொல்லையுங் கேளாமல் அந்நிய தேவாராதனைக்காரராகித் தங்கள் துன்மார்க்கங்களை விடாமல் நின்றபடியால், யெகோவா அவர்களை அந்நியர் கைக்குள் விட்டு அவர்களைப் பரீட்சித்தார்.

(நியா. உ.

கரூக. இஸ்ரவேலர், கானானியர், எத்தியர், பெரிசியர், அம்மோனியர், ஈவியர், எபூசியர், என்னும் சனங்கள் மத்தியில் வாசம்பண்ணி அவர்களுக்குள்ளே பெண்கொண்டும் பெண்கொடுத்தும், அவர்கள் தேவர்களைப் பூசித்தும் வந்ததினால் யெகோவா அவர்களை மெசொப்பொத்தாமியா தேசத்தின் இராசாவின் கையில் அகப்பட்டு, அ. வருஷம் ஊழியஞ் செய்யவிட்டார். (நியா. ரூ. எ.

| | நியாயாதிபதிகள். | ஆண்டு. | காலம். |
|---|---|---|---|
| க | ஒத்னியேல் | கசOO | சO |
| உ | ஏகூத் | கஙஙகூ | அO |
| ங | ஷம்கார் | கஙககூ | |
| ச | தெபோராள் | கஉகூகூ | சO |
| ரு | பாராக் | | |
| கூ | கிதீயோன் | கஉசகூ | சO |
| எ | அபிமேலேக் | கஉOகூ | ங |
| அ | தோலாக் | கஉOகூ | உங |
| கூ | யாயீர் | ககஅங | உஉ |
| கO | யெப்தா | கககூக | கூ |
| கக | இப்த்சான் | சகஙஎ | எ |
| கஉ | ஏலோன் | ககஙO | கO |
| கங | அப்தோன் | ககஉO | அ |
| கச | ஷிம்ஷோன் | ககஉO | உO |
| கரு | ஏலி | கககூ | சO |
| ககூ | சாமுவேல் | கOஅஎ | கஉ |

(க.) அதன்பின் யெகோவா அவர்கள்மேல் இரங்கி ஒத்னியேலைத் தலைவனாக நியமித்தார். அவன் போய்ச் சத்துரு செயங்கொண்டு, சO. வருஷம் இஸ்ரவேலரைச் சமாதானமாக நடத்தி மரித்தான். (நியாயாதி. ங. கக.—கசOரு.

(உ.) பின்பு இஸ்ரவேலர் யெகோவாவை மறந்து தீங்குசெய்தமையால் இவர்கள் பதினெட்டுவருஷம் மோவாபின் இராசனாகிய எக்லோனுக்கு அடிமைகளாக விட்டார்.

(நியாயா. ங. கஉ—கச.

கஙஉ. அதின்மேல் யெகோவாவின் கிருபையினால் ஏகூத் என்பவன் எழும்பி ஒரு குற்றுவாளைத் தன் இடையிலே கட்டிக்கொண்டு எக்

லொனுக்கு வெகுமதி கொண்டுபோகிறவனைப் போலப் போய் அந்தரங்கமான இடத்தில் எக்லோனைக் குற்றிக் கொன்றுபோட்டு இஸ்ரவேலரை அழைத்துக்கொண்டுபோய் மோவாபியரிற் பதினாயிரவரைச் சங்கரித்து எண்பது வருஷம் இஸ்ரவேலரைச் சமாதானமாக நடத்தி மரித்தான். (நியாயா. ௩. ௧௫—௩௦:

௧௯௩. (௩.) இதன் பின்பு ஷம்கார் என்பவன் தோன்றி ஒரு தாற்றுக்கோலினால் அறுநூறு பெலிஸ்தியரைச் சங்கரித்தான்.

(௪.௫.) இன்னும் இஸ்ரவேலர் யெகோவாவுக்கு விரோதமாகநடந்து, ஆத்சோரின் ராசனாகிய யாபீன் கையிலகப்பட யெகோவா இரங்கி லப்பீதோத்தின் மனைவியும் தீர்க்கதரிசியுமாயிருந்த தெபோராளைக்கொண்டு பாராக்கை அழைப்பித்து யெகோவா யாபீனுடைய சேனாபதியாகிய சிசெராவையும், அவனுடைய தளங்களையும் கீஷோன் பள்ளத்தில் உன் கையில் அகப்படுத்துவார். நீ நப்தாலியரிலும், செபுலோனியரிலும் பதினாயிரவரைச் சேர்த்துக்கொண்டு போவென்று சொல்லுவித்தார். அவன் தெபோராளுடனே நீ என்னோடே வராவிட்டால் நான் போகேன் என்று மறுத்தபடியால், அவளும் கூடிப்போய்ச் சாகானிம் என்னும் சமபூமியிலே கூடாரமிட்டிருக்கப் பாராக் தாபோர்மலையில் ஏறினான். சிசெரா தொளாயிரம் இருப்பு இரதவீரர்களையும் கொண்டுவந்து எதிர்க்கச் சிசெராவோடேவந்த சருவத்தையும் பாரக்கண்டதுண்டப்படுத்தினான். சிசெராவோ தப்பி

யோடி யாகேலின் கூடாரத்திலே புக, அவள் அவனை ஒரு சமுக்காளத்தால் மூடி ஒரு முளை ஆணியை எடுத்து அவனுடைய சன்னச் சுழியை உருவிப்போக அறைந்துகொன்றாள். அப்பொழுது தேபோராளும் பாரக்கும் யெகோவா நீதியைச் சரிக்கட்டினதின் நிமித்தம் ஆனந்த கீதம்பாடினார்கள்.*        (நியா. ச. ரு. அதி.

கரூச. (கூ.) மேலும் இஸ்ரவேலர் யெகோவாவுக்கு விரோதமாய்நடந்ததினால் மீதியானியர் இவர்களுக்கு விரோதமாக வந்து இவர்களைச் சூழப் பாளயமிட்டு, இவர்கள் விளைவையும் ஆடுமாடுகளையுங் கெடுத்தார்கள். இவர்களோ அவர்களுக்கஞ்சி மலைக்குகைகளிலும், கெபிகளிலும் ஒளித்திருந்து யெகோவாவை நோக்கி ஓலமிட, யெகோவா இரங்கித் தம்முடைய தூதனை அனுப்பினார். அவர் கிதீயோனுக்குத் தரிசனையாகி பராக்கிரமவீரனே, யெகோவா உன்னோடே இருக்கிறார் என்றார்.

(நியாயா. கூ. கஉ.

கரூரு. அதற்குக் கிதீயோன் ஐயோ! ஆண்டவரே, யெகோவா எங்களோடு இருந்தால் இவைகளெல்லாம் நேரிடுமா? அவருடைய அற்புத கிருத்தியங்களெல்லாம் எங்கே என்றான்? அதற்கு அவர் நான் உன் பட்சத்திலிருப்பேன். நீ மீதியானியரைச் சங்காரஞ்செய்வாயென்றார். அவன் நான் என்பலியைக்கொண்டுவந்து, உமக்கு முன் வைக்குமளவும் நீர் இவ்விடம்விட்டுப்போகாதிருக்கில் யெகோவா என்னோடேயே

* எபிரேயா. கக. கூஉ.

சிறுரென்று நான் அறிவேனென்ருன். அவரும் அப்படியே செய்யென்ருர். (நியா. சூ. கஅ.

கருசூ. உடனே கிதீயோன் இறைச்சியையும் அப்பத்தையும் கொண்டுவந்து யெகோவாவின் தூதனுடைய கட்டளைப்படி ஒரு கல்லின்மேல் வைத்தான். அதை அவர்தன் கைத்தண்டினுலே தொட, உடனே அக்கினி எழும்பி அவைகளை ப் பட்சித்தது. தூதனே மறைந்து விட்டான். உடனே கிதியோன் அவர் யெகோவாவி ன் தூதனென்று அறிந்து பயப்பட்டு, அதி லே ஒரு வேதிகையை உண்டாக்கி, அதற்கு யெகோவாவின் சமாதானமென்று பேரிட்டா ன். அன்றிரவு யெகோவா அவனுக்குத் தரிச னையாகி, நீ, உன் பிதாச் செய்துவைத்த பாகா லின் வேதிகையைத் தகர்த்து, அஷேரா மரங்க ளை வெட்டிஎறிந்து, இந்தக் கன்மலை உச்சியில் நமக்கு ஒரு வேதிகையை உண்டாக்கி அதிலே உன் பிதாவின் எருதுகளுக்குள் ஏழுவயதுள்ள ஓர் காளையைக் கொண்டுவந்து அந்தக் காளை யைத் தகனபலியாய் இடுஎன்ருர்.

(நியா. சூ. உசூ.

கருஎ. அதைக்கேட்டு கிதீயோன் இரவிலேபுற ப்பட்டு தேவன் சொன்னபடி எல்லாஞ் செய்தா ன். மறுநாட் காலையில் அவ்வூரார் அவைகளைக்க ண்டு, கிதீயோன் அதைச்செய்தான்என்று அறிந் து அவனுடைய பிதாவாகியயோவாஷூடனே உ ன்மகன் இப்படிச் செய்தபடியால் அவன் கொ லையுண்ணப் பாத்திரன். அவனை வெளியே கொ ண்டுவா என்க, யோவாஷ் நீங்கள் பாகாலுக்கா

க வழக்காடுவதென்ன? பாகால் தேவனானல் அவன்தானே தனக்காக வழக்காடட்டும் என்றான். இப்படியிருக்க, மீதியானியரும், அம்லேக்கியரும், கேதேமியருங்கூடி இஸ்ரவேலருக்கு விரோதமாய் யெஸ்ரியேல் பள்ளத்திலே பாளயமிறங்கியிருக்கக், கிதியோன் அபீயெஸ்ரியரையும், மனாஷேயரையும், ஆஷேர், செபுலோன், நப்தாலி என்னும் கோத்திரத்தாரையும் அழைத்துக்கொண்டு முப்பத்தீராயிரவருடனே அரோத்தென்னும் நீரூற்றினிடத்திற் தங்கினான். (நியா. கூம். எம். க.

கஅ அப்பொழுது யெகோவா கிதீயோனுக்குத் தரிசனையாகி உனது சேனைகள் மிகுத்திருக்கிறது. ஆகையால் யுத்தத்துக்கு அஞ்சுகிறயாவருந் தங்கள் வீடுகளுக்கு ஓடும்படி கற்பி என்றார். அந்தச் சொற்படி அச்சமுள்ளவர்களாயிருந்த இருபத்தீராயிரஞ் சனமுந் தங்கள்வீடுகளுக்குத் திரும்பினார்கள். மறுபடியும் யெகோவா கிதீயோனுடனே இன்னும் உன் சனம் மிகுதி. ஆகையால் இந்த ஆற்றிலே முழந்தாளூன்றிச் சலபானம்பண்ணுகிறவர்களை அவர்கள் வீட்டுக்கு அனுப்பி விடு என்றார். அந்தச் சோதனையில் கழிக்கப்பட்டசனம்போக மீந்த சனம் முன்னூறாயிருந்தது. அப்பொழுது யெகோவா கிதீயோனுடனே நீயும் பூறாவுங் கூடி மீதியானியருடைய சேனாசமுகத்துக்குப் போய் அவர்கள் பேசுவது யாதென்றறிந்து அச்சந் தெளிந்து யுத்தத்துக்குப் போவென்று கற்பித்தார். அவனும் பூறாவுங்கூடி மீதியானியருடைய பா

ளயத்துக்குப் போக, அங்கே ஒருவன் எழுந்து ஒரு வாற்கோதுமை அப்பம் மீதியானியருடைய கூடாரத்தில் உருண்டுவந்து அதை மேல்கீழாகக் கவிழ்த்துவிடச், சொப்பனங் கண்டேன் என்றான். அதைக்கேட்டவனே தேவன் மீதியானியருடைய சேனையைக் கிதீயோன் கையில் ஒப்பித்தார்என்றான். (நியா. எ. கச.

கஙக. அதைக் கிதீயோனும்; பூராவும் கேள்விப்பட்டுச் சந்தோஷமடைந்து யெகோவாவை நமஸ்கரித்துக்கொண்டு தன் கூடாரத்துக்குத் திரும்பித் தன் சேனைகளை மூன்றாகப் பிரித்து ஒவ்வொருவர் கையிலும் ஒவ்வொரு எக்காளங்களையும் ஒவ்வொரு பானைகளையும் அந்தப் பானைகளுக்குள்ளே தீப் பந்தங்களையுங் கொடுத்து மீதியானியருடைய பாளயத்திலே மூன்றுபுறமுஞ் சூழ்வித்துச் சடுதியாய் யாவரும் ஒரே க்ஷணத்திற் பானைகளை உடைத்துப் பந்த விளக்கை வெளியாக்கி யெகோவாவுடையதும் கிதீயோனுடையதுமான கட்கம் என்று ஒரே தொனியாய்த் தொனிக்கக் கற்பித்தான். அப்படியே சனங்கள் செய்ததை மீதியானியர் கண்டுங் கேட்டும் திடுக்கிட்டு எழுந்து ஓடத் தொடங்கினார்கள். அப்பொழுது அந்தப் பாளயத்தில் இருந்த சனங்கள்தானே ஒருவர் கட்கத்தை மற்றொருவருக்கு விரோதமாய் வீசித் தங்களைத் தாங்களே சங்காரம்பண்ணினார்கள். இஸ்ரவேலரோ ஒருங்குகூடி அவர்களைப் பின்தொடர; எப்ராயீமர் பேத்பாரா முதல் யோர்தான்மட்டும் வசப்படுத்திக்கொண்டு மீதியானியருடைய

இராசாக்களாகிய ஒரேப்பையும் சேப்பையும் பிடித்துத் தலையறுத்துக் கிதியோனண்டைக்குக் கொண்டுவந்தார்கள். (நியா. எ. ௨௫.

௧௪0. இப்படிச் செய்த எப்ராயீமியர் கிதியோனுடனே நீர் எங்களை யுத்தத்துக்கு அழையாமல் விட்டதென்னவென்று கோபித்தார்கள். அவன் அவர்களைச் சமாதானப்படுத்திக்கொண்டு தன்னோடே வந்த முன்னூறுபேருடனே மீதியானியருடைய இராசாக்களாகிய சேபாவையும், சல்மூனாவையுந் தொடர்ந்துபோகையில் சுக்கோத்தூராருடனே நாங்கள் பசியினால் வாடுகிறோம். எங்களுக்குப் போசனங் கொடுங்களென்று கேட்க, அதன் பிரபுக்கள் அந்த இராசாவை அகப்படுத்திக்கொண்டாயோவென்று பரிகாசம்பண்ணினார்கள். அதற்கு கிதியோன் யெகோவா அவர்களை என் கைக்கு ஒப்புக்கொடுத்தபின் நான் உங்கள் மாமிசத்தை முள்ளுக்களாலும் நெரிஞ்சில்களாலும் வேதனைப்படுத்துவேனென்று சொல்லி, பெனுவேலுக்குப்போய் அவ்வூராரும் இவர்களுக்குச் சகாயஞ்செய்யாததினிமித்தம், அவர்களுடைய கோபுரத்தையுமிடிப்பேனென்றுசபதமிட்டுக்கொண்டு கூடாரவாசிகளுடைய உதவி பெற்று நோபாக்குக்கும், யோக்பிகாவுக்கும் கிழக்கே போய் அதின் சேனைகளில் இலட்சத்திருபதினாயிரம் பேரைச் சங்கரித்தான். அப்பொழுது அதிலிருந்து தப்பியோடிக் கர்கோரிலே, பதினையாயிரங் கட்கதாரிகள் உடனேயிருந்த சேபாவையுஞ் சல்மூனா

வையும் பிடித்துக்கொண்டு சுக்கோத்துக்கு வந்தான். (நியா. அ. ஶஉ.

கசக. அப்பொழுது அவன் சுக்கோத் ஊராரில் எழுபத்தேழு பிரபுக்களையும் பிடிப்பித்து அவர்களுக்குச் சேபாவையும், சல்மூனாவையும் காட்டி அந்தப் பிரபுக்கள் எழுபத்தேழு பேரை முட்களால் வாதித்து பெனுவேலின் கோபுரத்தையும் இடிப்பித்து அவ்வூராரையுங் கொன்றான்: பின்பு அவன் சேபாவையுஞ், சல்மூனாவையும்நோக்கி நீங்கள் என் சகோதரரைக்கொல்லாதிருந்தால் நீங்களுங் கொலையுண்ணமாட்டீர்களென்று சொல்லி அவர்களைச் சிரச்சேதம் பண்ணினான். அப்பொழுது இஸ்ரவேலர் நீர் எங்களை மீதியானியருடைய கைக்கு விலக்கிக் காத்தபடியால் நீரும் உமது புத்திர பௌத்திரரும் எங்களை ஆளக்கடவீர்களென்றார்கள். அதற்கு அவன் நானும் என் புத்திரபௌத்திரருமல்ல, யெகோவா உங்களை ஆளக்கடவர். ஆயினும் நீங்கள் கொள்ளையிட்ட பணிகளை என் கைக்குக் கொடுங்களென்று வாங்கி ஒரு எபோத்து வஸ்திரத்தைச் செய்துவைத்தான். அதை இஸ்ரவேலர் யாவரும் பூசித்தார்கள். அது கிதீயோனுக்கும் அவன் குடும்பத்தாருக்குங் கண்ணியாயிற்று. (நியா. அ. உஎ.

கசஉ. இந்தக் கிதீயோனுக்குப் பல மனைவிகளும் வைப்பாட்டிகளுமிருந்தார்கள். மனைவிகளிடத்திலே எழுபது புத்திரர்கள்பிறந்தார்கள். வைப்பாட்டியிடத்தில் அபிமேலெக் என்னும் ஒரு புத்திரன் பிறந்தான். கிதீயோன் நாற்பது

வருஷம் இஸ்ரவெலருக்குச் சமாதானஞ்செய்து வயோவிருத்தனாய் மரித்தான். இஸ்ரவேலரேர் பாகால் பீரித்தைத் தங்களுக்குத் தேவனாக்கிக்கொண்டு யெகோவாவை நினையாதவர்களுங் கிதியோனுடைய குடும்பத்துக்குத் தயைசெய்யாதவர்களுமாய் இருந்தார்கள்.(நியா. அ. ரூ௫.

கசரூ. பின்பு கிதியோனுடைய வைப்பாட்டிபுத்திரனான அபிமேலேக்(எ)ஆளுகைக்காரனாகித் தனக்குச்சேவகர்ாக நீசரான சிலரைத்தெரிந்துகொண்டு தன்சகோதரரைக் கொல்லுவித்தான். கிதியோனுடைய இளையமகனாகிய யோர்த்தாம்மாத்திரம் ஒழித்துத் தப்பியிருந்தான். அவன் ஒருநாள் கிரிசீம் மலையில் ஏறிநின்றுஷிகேமின் மனுஷரே, கேளுங்கள். விருட்சங்கள் தங்களுக்கொரு இராசாவை நியமிக்கக்கூடிவந்து, சீதவிருட்சத்தை நோக்கி, நீ எங்களை அரசாளவேண்டுமென்றன. அதற்கது அவைகளை நோக்கி நான்தேவனுடைய மேன்மைக்கும்மனிதருடைய மேன்மைக்குமேதுவாயுள்ள என்சாரத்தைவிட்டு மரங்களை அரசாளப்போவேனோவென்று சொல்லிற்று. அப்பொழுது மரங்கள் அத்திமரத்தைநோக்கி நீவந்து எங்களை அரசாளவேண்டுமென்றுகேட்க, அத்திமரம் நான் என்னுடைய மதுரத்தையும் என்னுடைய நற்கனிகளையும் விட்டு மரங்களை அரசாளப் போவேனோ என்று சொல்லிற்று. பின்பு மரங்கள் திராட்சக் கொடியுடனே, நீ எங்களை அரசாளவேண்டுமென்றுசொல்ல, திராட்சக்கொடி தேவனையும் மனிதரையும் களிக்கப்பண்ணுகிற என் இரசத்தை வி

ட்டு மரங்களை அரசாளப்போவேனோ என்று சொல்லிற்று. பின்பு மரங்களெல்லாம் முட்செடியைநோக்கி நீ வந்து எங்களை அரசாளவேண்டுமென்று சொல்ல, முட்செடி மரங்களை நோக்கி நீங்கள் மெய்யாய் என்னை உங்களுக்கு இராசாவாக அபிஷேகம்பண்ணினால் என் நிழலிலே வந்தடையுங்கள். இல்லாவிட்டால் முட்செடியிலிருந்து அக்கினிபுறப்பட்டு லிபானோனின் எரஸ் மரங்களைப் பட்சிக்கக் கடவதென்று சொல்லிற்று. (நியா. கூ. கரு.

கசஎச. அதுபோல நீங்கள் உங்களை மீதியானியர்கைக்கு நீங்கலாக்கிவிட்ட என் பிதாவின் குடும்பத்துக்கு விரோதமாய் அபிமேலேக்கை ஆளுகைக்காரனாக்கினீர்கள். அவன் கிதியோனுடைய புத்திரரை ஏகமாய்ச் சங்கரித்தான். நீங்கள்செய்தது நன்மையாகில் சந்தோஷப்படுங்கள்; இல்லாவிட்டால் அவனுடைய அக்கினி உங்களைப்பட்சிக்கட்டும். அல்லது உங்கள் அக்கினி அவனைப் பட்சிக்கட்டுமென்று சொல்லி ஒளித்து, பேருருக்குப் போயிருந்தான். அப்பொழுது தேவச்செயலாய் ஷிகேமியர் அபிமேலேக்கின்மேல் வெறுப்புக்கொண்டு அவனைக் கொல்லும்படி மலைகளிலே பதிவாட்களை வைத்தார்கள். அப்படியிருக்க, ஏபேத்தின் புத்திரனாகிய காகாலும் அவன் சகோதரரும் ஷிகேமிற் பிரவேசித்துத் திராட்சப்பழங்களை அறுத்து ஆலையாட்டி ஆனந்த கீதம்பாடித் தேவாலயத்திற் கூடிப் போசன பானம்பண்ணி அபிமேலேக்கை நிந்தித்தார்கள். அப்படியிருக்க, ஏபேத்தின்புத்

திரனுகிய காகால் நாம் அபிமேலேக்கைச் சேவிக்க வேண்டியதென்னவென்று சொல்லி, அபிமேலேக்கே, நீ உன் சனங்களுடனே திரண்டு யுத்தத்துக்கு வாவென்று சொல்லியனுப்பினுன். அதை நகராதிபனுகிய செபூல் அறிந்து கோபங்கொண்டு இந்தக்காரியத்தை அபிமேலேக்குக்கு அறிவித்தான். அவனுந் தளங்களை மூட்டி அணிவகுத்துப் பதிவிருக்க, காகால் புறப்பட்டு நகரவாசலிலே நின்முன். அபிமேலேக்கோ தன் தளங்களுடனே காகாலை எதிர்த்து யுத்தம்பண்ணக் காகால் தோற்ருேடினுன். மறுநாள் காகாலுடைய சனங்கள் வெளியேபுறப்பட, அபிமேலேக்கும் சனங்களும் வந்து நகரத்தைப்பிடித்தார்கள். (நியா. கூ. சகூ.

கசரு. பின்பு அபிமேலேக்கு தேபேத்சு நகரத்துக்கும் போகச் சனங்கள் பயந்து ஓர் துருக்கத்திலேறினுர்கள். அபிமேலேக் அந்தத் துருக்கத்தில் நெருப்பிட்டு நெருங்கிப் போகையில்ஒரு ஸ்திரி ஒரு கற்றுண்டை அவன்மேல் எறிந்தாள். அதினுல் அவன் தலையுடைந்து மரணஅவஸ்தையாய், ஒருஸ்திரி அபிமேலேக்கைக் கொன்று போட்டாள் என்க வருமென்று அஞ்சித் தன் ஆயுத தாரியைக்கொண்டு தன்னைக்குற்றுவித்து மரித்தான். அபிமேலேக்குக்குப்பின்பு, ஈஷகார் கோத்திரத்தானுகிய தோலாக் (அ.)இருபத்துமூன்றுவருஷம் இஸ்ரவேலரைநியாயம்விசாரித்தான். அவனுக்குப் பின்பு யாயீர்(கூ) நியாயாதிபதியாய் இஸ்ரவேலரை இருபத்திரண்டுவருஷம்

பரிபாலித்தான். இவனுக்கு முப்பது பிள்ளைக ளுண்டு. (நியா. க0. ௪.

கசசு. யாயீர் மரித்தபின்பு இஸ்ரவேலர் யெ கோவாவைவிட்டு அஷ்தாரோத்தையும் பாகா லையும்ஷூரியர், சீதோனியர், மோவாபியர், அம் மோனியர், பெலிஸ்தியர் என்பவர்கள் வணங்கி வந்த அன்னிய தேவர்களையும் வணங்கிவந்ததி னல்யெகோவாவுடையசகாயத்தையிழந்து பதி னெட்டு வருஷம் பெலிஸ்தர், அம்மோனியர் எ ன்பவர்கள் கையில் அகப்பட்டு வருந்திஞர்கள். அப்பொழுது இஸ்ரவேலர் யெகோவாவிடத்தி லே திரும்பி முறையிட, அவர் மனதுருகி யெப் தாவைக்கொண்டு அவர்களை இரட்சித்தார். (நியா. கக.

கசஎ. இந்தயெப்தா(க0)அம்மோனியருடனே யுத்தத்துக்குப் போகும்பொழுது நான்அம்மோ னியரைச்செயங்கொண்டுதிரும்பிவரும்பொழு து எனக்கு எதிர்வருவதை யெகோவாவுக்குத்த கனபலியாகச் செலுத்துவேனென்று சங்கற்ப ம் பண்ணிக்கொண்டுபோய்ச் செயங்கொண்டு வரும்பொழுது அவனுக்கு ஒரே புத்திரியாயிரு ந்தவள் மிருதங்கத்தையும் கொண்டு நடனஞ் செய்து வருவதைக் கண்டு மகா துக்கமடைந்து தன் சங்கற்பத்தை அவளுக்குச் சொல்ல, அவ ள் பிதாவே, நீர் செயங்கொண்டது மாத்திரம் போதும். உம்முடைய சங்கற்பத்தின்படி செ ய்யுமென்ருள். அந்தப்படியே யெப்தா தன்சங் கற்பத்தை முடித்தான். மறுபடியும் இவன் த ன்னுடனே வாதுபண்ணிவந்த எப்ராயீமருட

னே யுத்தஞ்செய்து அவர்களில் நாற்பத்திராயிர ம்பேரைச் சங்கரித்து இஸ்ரவேலரை ஆறுவரு ஷம் நியாயம்விசாரித்து மரித்தான்.

(நியாயா. க௨. எ.

கசஅ. (கக.) யெப்தாவுக்குப் பின்பு இப்சா ன் நியாயாதிபதியாகி ஏழுவருஷம் நியாயவிசா ரணைசெய்து மரித்தான். (க௨.) இப்சானுக்குப் பின்பு ஏலோன் நியாயாதிபதியாகிப் பத்துவரு ஷம்நியாயம்விசாரித்து மரித்தான்.(க௩.)ஏலொ னுக்குப்பின்பு அப்தோன் எட்டுவருஷம் நியா யம்விசாரித்து மரித்தான்.

(நியா. க௨. கச.

கசகூ. அப்தோனுக்குப் பின்பு இஸ்ரவே லர் யெகோவாவுக்கு விரோதமாய் நடந்ததினு ல் பெலிஸ்தியருடைய கையில் அகப்பட்டு வருந்தினுர்கள். அக்காலத்திலே தாண்கோ த்திரத்தில் மனோவா என்பவனுடையமனைவி க்கு யெகோவாவின் தூதன் தரிசனையாகி நீ இஸ்ரவேலரைப் பெலிஸ்தியருடைய கை க்கு நீக்கி இரட்சிக்கத்தக்க ஒரு புத்திரனை ப்பெறுவாய். ஆகையால் நீ திராட்ச இரசத்தை யும் மதுவையும் குடியாமலும், அசுத்தமானதை ப் புசியாமலும் இரு. அந்தப் பிள்ளையுஞ் செ ன்மநாள்முதல் தேவனுக்கு நசரீயனுயிருப்பதா ல் அவன் தலையிலே சவரகன்கத்தி படப்படா து என்ருர். (நியாயா. க௩. ௫.

க௫0. அதை அவள் கேட்டுத் தன் கணவனு க்கு அறிவிக்க, அவன் அப்படித் தரிசனை தன க்குங் கிடைக்கவேண்டுமென்று பிரார்த்திக்க,

யெகோவா அந்தப் பிரார்த்தனையைக் கேட்டு அவனுடைய சமுகத்துக்குந் தமது தூதனை அனுப்ப, அவன் அவரைத் தரிசித்து ஆண்டவரே; உமது நாமம் என்னவென்று வினவினான். அதற்கவர் நீ என் நாமத்தை வினவவேண்டாம். அது இரகசியமென்று சொன்னார். அப்பொழுது மனோவர் யெகோவாவுக்குத் தகன பலியைச் செலுத்த அதின் சுவாலை வானத்துக்கு நேரே எழும்பிற்று. யெகோவாவின் தூதனும் அந்தச் சுவாலையுடனே வானத்துக்கெழுந்தார். பின்பு அந்த ஸ்திரீ ஒரு புத்திரனைப்பெற்று அவனுக்கு ஷிம்ஷோன் என்று பேரிட்டாள். பிள்ளையுடனே தேவாவியுந் தங்கியிருந்தது.

(நியாயா. கங. உரு.

கருக. (கச.) ஷிம்ஷோன் வளர்ந்து வருங்காலத்தில் ஒரு பெலிஸ்தியப் பெண்ணைக்கண்டு இச்சித்துத் தன் பிதாமாதாவுடனே அந்தப் பெண்ணைத் தனக்கு மனைவியாகக்கொள்ளவேண்டும் என்று கேட்க; அவர்கள் நீ விருத்தசேதனமில்லாத பெலிஸ்தியப்பெண்ணை விவாகம்பண்ணவேண்டுவதென்ன? எங்கள் சனங்களுக்குள் உனக்கு இதமான பெண்ணில்லையாவென்று மறுக்க, அவன் கேளாமல் அவளை விவாகம்பண்ணவேண்டுமென்று சங்கற்பித்துக்கொண்டபடியால் அவர்களும் இணங்கித் திம்னாத்துக்குப் போனார்கள்.     (நியாயா. கச. ரு.

கருஉ. ஷிம்ஷோனும் அங்கே போகப்போகிறவழியிலே எதிர்ப்பட்ட ஒரு இளஞ் சிங்கத்தைக் கண்டு கிழித்தெறிந்துபோய் அந்தப் பெ

ண்ணுடனே மணம்பேசிச் சிலநாள் தங்கித் தி
ரும்பி வருகையில் அந்தச் சிங்கத்தின் உடலிலே
தேன் வைத்திருந்ததைக் கண்டு எடுத்துத் தானு
ம் புசித்துத் தன் பிதாமாதாவுக்குங் கொடுத்தா
ன். இவைகளை அவன் ஒருவருக்கும் அறிவிக்
கவில்லை. மறுபடி அவன் போய் விவாகவிருந்
து செய்கையில், அவர்களுடனே, பட்சிக்கிற
திலிருந்து பட்சணமும் பலத்திலிருந்து மதுர
மும் புறப்பட்டன. இந்த விடுகதையின்பொ
ருளை எங்கள் விருந்து நாள் ஏழுக்குள்ளே நீங்
கள் சொன்னால் உங்களுக்கு முப்பது மெல்லி
ய வஸ்திரங்களையும் முப்பது மாற்றுவஸ்திரங்க
ளையும், ஒட்டமாகக் கொடுப்பேன். நீங்கள் சொ
ல்லாதிருந்தால் அவ்வளவு எனக்குக் கொடுக்கவே
ண்டும் என்றான். அவர்கள் அந்த விடுகதைக்குப்
பொருள் சொல்லக்கூடாமல், அவன் மனைவியுட
னே நீ இந்த விடுகதையின் அர்த்தத்தை உன்க
ணவனிடத்தில் அறிந்து எங்களுக்கறிவி, இல்
லாதிருந்தால் நாங்கள் உன்னையும் உன்பிதாவி
ன் குடும்பத்தாரையும் சுட்டுப் போடுவோமெ
ன்று சொல்ல, அவள் பயந்து தன் கணவனிட
த்தில் வருந்திக்கேட்டு அதை அவர்களுக்கு அறி
வித்தாள். அவர்களோ அதை அவனுக்கு அறிவி
த்தார்கள். அதினால் அவன் கோபம்மூண்டு அ
ஷ்கிலோனுக்குப் போய் அங்குள்ள முப்பது
பேரைக் கொன்று அவர்கள் வஸ்திரங்களைப் ப
றித்துக் கொண்டுவந்து தான் ஒட்டிய ஒட்டத்
தைக் கொடுத்து அவளையும் விட்டுத் தன் ஊரு
க்குப் போனான். (நியா. கச. கக.

கருரு. அந்தப் பெண்ணின் பிதா அதை அறிந்து அவளை இவனுடைய தோழரில் ஒருவனுக்குக் கொடுத்தான். இவனே திரும்பி வந்து அவளைத் தன் வசப்படுத்தக் கேட்டும் அவளுடைய பிதா சம்மதியாததினால் ஷிம்ஷோன் முந்நூறு நரிகளைப் பிடித்து அவைகளின் வால்களிலே தீப்பந்தங்களைக் கட்டிப் பெலிஸ்தருடைய விளைந்த பயிர்களுக்குள் ஓட விட்டான். அதினாலே அவர்களுடைய விளைவுகள்திராட்சச் செடிகள் சீதவிருட்சத் தோப்புகள்யாவும் எரிந்துபோயின. (நியா. கரு. ரு.

கருச. அதினாலே பெலிஸ்தியர் அவளையும் பிதாவையுஞ் சுட்டுப்போட்டார்கள். அவனே அவர்களைச் சருவசங்காரம்பண்ணி ஈத்தாமின் மலையுச்சியிலே போயிருந்தான். அப்பொழுது பெலிஸ்தியர் திரண்டுபோய் யூதாவிலே பாளயமிறங்கியிருக்க யூதகோத்திரத்தில் மூவாயிரம்பேர் திரண்டுபோய் அவனைப் பிடித்துக் கட்டிப் பெலிஸ்தியர்கையில் ஒப்புவித்துத் தங்கள் ஊருக்குத் திரும்ப, பெலிஸ்தியர் அவனையுங்கொண்டு இலேகிமட்டும் போனார்கள். அவனே அந்தக் கட்டுகளை அறுத்து ஓர்கழுதையின் தாடைஎலும்பைஎடுத்து, அவர்களில் ஆயிரம்பேரைச் சங்கரித்து நிற்கையில் அதிதாகமுள்ளவனாகித் தேவனைநோக்கிப் பிரார்த்திக்க, நிலம்பிளந்து நீர்ஊறிவந்தது. அவனே சலபானம்பண்ணி காசாவுக்குப் போனான்.

(நியா. கசு. க.

கருரு. அவன் அங்கேபோய் ஒரு வேசிவீட்

டிலிருக்கிறதை அவ்வூரார் அறிந்து அவனைப் பிடித்துக் கொல்லஎண்ணி நகரவாசலிற் பதிவிருக்க, அவன் நகரவாசலின் கதவுகளையும் நிலங்களையும் பேர்த்தெடுத்து எப்ரோனுக்கெதிர்ப்பக்கத்திலுள்ள மலைக்குப்போய்த் தங்கினான். அவன் அங்கிருக்கையில் திலீலாள் என்னும் ஒரு ஸ்திரியோடே அன்புவைத்திருக்கிறதைப் பெலிஸ்தியர் அறிந்து, அவளிடத்திற் போய், நீ அவனை வசப்படுத்தி அவனுக்கு இவ்வளவுபெலம் எப்படி வருகிறதென்றும் எப்படி அவனைச் செயிக்கலாமென்றும் அறிந்து எங்களுக்குச் சொல்லுவாயாகில் உனக்கு நாங்கள் ஒவ்வொருவரும் ஆயிரத்தொருநூறு வெள்ளிக்காசைத் தருவோமென்று வாக்குப்பண்ணினார்கள். (நியா. கசு. ரு.

கருகூ. அவளும் அதற்குடன்பட்டு ஷிம்ஷோனுடனே நீர் என்னை நேசிக்கிறது மெய்யேயானால் உமதுபெலம் என்னத்தினால் வருகிறதென்றும், என்னத்தினால் உண்டாகிறதென்றும் நீர் எதினால் அபசயப்படுவீரென்றும் எனக்குச் சொல்லவேண்டுமென்று வருந்திக்கேட்டாள். அதற்கு அவன் பச்சைநாரால் உண்டாகிய ஏழுகயிறுகளால் என்னை கட்டினால் நான் பெலவீனனாவேன் என்றான். அவள் அதைப் பெலிஸ்தியருக்குச் சொல்ல, அவர்கள் அவ்வித கயிறுகளை அவளுக்குக்கொடுத்து அவனைக் கட்டுவித்து அவனைப் பிடிக்கும்படி அவளுடைய வீட்டின் ஓர்அறையிற் போய்ப் பதிவிருந்தார்கள். அவளோ அவனைப் பச்சை நார்க்கயிறுக

ளாற் கட்டி ஷிம்ஷோனே, பெலிஸ்தியர் வரு கிறார்கள்; எழுந்திருவென்று சொல்ல, அவன் எழுந்தமாத்திரத்தில் அவனைக்கட்டின கயிறுகள் நெருப்புப்பட்ட வைக்கோற் புரி போலத் துகள்பட்டுப்போயிற்று. அதைக் கண்ட அவள் அவனுடனே நீர் என்னை வஞ்சித்தீரென்றாள். அதற்கு அவன் இப்படியல்ல, புதுக்கயிறுகளினாற் கட்டவேண்டுமென்றான். அப்படியும் அவள் செய்தாள். ஆனாலும் அவ்ன் அகப்படவில்லை. மூன்றும் முறையும் அவள் வருந்திக் கேட்க அவன் தன்தலையின் எழுசடைகளைத் தறிமரத்தில் நூற்பாவுடனே சேர்த்துப் பின்னி வைத்தால் அபசயப்படுவேனென்றான். அவளும் அப்படியே செய்தாள். அவனோ தறிமரத்தையும் மூளையையுங் கூடப்பிடுங்கிக்கொண்டு புறப்பட்டுப்போனான். மறுபடியும் அவள் அவனை நாளுக்குநாள் வருந்தி வருந்திக் கேட்டதினால் என் தலை சிரைக்கப்பட்டால் என் பெலன் குறைந்துபோமென்றான். அதைக் கேட்டு அவள் பெலிஸ்தியரை அழைத்து மறைவிலே வைத்துக்கொண்டு ஷிம்ஷோனைத் தன் மடியில் நித்திரையாக்கியபின் ஒருவனைக் கொண்டு அவனுடைய எழு சடைகளையும் வெட்டுவித்து, ஷிம்ஷோனே, பெலிஸ்தியர் வருகிறார்கள், எழுந்திருவென்று சொல்ல, உடனே பெலிஸ்தியர் வந்து அவனைப் பிடித்து, இரண்டு கண்களையுந் தோண்டி விலங்கிட்டுச் சிறைச்சாலையில் வைத்து மா அரைப்பித்தார்கள்.

(நியா. ௧௬. ௨௧.

௧௫௭. இப்படியிருக்க இவன் சிறைச்சாலையில் அகப்பட்டதின் நிமித்தம் பெலிஸ்தியர் தாகோனுக்கு விழாக் கொண்டாடுகிற தினத்தில், ஷிம்ஷோனைச் சிறைச்சாலையிலிருந்து அழைப்பித்துக் கூத்தாடப்பண்ணினார்கள். அப்பொழுது ஷிம்ஷோன் யெகோவாவே, நான் எனது கண்களுக்காகப் பழிவாங்குவதற்கு எனக்குப் பெலன் தந்தருளுமென்று வேண்டிக்கொண்டு அந்த ஆலயத்தின் தூண்களைப் பிடுங்கி அதிலிருந்த மூவாயிரஞ் சனங்களையும் வீட்டையும் ஏகநாசமாக்கித் தானும் மரித்தான். இந்த ஷிம்ஷோன் இஸ்ரவேலரை இருபது வருஷம் பரிபாலித்தான். (நியா. ௧௬. ௩௧.

௧௫௮. தாண் கோத்திரத்தார் தங்கள் சுதந்தர பூமி இன்னுந் தங்களுக்குக் கைவசப்படாமையால் தேசத்தை உளவுபார்க்கும்படி ஐந்துபேரைத் தெரிந்து லாயீஷுக்கு அனுப்பினார்கள். அவர்கள் புறப்பட்டு எப்ராயீமிலுள்ள மீகாவின்வீட்டில் இராத்தங்கி, திரும்ப லாயீஷுக்குப்போய் அத்தேசத்துக்கு அதிகாரிகளில்லாமற் சமாதானமாயிருக்கிறதைக் கண்டு திரும்பிவந்து அத்தேசத்தின் வளங்களைச்சொல்ல, இவர்களில் அறுநூறு பேர் புறப்பட்டு மீகாவின் வீட்டுக்குப்போய் அவன் செய்வித்துவைத்த விக்கிரகங்களையும் ஆசாரிய வஸ்திரங்களையும் எடுத்துக்கொண்டு அவன் நியமித்த ஆசாரியனையும் அழைத்துக்கொண்டு லாயீஷுக்குப்போய் அவர்களையுஞ் செயங்கொண்டு அதின் நகரத்தையுஞ் சுட்டு புதிதாக ஒரு நகரத்தையுமுண்டாக்கி அ

தற்குத்தாண்என்றுபேரிட்டார்கள். (நி.கஅ.உகூ.

கருகூ. அக்காலத்தில் எப்ராயீமின் மலைச்சாரலில் இருந்த ஒரு லேவியன் யூதாதேசத்தின் பேத்லகேம் ஊராளாகிய ஒரு ஸ்திரியை வைப்பாட்டியாக வைத்திருந்தான். அவன் இவளை விட்டுத் தன் பிதாவின் வீட்டிற்குப் போயிருந்தபொழுது, இந்த லேவியன் அங்கே போய் அவளையும் அழைத்துக்கொண்டு பேன்யாமீன்நாட்டைச் சேர்ந்த கிபியாவில் வந்து எப்ராயீம் மலைத் தேசத்தானுகிய ஓர் கிழவன் வீட்டிலே தங்கி இருந்தான். அப்பொழுது அந்த ஊர் மனிதர் வந்து அந்தவீட்டை வளைந்துகொண்டு அவனை வெளியேவிடும்படி பலபந்தம் பண்ணிஞர்கள். அந்த லேவியனே பயந்து தன் வைப்பாட்டியை வெளியே கொண்டுவந்துவிட, அவர்கள் அவளை அவமானஞ்செய்தார்கள். அதிஞல் அவள் பிராணசேதமாகி விழுந்தாள். மறு நாட் காலமே அவன் எழுந்து அவளைத் தன் கழுதையிலேற்றித் தன் வீட்டுக்குக் கொண்டு போய் அவளைப் பன்னிரண்டு துண்டாக வெட்டி இஸ்ரவேலின் எல்லைகளெங்கும் அனுப்பிஞன். (நியா. ககூ. உகூ.

கசூ0. அப்பொழுது தாண் தொடங்கிப் பேர்ஷேபா மட்டும் உள்ள சமஸ்த சபையாரும், கிலியாத்தியரும், ஒன்ருகக்கூடி நாலு லட்சசனங்கள் யுத்தசன்னத்தராய் மிஸ்பேக்குவந்து நடந்த சங்கதியை விசாரித்து, பேன்யாமீன் கோத்திரத்தாருக்கு ஆளனுப்பிக் கிபியாவிலிருக்கிற பீலியாமின் மக்களை நாங்கள் கொலைசெய்ய

நீங்கள் இடங் கொடுக்கவேண்டுமென்றதற்கு பேன்யாமீனர் சம்மதியாமல் யுத்தத்துக்குப்புறப் பட்டு எழுநூறு கவண்காரருடனே வந்து எதிர்க்க இஸ்ரவேலரின் யூதகோத்திரத்தார் முதல் போகவேண்டுமென்று தேவஉத்தரவு உண்டாயிருந்தும் இஸ்ரவேலர் யாவரும் எழுந்து அணிவகுத்து நின்றதினுல் இவர்களில் இருபத்தீராயிரம்பேரைப் பேன்யாமீனர் சங்காரம்பண்ணினுர்கள். (நியா. ௨௦. ௨௧.

௧௬௧. இரண்டாம்நாளிலும் அப்படியேபோய் எதிர்க்க, இஸ்ரவேலரில் பதினெண்ணுயிரம் பேர் நாசமானுர்கள். மூன்ரும் நாளிலே இஸ்ரவேலர் யெகோவாவின் சந்நிதியைச் சேர்ந்து உபவாசித்துப் புலம்பி யெகோவாவுக்குத் தகனபலியையும் ஸ்தோத்திரப்பலியையுஞ் செலுத்தித் தேவ உத்தரவு பெற்றுக்கொண்டு போய் அணிவகுத்து நிற்க பேன்யாமீனரும் வந்து எதிர்த்தார்கள். அன்றையித்தினம் பேன்யாமீனரில் இருபத்தையாயிரத்தொருநூறு பேர் சங்கரிக்கப்பட்டார்கள். இஸ்ரவேலர் வைத்த பதிவிடைகாரர் எழுந்து நகரத்திலுட்புகுந்து அகப்பட்ட யாவரையுஞ் சங்காரஞ்செய்து நகரத்திலும் நெருப்புவைத்தார்கள். அதினுலே பேன்யாமீனியரில் பதினெண்ணுயிரம்பேர் மடிந்தார்கள். (நியா. ௨௦. ௪௪.

௧௬௨. மற்றவர்கள் பயந்து ரிம்மோன்மலைக்கு ஓட, வழியிலே ஐயாயிரம்பேர் அகப்பட்டு மடிந்தார்கள். மேலும் இவர்கள் தொடர்ந்து போய் இரண்டாயிரம்பேரைச் சங்கரித்தார்க

ள். மீதியானவர்கள் ரிம்மோன்மலையில் நாலு மாதம் ஒழித்திருந்தும் இஸ்ரவேலர் அவர்களில் அகப்பட்டவர்களையுஞ் சங்கரித்து மிச்சமானநகரங்களையுஞ்சுட்டு, இனிப்பேன்யாமீனியருக்குள் விவாகம் பண்ணுவதில்லையென்று சபதமிட்டுக் கொண்டார்கள். (நியா. உக. க.

கசுரு. இவைகளெல்லாம் நடந்தபின்பு இஸ்ரவேலர் யெகோவாவுக்குப் பலியிடும்நாளில் கிலியாத்திலுள்ள யாபேஷின் மனிதர் சபைக்கு வராமையால் அவர்களைச் சங்கரிக்கும்படி பன்னீராயிரம் யுத்தவீரரைத் தெரிந்தெடுத்து நீங்கள் யாபேஷுக்குப்போய் அங்குள்ள சமஸ்த புருஷரையும் அவர்கள் மனைவிகளையும் பிள்ளைகளையுஞ்சங்கரியுங்களென்று அனுப்பினார்கள். அவர்கள்போய் அப்படியே சங்கரித்து புருஷபரிசமில்லாத நானூறுகன்னிகளைப் பிடித்துக்கொண்டு ஷீலோவுக்கு வந்தார்கள். (நியா. உக. கஉ.

கசுசு. அப்பொழுது பேன்யாமீனியரில் ஒளித்துத் தப்பியிருந்த மனுஷருக்குச் சமாதானதூதரை அனுப்பி அழைப்பித்து யாபேஷிலிருந்து பிடிபட்டுவந்த கன்னியரை விவாகம்பண்ணிக்கொடுத்தார்கள். இப்படியே பேன்யாமீன் சந்ததியார் தங்கள் சுதந்தர பூமிக்குரித்துள்ளவர்களானார்கள். (நியா. உக. உரு.

கசுரு. பின்பு கிறிஸ்துவுக்குமுன் ஆயிரத்து முந்நூற்றுப் பன்னிரண்டு வருஷமளவில் யூதேயாவின் பேத்லகேமிலே பஞ்சமுண்டானதினால் அங்கே குடியிருந்த இலீமேலேக்கும் அவன் மனைவி நகோமியும் அவர்கள் புத்திரரா

இய மக்லோனுங், கிலியோனும், மோவாபு தே சத்திலே போயிருந்தார்கள். அங்கிருக்கையி ல் இலீமேலேக்கு மரித்துப்போக, நகோமி ம க்லோனுக்கு ரூத்தையும், கிலியோனுக்கு ஓர்ப் பாளையும் விவாகம்பண்ணிக் கொடுத்தாள். சி ல காலத்தின்பின் மக்லோனும் கிலியோனும் ம ரித்துப்போக அவள் பேத்லகேமுக்குப் போக ப் புறப்பட்டு ஓர்ப்பாளையும் ரூத்தையும் நோக் கி நீங்கள் கணவரில்லாமல் உங்களைப் பரிபா லிக்கமாட்டீர்கள். ஆகையால் நீங்கள் மோவா பின் உங்கள் மாதா வீட்டுக்குப் போங்கள். யெ கோவா உங்களுக்கு அருள்செய்யக்கடவரென் ருள். (ரூத். க. கூ.

கசுகூ. அதற்கவர்கள் அழுதுகொண்டு நாங் கள் உம்மோடே உமது சனங்களண்டை வரு கிரேமென்ருர்கள். நகோமி, என் மக்களே, யெகோவாவின் கரம் எனக்கு விரோதமாயிரு க்கிறது. நீங்கள் போய்விடுங்களென்று சொல் ல ஓர்ப்பாள் விடைபெற்றுப்போனுள். ரூத்தோ அவளைவிடாமல் நின்ருள். அப்பொழுது நகோ மி உன் ஓரகத்தி போனதுபோல நீயும்போவது நல்லதேயென்று சொல்ல, ரூத் என்மரணமேய ன்றி வேறேதாவது என்னையும் உம்மையும் பி ரிப்பதில்லையென்ருள். (ரூத் க. கஎ.

கசுஎ. இப்படிப் பேசிக்கொண்டு ரூத்தும் ந கோமியும் பேத்லகேமுக்குப் போய் வாசம்ப ண்ணுகையில் மக்லோனின் இரண்டாம் உரி மைக் காரனுகிய போவஸ் என்பவன் அத்தேச த்து மூப்பரோடும் பிரபுகளோடும் இவளுடை

ய மண முறையைக் கூறி அவளை விவாகம்பண்ணினான். (ரூத். ச. கஈ.

கசுஅ. இந்த ரூத்திடத்தில் ஓபெத்தென்கிற பிள்ளைபிறந்தான். அவனுக்கு ஈஷாய் பிறந்தான். ஈஷாய்க்குத் தாவீது பிறந்தான்.* ஈஷாய் என்னும் அடிமரத்தினின்று ஒருமுளைதோன்றும். அவன் வேரினின்று ஒரு கிளை எழும்பிச் செழிக்கும். ஞானத்தையும் புத்தியையும் தருகிறதும் ஆலோசனையையும் பராக்கிரமத்தையும் தருகிறதும், யெகோவாவைப் பற்றும் அறிவையும், பயத்தையும் தருகிறதுமாகிய யெகோவாவின் ஆவி அவர்மேலே தங்குமென்று, (எசா. கக. க. ஈ.) குறிக்கப்பட்டபடியே இந்த ஈஷாயின் வமிசத்திலே கிறிஸ்துநாதர் தோன்றினாரென்று மத்தேயு எழுதின சுவிசேஷம், க. அதிகாரத்திற் காணலாம். இந்தப் போவஸ் சல்மோனுக்கு மகன். சல்மோன் நாக்ஷோனுக்கு மகன். நாக்ஷோன் அம்மின்தாவுக்கு மகன். அம்மின்தாப் ராம் என்பவனுக்கு மகன். ராம் எத்சரோனுக்கு மகன். எத்சரோன் பேரேசுக்கு மகன். பேரேஸ் யூதாவுக்கு மகன். யூதா யாக்கோப்புக்கு லேயாள் இடத்திற்பிறந்த சம். மகன். ஷீலோ வருமளவும் செங்கோல் யூதாவை விட்டு நீங்குவதும் நியாயாதிபதி அவனுடைய பாதங்களை விட்டு ஒழிவதுமில்லை. சனங்கள் அவரிடத்திற் சேருவார்களென்று ஆதி. சகூ. அதிகாரத்திற் குறிக்கப்பட்ட படியே கிறிஸ்துநாதர் யூதா வமிசத்திலே பிறந்தார்.

---

* ஈ. ஈஉ.

௧௬௯. இக்காலத்திலே ஏலி என்பவன் ஆசாரியனும் நியாயாதிபதியுமாயிருந்தான். இவனுடைய புத்திரர் மகா நிஷ்டூரராயிருந்தார்கள். இப்படி இருக்கையில் எல்க்கானாவுடைய மனைவியாகிய அன்னாள் பிள்ளையில்லாத மலடியாயிருந்ததனால் விசனப்பட்டு மனோதுக்கங்கொண்டு யெகோவாவை நோக்கி. ஆண்டவரே, எனக்கொரு புத்திரனைக் கொடும். நான் அவனை நசரீயனாக உமக்கு ஒப்பிப்பேன் என்று பிரார்த்தித்து வீட்டுக்குப் போய்க் கருப்பவதியாகிப் பூரணகாலத்திலே சாமுவேலென்கிற புத்திரனைப் பெற்று அவன் முலைமறக்குமளவும் தன்னோடே வைத்திருந்து, முலைமறந்தபின்பு தேவாலயத்துக்குக் கொண்டுபோய்த் தேவனுக்குத் தாசனாக ஒப்பித்து ஸ்தோத்திரப் பாட்டுக்களையும் பாடித் தன்வீட்டுக்குப்போனாள். சாமுவேல் தேவனுக்குத் தொண்டுசெய்துகொண்டு ஏலியுடைய குடும்ப பாலனத்துக்குள்ளிருந்தான்.

(௧. சாமு. ௧. ௨. ௧௧.

௧௭௦. இப்படியிருக்க ஏலியுடைய புத்திரராகிய ஒப்னியும் பீனிகாசும் பீலியாளின் மக்களாகித் தேவாலயத்துக்கு வருகிற வஸ்துக்களை நிவேதிக்க முதற் கவருகிறவர்களாயும் அங்கே வருகிற ஸ்திரீகளுடனே விபசாரஞ்செய்கிறவர்களாயுமிருந்ததினிமித்தம் யெகோவா அவர்களை வெறுத்தார். சாமுவேலோ யெகோவாவிடத்திலும் சனங்களிடத்திலும் மகாதயைபெற்றவனாய் வளர்ந்தான். (௧. சாமு. ௨. ௨௬.

௧௭௧. இப்படியிருக்க, ஒரு தீர்க்கதரிசி ஏலி

யிடத்தில் வந்து யெகோவா, என்னை மதிக்கி
றவர்களை நானும் மதிப்பேன். என்னை அவம
திக்கிறவர்களை நானும் அவமதிப்பேன். உன்
வீட்டில் ஒரு கிழவனுமில்லாமல் நாசப்படுவார்
கள்.* உன்மக்களிருவரும் ஒரேநாளிலே சாவா
ர்கள். என் சித்தத்துக்கேற்ற ஒரு ஆசாரியனை
எழுப்புவேன். அவன் எனக்கு ஆராதனை செ
ய்வானென்று யெகோவா சொல்லுகிறார் என்
று அறிவித்தான். (க. சாமு. உ. ருகூ.

களஉ. இப்படி நடந்திருக்க, ஒருநாளிரவு
யெகோவா பிரசந்நராகிச் சாமுவேலே, என்றா
ர். அதை அவன் கேட்டு ஏலி தன்னைக் கூப்பிடு
கிறானென்று நினைத்து ஏலியண்டைபோக,அவ
ன், நான் உன்னைக் கூப்பிடவில்லை, நீபோய்
ப்படுத்துக்கொள் என்றான். மறுபடியும் யெ
கோவா சாமுவேலே என்று கூப்பிட, அவனும்
முன்போல ஏலிஅண்டைபோனான். அவனும்
முன்போலச் சொல்லி அனுப்பினான். மூன்
றாம் முறையும் யெகோவா சாமுவேலே, என்
றார். அப்பொழுதும் அவன் ஏலியண்டை
போனான். ஏலியோ நீ போய்ப் படுத்துக்
கொள் மறுபடியும் இப்படிச் சத்தங்கேட்டால்
யெகோவாவே, அடியேன் கேட்கிறேனென்று
சொல்லென்று சொல்லியனுப்ப, அவன் போய்
ப்படுத்திருக்கையில் மறுபடியுஞ் சாமுவேலே,
என்று கூப்பிட்ட சத்தத்தைக்கேட்டு, ஆண்ட
வரே, சொல்லும். அடியேன்கேட்கிறேனென்
றான். அதற்கு யெகோவா ஏலியின் குடும்பத்

* க. இராசாக்கள் உ. உஎ.

தார் செய்தபாவம் நிவாரணமாகமாட்டாது. அ
வர்களுக்கு நான் நியாயத்தீர்ப்புச் செய்வேன்
என்றார். மறு நாள் ஏலி சாமுவேலை அழைத்து
நடந்த காரியத்தைக் கேட்டறிந்து வணக்கமா
ய் யெகோவா தமது சித்தப்படி செய்வாராக எ
ன்றான். (க. சாமு. ரு. கஅ.

கஎரு. இப்படியிருக்கையில் இஸ்ரவேலர்
பெலிஸ்தியருடனே யுத்தம்பண்ணப் போய் எ
திர்த்தபோது இஸ்ரவேலரில் நாலாயிரம்பேர் ம
டிந்துபோக, அவர்கள் அணிமுறிந்து பாளயத்து
க்கோடி வந்து தாங்கள் மறுநாளிலே செயம
டையும்பொருட்டாய் ஷீலோவிலிருந்த நியாய
ப்பிரமாணப் பெட்டியை எடுப்பித்துக்கொண்
டுபோய் எதிர்க்க, இஸ்ரவேலருக்குள் முப்பதி
னாயிரம்பேர் மடிந்தார்கள். அவர்களுடனே
ஏலியின் புத்திரர் இருவரும் மாண்டார்கள். நி
யாயப்பிரமாணப்பெட்டியும்பிடிக்கப்பட்டது.
அந்தச்செய்தியைத் தொண்ணூற்றெட்டு வயது
ள்ளவனாயிருந்த ஏலி கேள்விப்பட்டவுடனே
தலைகீழாய் விழுந்து மரித்தான். இவன்இஸ்ர
வேலரை, சΟ. வருஷம் நியாயம்விசாரித்தான்.

(க. சாமு. ச. கஅ.

கஎச. பெலிஸ்தியர் நியாயப்பிரமாணப் பெ
ட்டியைக் கொண்டு போய்த் தாங்கள் வணங்கி
னதாகோனுடைய கோவிலில் வைத்துப் போய்
மறுநாட் காலமே வந்துபார்க்க, தாகோன் த
ரையிலே விழுந்து கிடந்தது. அவர்கள் அதை
த் தூக்கி முன்போல் நிறுத்தி வைத்துப்போனார்
கள். மறுநாட்காலமே தாகோனின் தலையும்

கைகளிரண்டும் துண்டப்பட்டுக் கிடந்தன. உடலும் வேறே விழுந்து கிடந்தது.* பிரமாணப்பெட்டியைப் பிடித்ததினிமித்தம் அத்தேசத்தாருக்குள் மூலவியாதியுமுண்டாய் வேதனைப்படுத்திற்று. அதினால் அவர்கள் இஸ்ரவேலருடைய தேவனின் பெட்டி எங்களுக்குள்ளிருக்கப்படாதென்று சொல்லிக் காத்தூருக்கனுப்ப, அங்கேயும் மகா சங்காரமுண்டாயிற்று. பின்பு எப்ரோனுக்கு அனுப்பினார்கள். அங்கும் மகா சங்காரமுண்டாயிற்று. அப்பொழுது யாவரும் பயந்து† பொன்னினால் ஐந்துருபங்களையும் ஐந்து எலிகளையுஞ் செய்வித்து ஒரு புதுப் பண்டியிலேற்றி, இரண்டு கறவைப் பசுக்களை அதிலே பூட்டிக், கன்றுகளை வீட்டிலே தடுத்துக்கொண்டு யெகோவாவின் பெட்டியுடனே அனுப்பிவிட்டார்கள். அந்தப்பசுக்கள் தங்கள் கன்றுகளைப் ப்ாராமலும் ஒருவரால் நடத்தப்படாமலும் பேத்ஷிமெஷ்மட்டும் போய் யோசுவாவின் வயலிலே வந்து அங்குள்ள ஒரு பெரிய கல்லண்டையில் நின்றுவிட்டது. அப்பொழுது அவர்களுள் லேவியர் அந்தப் பெட்டியையும் பொன் உருபங்களையுமிறக்கி வைத்துக்கொண்டு அந்தப் பசுக்களை யெகோவாவுக்குப் பலியிட்டார்கள். பேத்ஷிமெஷ் ஊராரும் அந்தப் பெட்டியைத் திறந்து பார்த்ததினிமித்தம் ஐம்பதினாயிரத்தெழுபதுபேர் மடிந்தார்கள். அதைக்கண்டு அந்தப்பெட்டியை எடுத்துக்கொண்டு போய் அபீனதாப்பின் வீட்டிலே வைத்தார்கள்.

* ஏசா, சசு.க. † எரேமி. ௰. உ. ‡ உபாக. உஅ. உஎ.

அங்கே தாவீதினுடைய காலம்வரைக்குமிருந்தது.* (க. சாமு. ரு. ௬, எ. உ.

கஎ௫. இன்னும் பெலிஸ்தியரால் இடைஞ்சற்பட்ட இஸ்ரவேலர் சாமுவேல் தங்களுக்குச் சொன்ன புத்தியைக் கேட்டுப் பாகால்களையும் அஷ்தாரோத்தையும் விலக்கி மிஸ்பேயிலே கூடிவந்து உபவாசித்துத் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டுக்கொண்டிருக்கையிற் பெலிஸ்தியர் யுத்தத்துக்குவந்து நேரிட்டார்கள். சாமுவேல் யெகோவாவை நோக்கிப் பிரார்த்தித்துக்கொண்டிருக்க, இஸ்ரவேலர் யுத்தத்துக்குப் போனார்கள். அத்தினத்திலே பெலிஸ்தியருக்குள் ஒரு பெருமுழக்கம் தோன்றினதினால் அவர்கள் அணிகுலைய, இஸ்ரவேலர் செயங்கொண்டார்கள். அன்றுமுதற் பெலிஸ்தியர் பிடித்திருந்த சமஸ்த நகரங்களையும் இஸ்ரவேலரே சுதந்தரித்தார்கள். (க. சாமு. எ. க௪.

கஎ௬. சாமுவேல் தன் புத்திரராகிய யோவேலையும் அபீயாவையும் இஸ்ரவேலருக்கு நியாயாதிபதிகளாக ஏற்படுத்த, அவர்கள் பரிதானம் வாங்கி நியாயத்தைப் புரட்டித் துருமந்தவழி நடந்ததினாலே சனங்கள் சாமுவேலிடத்தில் வந்து தங்களுக்கொரு இராசாவை அபிஷேகம பண்ணவேண்டுமென்றுகேட்க,† அவன் நீங்கள் விரும்புகிற இராசா உங்கள் புத்திரரிற் சிலரைத் தனக்குச் சாரதிகளாக ஏற்படுத்துவான்; சிலரை முன்னோடிகளாகவைப்பான்; சிலரை ஐம்பது பேருக்குத் தலைவராக வைப்பான்; சிலரை வே

* உ. சாமுவேல். ௬ ௩, ௪. † உபாகமம. கஎ க௪, க௫.

ளாண்மைக்காரராக வைப்பான்; உங்கள்புத்தி ரிகளைச் சமையற்காரிகளாக வைப்பான். உங்கள் நிலங்களில் விசேஷித்தவைகளைப் பிடித்துத்தன்பணிவிடைக்காரருக்குக்கொடுப்பான். உங்கள் தானியங்களிலே பத்திலொன்றை வாங்குவான்; உங்கள் வேலைக்காரரையும் உங்கள் வாகனங்களையும் தன் பணிவிடைக்காரருக்குக் கொடுப்பான். ஆடுகளிலும் வரிவாங்குவான். நீங்கள் அவனுக்குப் பணிவிடைக்காரராவீர்கள். அவன் நிமித்தம்நீங்கள்யெகோவாவை நோக்கி ஓலமிடுவீர்களென்றான். (க. சாமு. அ.கஅ.

ககஎ. அதற்கவர்கள் மறுசாதியாரைப்போல எங்களுக்கும் ஒரு இராசா உண்டானால் எங்கள்யுத்தங்களை நடத்துவான் என்றார்கள். அதைக்கேட்டுச் சாமுவேல் பேன்யாமீன் கோத்திரத்தில் அபீயேலின் புத்திரனான கீஷுடைய மகனாகிய ஷவுலை இராசாவாக ஏற்படுத்தினான். பின்பு சாமுவேல் இஸ்ரவேலர் அனைவரையும் ஒருங்குகூட்டி நீங்கள் கேட்டபடி உங்களுக்கொரு இராசனை ஏற்படுத்தினேன். நானோ விருத்தனானேன். என்புத்திரர் உங்களோடிருக்கிறார்கள். நான் ஒருவருடைய உடமையை அபகரித்ததில்லை. அப்படிச் செய்ததுண்டானால் அதைஎனக்கறிவியுங்கள். அதை நான் உங்களுக்குத் திரும்பத் தருவேன்என்றான். அதற்கவர்கள் நீர் எங்களுக்கு யாதொரு நட்டமுஞ்செய்ததில்லைஎன்றார்கள். (க.சாமு.கஉ.ச.

ககஅ. அதின்பிறகு அவன் அம்மோனியரி

* அப். கக. உக.

ன் இராசனாகிய நாகாஷ் உங்களுக்கு விரோத மாய் எழும்பினதைக்கண்டு நீங்கள் கேட்டப டி யெகோவா உங்களுக்கு ஒரு இராசாவை ஏ ற்படுத்தியிருக்கிறார். நீங்கள் யெகோவாவுக் குப் பயந்து, அவருடைய வாக்குக்கமைந்து ந டந்தால் நீங்களும் உங்கள் இராசாவும் வாழு வீர்கள். இல்லாவிட்டால் யெகோவாவின் கர ம் உங்களுக்கு விரோதமாயிருக்குமென்றான்.

(க. சாமு. கஉ. கரு.

கஎகூ. ஷவுல் அரசாண்ட இரண்டாம் வரு ஷத்தில் இஸ்ரவேலரில் இரண்டாயிரம்பேரை த்தெரிந்து தன்னோடே மிக்மாஷிலும், ஆயிரம் பேரை யோனதானோடே பெத்தேல் மலையிலு ம் வைத்தான். யோனதான் வந்தெதிர்த்த பெலி ஸ்தியரைச் செயங்கொண்ட செய்தியைப் பெ லிஸ்தியர் கேள்விப்பட்டு இஸ்ரவேலருடனே யு த்தம்பண்ணும்படி முப்பதினாயிரம் இரதவீரரை யும், ஆறாயிரம் குதிரைவீரரையும், அனந்த கா லாட்களையுஞ் சேர்த்துக்கொண்டு மிக்மாஷிலே வந்து பாளயமிறங்கக் கண்ட இஸ்ரவேலர் பய ந்து கெபிகளிலும், காடுகளிலும், மலைகளிலும், துருக்கங்களிலும், குகைகளிலும், ஒளித்தார்க ள். வேறனேகர் யோர்தானைக்கடந்து காத்தா ருக்கும் கிலியாத்துக்கும் ஓடினார்கள். ஷவுலோ ஏழுநாள்மட்டாக சாமுவேல் வருவானென்று காத்திருந்தும் அவன் வரத் தாமதித்ததினாலே தானாக யெகோவாவுக்குத் தகனபலியைச் செ லுத்தினான். அப்பொழுது வந்த சாமுவேல் அ தைஅறிந்து இராசாவே, நீர் யெகோவாவுடைய

பிரமாணத்தை மீறினதின் நிமித்தம் யெகோவா இராசாங்கத்திலிருந்து உம்மைவிலக்கி வேறொரு அதிபதியைத் தெரிந்துகொண்டார் என்று சொல்லிக் *கில்காலைவிட்டுக் கிபியாவுக்குப் போனான். (௧. சாமு. ௧௩. ௧௫.

௧அ௦. அக்காலத்திலே பெலிஸ்தியர் ஆயுதங்களைச் செப்பனிடுவதற்கு இஸ்ரவேலருக்கு இடங் கொடாதிருந்ததினால் ஷவுலிடத்திலும் யோனத்தானிடத்திலுமேயன்றி வேறொருவர் இடத்திலும் ஆயுதமிருந்ததில்லை. இப்படியிருக்கையில் யோனத்தான் தன் பிதாவாகிய ஷவுலை அறியாமல் தன் ஆயுததாரியையும் அழைத்துக்கொண்டு யெகோவாவில் நம்பிக்கையுள்ளவனாய்ப்பெலிஸ்தியரின் பாளயத்துக்குப்போய்எதிர்ப்பட்ட பெலிஸ்தியரைச் சங்கரித்துக்கொண்டு போனான். அத்துடனே பூமியதிர்த்தலுமுண்டானது. அதினாலே பெலிஸ்தியர் மிகவும் பயந்திருக்கிறதை ஷவுல் அறிந்து தன் சனங்களுடனே யுத்தகளத்துக்குப்போனான். பெலிஸ்தியர் தங்களுக்குள் தாங்களேகலகமுண்டாக்கி ஒருவரையொருவர் வெட்டிச் சங்காரஞ்செய்து பின்னிட்டோடுகிறதை அறிந்து முன்னே ஒளித்தோடின இஸ்ரவேலரும் வந்து கூடி யுத்தத்திலே துரிதமாய் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். (௧. சாமு. ௧௪. ௨௧.

௧அ௧. அப்பொழுது ஷவுல் நான் என் சத்துருக்களிடத்திற் பழிவாங்குமட்டும் போசனபானம் பண்ணுகிறவன் சபிக்கப்பட்டவனென்று

* அப்போஸ்தலர். ௧௩. ௨௨.

சொல்லியிருந்ததினுல், யாதொருவரும் போச
னபானம்பண்ணுதிருந்தார்கள். அதைஅறியா
த யோனுதான் அந்தக் காட்டிலிருந்த தேன்கூ
ட்டிலெடுத்துப் பருகிக் கண்தெளிந்திருக்கிற
தைச் சனங்கள் கண்டு, அவனுடைய பிதாவி
ன் சபதவாக்கை அவனுக்கறிவிக்க, அவன் பி
தாச்செய்த தப்பிதத்துக்காகத் துக்கப்பட்டுக்
கொண்டு பெலிஸ்தியரை மிக்மாஷ் தொடங்
கி அயலோன்மட்டுந் துரந்து சங்கரித்தான். பி
ன்பு ஷவுல் யெகோவாவுக்கொரு வேதிகையை
உண்டாக்கிப் பலிசெலுத்தி நாம் அனைவரும் இ
ன்றிரவு புறப்பட்டுப் பெலிஸ்தியரைச் சங்கரி
க்க அவர்களை ஒப்பிப்பீரோ என்று யெகோ
வாவைக்கேட்டான். அதற்குப்பிரதியுத்தரங் கி
டையாததினுலே அவன் தேவன் தங்களுக்கு
உத்தரங் கொடாதிருக்கிறது எந்தப்பாவமென்ற
றியும்படி சீட்டுப்போட, சீட்டு ஷவுல்மேலு
ம் யோனுதான்மேலும் விழுந்தது. அவ்விருவர்
மேலுஞ் சீட்டுப்போட யோனுதான்மேல்விழு
ந்தது. (க. சாமு. கச. சஉ.

கஅஉ. அப்பொழுது இஸ்ரவேலர் அனைவ
ரும் நமக்கு இத்தனைபெரிய ரட்சிப்பைக்கொ
டுத்த யோனுதானைக் கொலைசெய்வதெப்படியெ
ன்றுசொல்லி அவனை மீட்டுக்கொண்டு தங்கள்
தேசத்துக்குத் திரும்பினுர்கள். பெலிஸ்தியரு
ந் தங்கள் தேசத்துக்குத் திரும்பினுர்கள். இப்ப
டியே ஷவுல் மோவாபியர், அம்மோனியர், ஏ
தோமியர், அமலேக்கியர், பெலிஸ்தியர் முதலி
யசகலரையும் செயங்கொண்டு இஸ்ரவேலரைத்

துயரப்படுத்தின அவர்கள்கையினின்றுவிடுவித்தான். இவனுடையகாலமெல்லாம்பெலிஸ்தியருக்கும் இஸ்ரவேலருக்கும் விடாத யுத்தமுண்டாயிருந்தது. (க. சாமு. கச. சஎ.

கஅரு. பின்பு சாமுவேல் ஷவுலுடனே நீ போய் அம்லேக்கியராகிய ஸ்திரீ புருஷர், பிள்ளைகள், சகலரையும் அவர்கள் மிருகங்கள் யாவற்றையும் இரக்கமின்றிச் சங்கரிக்கவேண்டுமென்று யெகோவா கட்டளையிடுகிருர். நீ போய் அப்படியேசெய்யென்ருன். அந்தப்படி ஷவுல் சனங்களையுஞ் சேர்த்துக்கொண்டு அம்லேக்கியரின் நகரத்திலேபோய்ப் பாளயமிறங்கியிருக்கையில் அங்குள்ள கேனியரையழைத்து இஸ்ரவேலர் எகிப்தைவிட்டு வந்தபொழுது நீங்கள் அவர்களுக்குத் தயைசெய்தபடியால் இப்பொழுது நீங்கள் அம்லேக்கியருடன் அழிவடையாமல் அவர்கள் நகரத்தைவிட்டுப்போய் விடுங்களென்று சொல்லிஅனுப்பி அம்லேக்கியரைக் கட்கத்திஞலேசங்கரித்து அவர்கள்இராசஞகிய அகாக்கை உயிரோடே பிடித்துக்கொண்டு அவர்கள் ஆடுமாடுகளில் தெரிவானவைகளையும் பிரதானமான பொருள்களையும் பேணிவைத்துக்கொண்டான். அப்பொழுது யெகோவாவின் வாக்குச் சாமுவேலுக்கு வெளிப்பட்டு ஷவுல்என்கட்டளைகளைப் பராமுகம்பண்ணினதிஞல் அவனை இராசாவாக அபிஷேகம்பண்ணினது அனுதாபப்படத்தக்கதாய் இருக்கிறதென்றது.

கஅச. அதை அறிந்த சாமுவேல் ஷவுலண்

டைக்குப் போய் நீ யெகோவாவின் வாக்கை ப் புறக்கணித்தபடியால் அவரும் உன்னைப் பு றக்கணித்தாரென்று சொல்ல, அவன் பயந்து நீர் என் பாவங்களை மன்னித்து யெகோவாவுக் கு ஆராதனை செய்ய வாருமென்றான். அதற் குச் சாமுவேல் இணங்காமற் திரும்பிப் போவ தை ஷவுல் கண்டு சாமுவேலுடைய மேலங் கியின் விளிம்பைப் பிடிக்க, அது கிழிந்துபோ னது. சாமுவேலோ திரும்பிநின்று இராசா வே, யெகோவா உமது இராச்சிய பரிபாலன த்தை உம்மைவிட்டு எடுத்து உமது அயலானுக் குக் கொடுத்தார். இஸ்ரவேலின் தேவன் பொ ய்சொல்லுகிறவருமல்ல, மன விகாரப்படுகிற வருமல்ல என்றான்.* அதைக் கேட்ட ஷவுல் நான் பாவஞ் செய்தேன், ஆகிலும் யெகோவா வுக்கு ஆராதனை செய்யும்படி வாருமென்று ம ன்றாடிக் கேட்க, சாமுவேலும் கூடிப் போன ன். ஷவுலோ தேவனுக்கு ஆராதனை செய்தா ன். பின்பு சாமுவேல் அகாக்கை அழைப்பி த்து அவனைச் சங்கரித்து ராமாவுக்குப் போன ன். ஷவுலும் கிபியாவுக்குப் போனான். அன் றுமுதல்மரணநாள்மட்டுஞ் சாமுவேல் அவனை ச் சந்திக்கப்போகவில்லை. (ச. சாமு. கடு. ௫௫.

கஅ௫. பின்பு யெகோவா சாமுவேலுக்கு வெளிப்பட்டு, நான் ஷவுலைப் புறக்கணித்து ஈஷாயின் புத்திரரில் ஒருவனை இஸ்ரவே லுக்கு இராசாவாகத் தெரிந்து வைத்தேன். நீ அவனுக்கு அபிஷேகஞ் செய்யென்று கற்பி

* எண். உங. கக. எசே. உச. கச.

த்தார்.† சாமுவேல் அந்த வார்த்தையைக் கே
ட்டு பேத்லகேமுக்குப் போய் அவ்வூராரை
யெகோவாவின் உற்சவத்தை ஆசரிக்க வாருங்
களென்றழைத்து யாவரும் வந்தபின் இவன் ஈ
ஷாயின் சேஷ்ட புத்திரனாகிய இலியாப்பை
நோக்கி யெகோவாவினால் அபிஷேகம் பெறு
பவன் யெகோவாவின் சமுகத்தில் நிற்கிறானே
என்றான். அதற்கு யெகோவா நான் உயரத்
தைப் பார்க்கிறவரல்ல, உள்ளத்தைப் பார்க்கி
றவர். இவனை நான் தெரிந்துகொண்டதில்
லையென்றார். அப்பொழுது ஈஷாய் அபீனா
தாப்பைச் சாமுவேலுக்குமுன் அனுப்ப அவ
னையும் யெகோவா தெரிந்துகொள்ளவில்லை எ
ன்றான். மறுபடி ஷம்மாவை அனுப்ப அவ
னுமல்லவென்று மறுத்தான். இப்படியே ஈஷா
ய் தன் புத்திரர் எழுவரையும் அனுப்பஅனுப்ப
யாவரும் மறுக்கப்பட்டார்கள். பின்பு ஆடு
மேய்த்துக்கொண்டுபோன இளையவனாகிய தா
வீதை அழைப்பித்து அவனுக்கு அபிஷேகம்ப
ண்ணினான். அன்றுமுதல் யெகோவாவின் ஆ
வி தாவீதோடேயிருந்தது. சாமுவேல் ராமா
வுக்குப் போனான். (௧. சாமு. ௧௬. ௧௩.

௧அ௬. அப்பால் யெகோவாவுடைய ஆவி
ஷவுலை விட்டு நீங்க அவன் மேல் துராவிவாச
மாகி அவனைக் கிலேசப்படுத்தினதினாலே அவ
ன் வருந்தி அதற்குச் சகாயஞ் செய்யும்பொரு
ட்டு கின்னரம் வாசிக்க வல்லவனான தாவீதை
அழைப்பித்து, அவனைத் தனக்கு ஆயுததாரியா

---

† சங். ௭அ. ௭௦. அப். ௧௩.௨௨.

க வைத்துக்கொண்டான். ஷவுலுக்கு அந்தத் துராவி ஆவேஷமாகும்பொழுது தாவீது கின்னரத்தை எடுத்து வாசிக்க அவனைப் பிடித்த துராவி நீங்கி விடும். ஷவுலோ ஆறுதலடைந்திருப்பான். (க. சாமு. கசு. உ௩.

கஅஎ. இப்படியிருக்கையில் இஸ்ரவேலரும் பெலிஸ்தியரும் யுத்தர்துக்கு ஆயத்தமாய்ப்பாளயமிறங்கினார்கள். அப்பொழுது ஆறரைமுழ உயரமுள்ளவனும் கொல்யாத்தென்னும்நாமமுள்ளவனுமான ஒரு வீரன் தலைக்குப் பித்தளைப் பாகையையும், மார்புக்குப் பித்தளைப் போர்க் கவசத்தையும், காலுக்குப் பித்தளைச்சீராவையும் அணிந்து பித்தளைப் பரிசையையும் ஈட்டியையும் பிடித்துக்கொண்டு இஸ்ரவேலருக்கு நேரே வந்து அவர்களை நோக்கி நீங்கள் யுத்தஞ் செய்ய வந்தவீரரல்லவா ? நீங்கள் உங்களுக்குள்ளே பலபராக்கிரம வீரரில் ஒருவனைத் தெரிந்து என்னுடனே போராட அனுப்புங்கள். அவன் என்னுடனே போராடி என்னைச் செயங்கொண்டால் நாம் அனைவரும் உங்களுக்குப் பணிவிடைக்காரராவோம். நான் அவனைச் செயங்கொண்டால் நீங்கள் யாவரும் நமக்குப் பணிவிடைக்காரராக உடன்படுங்களென்று சொல்லுவான். இந்த வசனத்தைக் கேட்ட ஷவுலுஞ் சனங்களும் அவனுக்கு அணுகமாட்டாமற் பயந்து நடுங்கினார்கள். (க. சாமு. கஎ. கக.

கஅஅ. ஷவுலோ இந்தக்கொல்யாத்தைச் செயங்கொள்ளுகிறவனுக்கு இராசா வேண்டிய திரவியங்களையுங் கொடுத்துத் தன் புத்திரியையு

ம் விவாக மனைவியாக ஒப்பித்து, அவன் குடும்பத்தையுஞ் சுயாதீனராக்கி விடுவாரென்று வாக்குப்பண்ணியிருந்தான். இப்படியிருக்கையில் யூத கோத்திரத்திற் பிறந்த ஈஷாயுடைய புத்திரர் எழுவரும் ஷவுலுடைய தளங்களிற் சேர்ந்து யுத்தத்துக்கு வந்திருந்தார்கள். எட்டாம் புத்திரனாகிய தாவீதோ சிறு பிராயமாயிருந்ததினால் யுத்தத்துக்கு வரவில்லை. பிதாவாகிய ஈஷாய் தன்னுடைய மக்கள் எழுவருக்கும் போசனத்தைத் தாவீதுகையிற் கொடுத்தனுப்ப, தாவீது கொண்டு பாளயத்துக்கு வந்தான். அந்தச் சமையத்திற் கொல்யாத்தும் இஸ்ரவேலின் பாளயத்துக்கு முன்போல் வந்து இவர்களை நிந்திக்கிறதைத் தாவீதுகேட்டு, இந்த விருத்தசேதனம் பெருதவன் யெகோவாவின் சனங்களை நிந்திப்பதென்ன? இவன் செய்யும் நிந்தையை இஸ்ரவேலரில் நின்று நீக்குகிறவனுக்கு இராசா என்ன உபகாரஞ் செய்வாரென்று கேட்க, சனங்கள் இராசா சொன்ன வாக்குத்தத்தத்தை அறிவித்தார்கள். (க. சாமு. கஎ. உஎ.) இந்தச் சங்கதியை இவனுடைய தமையனாகிய இலியாப் அறிந்து தாவீதுடனே, நீ மேய்த்த ஆடுகளை வனாந்தரத்தில் விட்டு யுத்தத்தைப் பார்க்கும்படி வந்ததென்ன? உன் மனக் குறும்பை நான் அறிவேன் என்றான். தாவீது தன் தமையனுடனே என்னை நீர் கோபிக்கக் காரணமென்னவென்று சொல்லி, பின்பு ஷவுலை நோக்கி, இராசாவே, நீங்கள் கலங்கவேண்டாம். நான் போப் இவனைச் செயங்கொள்வேன் என்று

சொல்ல, ஷவுல் நீ இளைஞன் ; இவன் சிறுபி ராயம்முதல் யுத்தவீரன். நீ இவனுடனே எதிர்க்க வல்லவனல்லவே என்றான். அதற்குத் தாவீது நான் வனத்தில் ஆடு மேய்க்கையில் எனக்கு நேரிட்ட சிங்கத்துக்கும் கரடிக்கும் என்னைத் தப்புவித்த யெகோவா இந்தப் பெலிஸ்தியனுடைய கைக்குத் தப்புவிக்கமாட்டாரா என்றான்.* அதைக் கேட்ட ஷவுல் யெகோவா உன்னோடிருக்கக்கடவரென்று சொல்லி அவனுக்கு யுத்த எத்தனங்களைத் தரிப்பித்துவிட, அவன் அதிலே பரீட்சையற்றவனானபடியால் அவைகளைக் களைந்துவைத்து ஐந்து கூளாங்கல்லுகளைத் தெரிந்து தன் பையிலிட்டு ஓர் கவணையும் எடுத்துக்கொண்டு தன் ஊன்றுகோலுடனே கொல்யாத்துக்குநேரே போனான்.

(க. சாமு. கஎ. சo.

கஅகூ. அதைக் கண்ட கொல்யாத்து தாவீதைநோக்கி நீ ஒரு தடியுங்கொண்டு என் முன்னே வர நான் ஒரு நாயா? நான் உன் மாமிசத்தைப் பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் விருந்திடுவேன் என்றான். அதற்குத் தாவீது நீ உன் கட்கத்தையும், ஈட்டியையும், கேடகத்தையும் நம்பி வருகிறாய். நானோ யெகோவாவை நம்பி வருகிறேன். அவர் உங்களை எங்கள் கையில் ஒப்பிப்பாரென்று ஒரு கல்லையெடுத்துக் கவணிலே வைத்துக் கொல்யாத்துடைய நெற்றிக்கு நேராய் எறிய, அது அவனுடைய நெற்றியிற் பட்டு உருவிப்போனதினாற் கொல்யாத்து விழுந்து மரித்தான். தாவீதோ அவனுக்கு

* எபிரே கக. கூ.

க் கிட்டப்போய் அவனுடைய கட்கத்தை எடுத்து அவனைச் சிரசு சேதம்பண்ணி அதைக் கையிற்கொண்டு இஸ்ரவேலர் பக்கத்துக்குத் திரும்பினான். அதைக்கண்ட பெலிஸ்தியர் பின்னிட்டோட, இஸ்ரவேலர் தொடர்ந்து போய் அவர்களைச் சங்கரித்து அவர்கள் பாளயத்தையுங் கொள்ளையிட்டுத் திரும்பினார்கள்.

(க. சாமு. ௧௭. ௫௯.

௧௯0. அந்தநாளிற்றானே ஷவுல் தாவீதைத் தன் குடும்பத்திற் சேர்த்துக்கொண்டான். அவனுடைய மகனாகிய யோனாதான் தாவீதைப் பிராண சினேகிதனாகப் பற்றிக்கொண்டான். இவர்கள் செயவீரராகத் தங்கள் தேசத்துக்குத் திரும்பி வருகையில் அந்தத் தேசத்து ஸ்திரீகள் கீதவாத்தியங்களை இயக்கிச் சந்தோஷங்கொண்டாடுகையில் ஷவுல் ஆயிரவரையும் தாவீது பதினாயிரவரையும் செயித்தார்களென்று பாடினார்கள். ஸ்திரீகள் பாடிய புகழ்ச்சியைக் கேட்டதினாலே ஷவுல் பொறாமைகொண்டான். அப்படியிருக்கும் நாளில் ஷவுலுக்கு முன்போல துராவிபற்றிக்கொண்டபடியால் அவனுக்காகக் கின்னரந் தட்டிக்கொண்டு நின்ற தாவீதின் மேல் ஷவுல் தன் ஈட்டியை எறிய, தாவீது பிராண சேதமில்லாமல் விலகிவிட்டான்.

(க. சாமு. ௧௮. ௧௧.

௧௯௧. இந்த ஷவுல் யெகோவா தன்னைவிட்டு நீங்கித் தாவீதைச் சார்ந்திருக்கிறாரென்று அறிந்ததினால், தாவீதைத் தன் குடும்பத்தை விட்டுப் பிரித்து தன் தளங்களில் ஆயிரவருக்குத் த

ளகத்தனுக்கினுன். பின்பு ஷவுல்தனதுதாசரோ
டும் யோனத்தானேடும் தாவீதைக்கொல்லும்படி
சொல்லி வைத்திருந்தான். அப்பொழுது யோ
னத்தான் ஷவுலுடனே தாவீது மகா உத்தமனெ
ன்றும், அவனலேஇஸ்ரவேலர் இரட்சிப்படை
ந்தார்களென்றும் சொல்லித் தன்பிதாவை அன்
னேரத்தில்ஆறுதற்படுத்தினுன்.(க.சாமு.கக.ரு.
கக௨. மறுபடியும் பெலிஸ்தியருக்கும் இஸ்
ரவேலருக்கும் யுத்தம் நேரிட்டபொழுது தாவீ
து போய் அவர்களைச் செயங்கொண்டு வந்தா
ன். பின்னும் ஷவுல் துராவி பிடித்தவனயிரு
க்கையில் இவனை ஈட்டியினுலே குற்ற, இவன்
விலகித் தன் மனைவியாகிய மீகாள் சொன்னபு
த்திப்படி தப்பியோடிச் சாமுவேலுடனே கூ
டி நயோதிலேயிருக்கிறதை ஷவுல் அறிந்து அ
வனைப்பிடித்துவரும்படி ஆட்களை அனுப்ப,அ
வர்கள் சாமுவேலுடைய சமுகத்திற் சேர்ந்தவு
டனே தேவாவியின் பலத்தினுல் அவர்களும்
தீர்க்கதரிசிகளானுர்கள். இதை அறிந்த ஷவு
ல் மறுபடியும் ஆட்களை அனுப்ப அவர்களும்
அப்படியானுர்கள். (க. சாமு. கக. உக.
கசுரு. அதின்பின் ஷவுல் தானைப் புறப்ப
ட்டுச் சாமுவேலுக்குமுன் போக அவனும் தீ
ர்க்கதரிசியானுன். அப்பொழுது தாவீது தப்
பியோடி யோனத்தானைக் கண்டு ஷவுல் தனக்கு
ச் செய்ததெல்லாவற்றையும் அறிவிக்க, யோ
னத்தான் நான் என் பிதாவின் அபிப்பிராயத்தை
உனக்குத் தெரிவியாதிருந்தால் யெகோவா என்
னை விசாரிக்கக்கடவரென்ருன். மேலும் ஷ

வுல் விருந்துகொண்டாடும்பொழுது தாவீது பந்திக்கு வராமலிருக்கிறது என்னவென்று விஞவ, யோஞதான் அவன் தன் சகோதரஞலே அழைக்கப்பட்டுப் பேத்லகேமுக்குப் போயிருக்கிருன் என்ருன். அதை ஷவுல் கேட்டு நீ தாவீதை உனக்கும் உன் குடும்பத்துக்கும் வெட்கமுண்டாகும்படி தெரிந்துகொண்டாயென்பது எனக்குத் தெரியும். அவன் உயிரோடிருந்தால் உனது ராச்சியபாரம்நில்லாது. அவனைப் பிடித்துக்கொண்டுவா. அவன் கொலையுண்பதுநிச்சயமென்ருன். அதற்கு அவன் தடுத்து அவன் நமக்கு என்ன செய்தான்என்க, ஷவுல் கடுங் கோபங்கொண்டு தன் ஈட்டியை யோஞதான் மேலே எறிந்தான். அதஞலே ஷவுல் தாவீதைக் கொலைசெய்யக் காத்திருப்பது நிச்சயமென்று அறிந்து தாவீதண்டை போய் அந்தச் செய்தியைத் தாவீதுக்கு அறிவித்து அவனை அனுப்பித் தானும் தன் பட்டினத்துக்குப் போஞன். (க. சாமு. உ0. சஉ.

சகூச. தாவீது புறப்பட்டு ஆசாரியஞகிய அகிமெலெக்கண்டை போய் பசி வருத்தத்திஞலே பரிசுத்த அப்பத்தை வாங்கிப் புசித்து* ஆலயத்திலே வைத்திருந்த கொல்யாத்தின் கட்கத்தையும் எடுத்துக்கொண்டு அதுல்லாமென்னுங் கெபிக்குப் போய்த் தன் பிதாமாதாவை மோவாபின் ராசனுக்கு அடைக்கலமாக ஒப்புவித்து, தன்னைச் சேர்ந்த நானூறு சனங்களுடனே அரேத்தென்னுங் காட்டுக்குப் போஞன். அ

* மத்தேயு. கஉ. ந. ச. மாற்கு. உ. உகி. உசு. லூக்கா. சு. ந. ச.

ப்பொழுது ஷவுல் அவனைத் தொடர்ந்து போய் அகிமெலெக்கை அழைப்பித்து நீதாவீதுக்கு உதவிசெய்தது என்னவென்று வினவி, தோவேக்கைக்கொண்டு எண்பத்தைந்து ஆசாரியரைக் கொல்லுவித்தான். அப்பொழுது அகிமெலெக்கின் புத்திரனாகிய அப்யாதார்மாத்திரந் தப்பித் தாவீதிடத்துக்கு ஓட, தாவீது அவனுக்கு அபயங்கொடுத்தான். (க. சாமு. உஉ.

ககூ௫ பின்பு பெலிஸ்தியர் கேயிலாவூராரோடு வந்து எதிர்த்தபொழுது தாவீது தன் சனங்களோடே போய்ப் பெலிஸ்தியரைச் சங்காரம் பண்ணி அங்கேயிருக்கிறதை ஷவுல் கேள்விப்பட்டு அவனை அகப்படுத்தத் தன் தளங்களுடனே வந்தான். அதைத் தாவீது அறிந்து அவ்விடத்தை விட்டு வனவாசியாய்த் திரிந்து சீப்பென்னும் வனத்திலுள்ள ஒரு மலையிற் தரித்திருக்கையில் ஷவுல் தாவீதைத் தேடி அங்கே போனான். அப்பொழுது ஷவுலை அறியாமல் யோனாதான் போய்த் தாவீதைச் சந்தித்து அவனுக்குத் திடன்சொல்லி, உடன்படிக்கைபண்ணிக் கொண்டு தன் வீட்டுக்குப் போனான். பின்பு சீப் ஊரார் வந்து தாவீது இருக்கிற குறிப்பை அறிவிக்க ஷவுல் அங்கே தொடர்ந்து போனான். (க. சாமு. உரு. உச.

ககூசு. தாவீது அதையறிந்து மாகோன் வனத்துக்குப் போனான். ஷவுலும் அவன் சனங்களும் அந்த இடத்துக்குப் போய்த் தாவீதையும் சனங்களையும் வளைக்கிறசமையத்திலே பெலிஸ்தியர் வந்து தன் தேசத்தைச் சருவி நிற்கிறார்க

ளென்று கேள்விப்பட்டு, தாவீதையுஞ் சனங்க ளையும் விட்டுப் பெலிஸ்தியருடனே யுத்தஞ் செய்யத் துரிதமாய்ப் போனன். தாவீதோ ஐன்கெதியின் வனத்துக்குப் போனன். ஷவுல் பெலிஸ்தியரை ஓட்டி மறுபடியும் தாவீதைப் பிடிக்க விரும்பி மூவாயிரஞ் சனங்களுடனே புறப்பட்டுவந்தபொழுது ஷவுல் தன்னந்தனியே ஓர் மலைக்குகைக்குட் போனன். தாவீதும் சனங்களும் அந்தக் குகைக்குள்ளே இருந்தார்கள். (க. சாமு. உச. ரு.

ககூஎ. அதைக்கண்ட சனங்கள் தாவீதைநோக்கி உன்இஷ்டப்படிநடத்த நான்அவனைஉன்கைக்கு ஒப்புவிப்பேன் என்று யெகோவா சொல்லியதினம்இதுவேயென்று சொன்னர்கள். தாவீதோ எழுந்து ஷவுலண்டை போய் அவன் அறியாதவண்ணம் அவன் மேலங்கியின் விழிம்பை அறுத்துக்கொண்டு தன் சனங்களண்டை போய் யெகோவாவினல் அபிஷேகம்பெற்றவனை நாம் ஒன்றுஞ் செய்யலாகாதென்று தன் சனங்களின் முயற்சியைத் தடுத்தான். ஷவுல் கெபியை விட்டுப் புறப்பட்டதின் பிறகு தாவீது தானும் வெளியே புறப்பட்டு ஷவுலைக் கூப்பிட்டு ஷவுலுடைய வஸ்திர விழிம்பு தன் கையிலிருக்கிறதைக் காண்பித்து, நான் உம்முடைய சீவனுக்கு விரோதியல்லவென்பதை இதினல் அறிந்துகொள்ளும். நீரோ என் பிராணனை வாங்கத் தொடருகிறீர். யெகோவா எனக்கும் உமக்கும் நடுத்தீர்ப்பாராக. தீயோரிடத்திற் தீமை பிறக்கும், என் கையோ உம்மைத் தீண்

டவும் மாட்டாது. நீர் இஸ்ரவேலின் இராசா. நான் ஒரு செத்த நாய். ஒரு தெள்ளுப் பூச்சி என்றான். (க. சாமு. உச. கரு.

ககூஅ. ஷவுல் இந்த வாக்கைக் கேட்டு என் மகனே, நான் உனக்குத் தீமை செய்திருக்க, நீ எனக்கு நன்மைசெய்தாய். இதினிமித்தம்யெகோவா உனக்கு நன்மை செய்வார். இஸ்ரவேலின் ராச்சியபாரம் உன் வசமாகும். அப்பொழுது என் சந்தானத்தைச் சேதியேனென்று வாக்குப்பண்ணென்று சொல்லிச் சமாதானமுள்ளவனாய்த் தன் ஊருக்குத் திரும்பினான். பின்பு தாவீது பாரான் வனத்துக்குப் போயிருக்கையில் தன்னுடைய வேலைக்காரர் பத்துப்பேரை அழைத்து நீங்கள் கர்மேலிலுள்ள நாபாலிடத்துக்குப் போய் உமது மகனாகிய தாவீதும் அவன் சனங்களும் பசியினால் வருந்துகிறார்கள். அவர்களுக்குஎதாகிலுங் கொடுக்கவேண்டுமென்றுகேட்பித்தான். அவன் தங்கள் எசமானைவிட்டு அலைந்து திரிகிற சனங்கள் அனேகருண்டு. நான் எனக்கும் என் வேலைகாரருக்கும் என்று வைத்திருக்கிற அப்பத்தையுந் தண்ணீரையுங் கொடுப்பேனா? போங்களென்றான். (க. சாமு. உரு. கக.

ககூகூ. அவர்கள் அதைக் கேட்டுத் திரும்பிப் போய்த் தாவீதுக்கு அறிவிக்கத், தாவீது தன் சனங்களில் நானூறு பேரையுங் கொண்டு நாபாலுக்கு விரோதமாய்ப் புறப்பட்டான். அதை நாபாலின் மனைவியாகிய அபிகயில் அறிந்து அப்பம் திராட்சரசம் முதலிய ரச வஸ்துக்களை

யுங் கொண்டு தாவீதுக்கும் சனங்களுக்கும் எதிர்ப்பட்டு தாவீதை வணங்கி என் கணவன் ஒரு பேய்மகன். அவனுடைய ஒழுக்க வழுக்களைச் சிந்தையில் வைக்க வேண்டாம். உமதடியாள் கொண்டுவந்த காணிக்கைகளை உமது பரிவாரங்களுக்குக் கொடுத்து உமது அடியாளின் குற்றத்தை மன்னியும். யெகோவா உமக்கு நன்மை செய்யும்பொழுது அடியாளையும் நினைத்தருளுமென்றாள். (க. சாமு. உரு. ஙக.

உ௦௦. அதைக் கேட்ட தாவீது மனதிரங்கி அவள் கொண்டுவந்த வெகுமதிகளையும் ஏற்றுக்கொண்டு அவளையும் தன் வீட்டுக்கு அனுப்பினான். அவள் போய் நடந்த சங்கதிகளை நாபாலுக்கு அறிவிக்க, அவன் அதைக் கேட்டவுடனே மரத்துக்கிடந்து பத்தாம் நாளில் மரித்தான். பின்பு தாவீது அவளை விவாக மனைவியாக ஏற்றுக்கொண்டான். அதன்மேல் அகினோவாமையும் விவாகம்பண்ணினான்.

இவன் இப்படியிருக்கையில் திரும்பவும் ஷவுல் மூர்க்கங்கொண்டு தாவீதைப் பிடிக்கிறதற்கு மூவாயிரஞ் சனங்களுடனே வந்து பாளயமிறங்கியிருக்கிறதைத் தாவீது அறிந்து ஷவுலின்பாளயத்துக்கு வந்து ஷவுல் இரதங்கள் நடுவே நித்திரை செய்திருக்கிறதைக் கண்டான். அப்பொழுது அவனோடே கூடவந்த அபீஷாய் இன்று தேவன் உமது சத்துருவை உம்முடைய கையில் ஒப்புவித்தார். நான் அவனை ஈட்டியினாலே குற்றிக் கொல்லுவேன் என்றான்.

(க. சாமு. உசு. அ.

உ௦௧. அதற்குத் தாவீது யெகோவாவினால்அபிஷேகம்பெற்றவன்மேலே கை நீட்டினவன் குற்றப்படாதிருப்பதில்லை. யெகோவாவே அவனை அடிப்பாரென்று சொல்லி அவன் தலைமாட்டிலிருந்த ஈட்டியையும் தண்ணீர்ச் செம்பையும் எடுத்துக்கொண்டு போய், ஒரு மலையின்மேல் ஏறி ஷவுலின் சேனாதிபதியாகிய அப்னேரைக் கூப்பிட்டு நீ உன் இராசனைக் காப்பாற்றாமல் விட்டதென்ன? நீயுஞ் சனங்களும் மரண தண்டனைக்குப் பாத்திரர். இராசாவின் தலைமாட்டிலிருந்த ஈட்டியுந் தண்ணீர்ச் செம்பும் எங்கே? பாரென்றான். அப்பொழுது ஷவுல் எழுந்து என் மகனாகிய தாவீதே, இது உன் குரலாவென்று கேட்க, தாவீது ஆம், ஆண்டவனே, நீர் உமது அடியானை இப்படித் தொடருகிறதென்ன? நான் உமக்கு விரோதமாய்ச் செய்த குற்றமென்ன? ஒருவன் மலைகளிலே கவுதாரியைத் தேடுகிறதுபோல் இராசா ஒரு தெள்ளுப் பூச்சியைத் தேடவந்தாரே. யெகோவாவுக்கு முன்பாக என் இரத்தம் நிலத்திலே சிந்தப்படாதிருப்பதாக என்றான்.

(க. சாமு. உசு. உ௦.

உ௦உ. அப்பொழுது ஷவுல் தாவீதே, திரும்பிவா. நான் மதியீனனாய் நடந்தேன். பெரிய தவறு செய்தேன் என்றான். அதற்குத் தாவீது உமது ஈட்டி இங்கே இருக்கிறது. உமது ஆட்களிலொருவனை அனுப்பிஇதை எடுப்பியும். தேவன் அவனவனுக்கு ஏற்ற பலனை அளிப்பாராக என்றான். ஷவுலோ தேவன் உன்னை ஆ

சீர்வதிக்கக்கடவரென்று சொல்லித் தன் ஊரு
க்குத் திரும்பினன். அதன்பின்பு தாவீது நா
ன் இங்கே இருப்பதிலும் பெலிஸ்தியருடைய
தேசத்துக்குப் போவது சகாயமென்று நினைத்
துக் காத்தின் இராசனாகிய ஆகிஷிடத்திலே போ
ய் இராசாவே நாம் குடியிருக்கிறதற்கு ஒருஊ
ர் தாருமென்று கேட்டு வாங்கி சிக்லாக்கிலே
ஒரு வருஷமும் நாலுமாதமுந் தங்கியிருந்தா
ன். அக்காலத்திலே தாவீதுஞ் சனங்களும் பு
றப்பட்டு கிஷூரியரையும், கெஸ்ரியரையும், அ
மலேக்கியரையுஞ் செயங்கொண்டு அவர்களு
டைய திரவியங்களையுங் கொள்ளையிட்டுக்கொ
ண்டு ஆகிஷிடத்தில் வந்தான்.

(க. சாமு. உஎ. கூ.

உOரு. அக்காலத்திலே பெலிஸ்தியர் இஸ்ர
வேலருடனே யுத்தஞ்செய்யப் புறப்படுகையி
ல் பெலிஸ்தியருடைய ராசனாகிய ஆகிஷ் தா
வீதைத் தனக்கு மெய்காப்பாளனாக வைத்துக்
கொண்டு போய்ப் பாளையமிறங்கக் கண்ட ஷ
வுல் பயந்து, யெகோவாவிடத்தில் உசாவ அவர்
யாதொருஉத்தரவுஅருளிச்செய்யாததினால் அவ
ன் வேஷம் மாறி ஐன்தோரில் வசித்த ஒருபே
ய் வித்தைக்காரியிடத்திற் போய் நீ சாமுவே
லை எழுப்ப வேண்டுமென்றான். சாமுவேலோ
எழும்பி ஷவுலை நோக்கி யெகோவா உம்மை வி
ட்டு விலகிவிட, என்னிடத்திற் கேட்கிறதில் எ
ன்ன பலன்? யெகோவா உமதுஇராச்சியத்தை
ப் பறித்துத் தாவீதுக்குக் கொடுத்துவிட்டார். நா
ளை நீரும் உமது புத்திரரும் என்னோடிருப்பீர்க

ளென்றான். அதினாலே ஷவுல் மகா பயங்கரத்து டனே புறப்பட்டு இஸ்ரவேலருடனேபாளயமி றங்கப்,பெலிஸ்தியரும் அவர்களுக்கெதிரே பா ளயமிறங்கினார்கள். அப்பொழுது பெலிஸ்தியரி ன் அதிபதிகள் தாவீதின்மேல் அவநம்பிக்கை கொண்டு அவனைத் திரும்பத் தன்னூருக்குப் போகும்படி அனுப்பி இஸ்ரவேலருடனே எதி ர்க்கப்போனார்கள். தாவீதும் சனங்களும் பாள யத்தைவிட்டுப் புறப்பட்டு மூன்றும் நாளிலே சிக்லாக்கிலே வந்து அதற்குமுன் அமலேக்கியர் தென்றிசையையுஞ் சிக்லாக்கையுஞ் சருவிச் சி க்லாக்கை அக்கினியினாலே அழித்துத் தாவீதின் மனைவியர் இருவரையும் மற்றும்தேசத்தார் அனை வரோடும் சிறைப்படுத்திக்கொண்டு தேசத்தை யுங்கொள்ளைகொண்டுபோனதையறிந்துதாவீது தன் சனங்களில் இளைப்படைந்த இருநூறுபே ரை நீக்கி மற்ற நானூறு பேருடனே அவர்களைத் தொடர்ந்து போய் ஒருநாள் இரவும்பகலும் யு த்தஞ்செய்து அவர்கள் கொண்டுபோன சகலத் தையும் மீட்டுக்கொண்டு சிறைப்பட்ட யாவ ரையும் அழைத்துக்கொண்டு வந்தான்.

(௧. சாமு. ௩௦. ௨௦.

௨௦௪. முன்பு யுத்தத்துக்குப் போன பெலி ஸ்தியரோடே இஸ்ரவேலர் எதிர்த்து யுத்தஞ்செ ய்து தோற்றோட அனேகர் மடிந்தார்கள். ஷ வுலின் புத்திரனாகிய யோனதானும், அபினதா ப்பும், மல்கீஷுவாவும், கொலையுண்டார்கள். ஷவுலோ அதிக காயப்பட்டு மரண அவஸ்தை யாயிருக்கையில் தன் பட்டயத்தின் நுனியிலே

விழுந்து மடிந்தான். பெலிஸ்தியர் போய் அவர்கள் தேசத்திற் குடியேறினார்கள். மறுநாள் யுத்த களத்துக்கு வந்து ஷவுலுடைய தலையை வெட்டித் தங்கள் தேசத்துக்கு அனுப்பினார்கள். உடலைப் பேத்ஷான் மதிலிலே தூக்கிவிட்டார்கள். ஆயுதங்களை எடுத்து அஷ்தாரோத்தின் ஆலயத்தில் வைத்தார்கள். இதைக் கேள்விப்பட்ட யாபேஷ் ஊரார் வந்து அவர்கள் உடலை எடுத்து தங்களூருக்குக் கொண்டுபோய்த் தகித்தார்கள். (க. சாமு. ௩க.

உoரு. இதற்கு மூன்றாம்நாளில் ஒரு அமலேக்கியன் ஷவுலுடைய முடியையும் அஸ்தகடகத்தையும் எடுத்துக்கொண்டு தாவீதண்டைபோய் ஷவுல் யுத்தத்திலே காயப்பட்டு மரண அவஸ்தையாய்க் கிடக்கையில் ஷவுலுடைய கட்டளைப்படி நான் அவனைக் கொன்றுபோட்டேன், அவனுடைய முடியும் சட்கமும் இங்கேயிருக்கின்றதென்றான். அதைக் கேட்ட தாவீது யெகோவாவினால் அபிஷேகம்பண்ணப்பட்டவரைக் கொன்றதினால் அவருடைய இரத்தப்பழி உன்னிடத்தில் வாங்கப்படுமென்று சொல்லி அவனைக் கொல்லுவித்து ஷவுலுக்கும் யோனதானுக்குமாகப் பிரலாப சங்கீதம் பாடினான். பின்பு தாவீது தேவ கட்டளைப்படி தன் குடும்பத்தையும் சனங்களையும் அவர்கள் குடும்பங்களையும் அழைத்துக்கொண்டு எப்ரோனுக்குப் போய் யூதராலே இராசாபிஷேகம் பெற்றான். அக்காலத்திலே ஷவுலின் சேனாபதியாகிய அப்னேர் ஷவுலின் புத்திரனாகிய இஷ்போஷேத்

தை அழைத்துப்போய் இஸ்ரவேலருக்கும் வேறு சில சாதியாருக்கும் இராசாவாக ஏற்படுத்தினுன்.    (௨. சாமு. ௨. கூ.

௨௦கூ. இப்படியிருக்கையில் தற்செயலாய் இஷ்போஷேத்தின் படைத்தலேவனுகிய அப்னேரும் அவன் பணிவிடைக்காரரும் தாவீதின் படைத்தலேவனுகிய யோவாபும் சனங்களும் போய்ச் சந்தித்த இடத்தில் அப்னேருடைய கேள்விப்படி ஒவ்வொரு கட்சிக்கும் பன்னிரண்டு பன்னிரண்டு பேரைத் தெரிந்து விஞேத யுத்தஞ்செய்யவிட்டார்கள். அப்பொழுது அவர்கள் ஒருவரையொருவர் குற்றி இருபத்துநான்குபேரும் மடிந்தார்கள். அதிஞல் இருதிறத்தாருக்கும் வல்யுத்தமுண்டாக, அப்னேரும் அவன் சனங்களும் தோற்ருேடிஞர்கள். அப்பொழுது யோவாபின் கட்சியிலுள்ள அசாகேல் அப்னேரைத் தொடர்ந்தோடுகையில் அப்னேர் அசாகேலேக் குற்றிக்கொன்ருன்.

(௨. சா. ௨௨. ௬.

௨௦எ. யோவாபும் அபீஷாயும் அப்னேரைத் தொடர்ந்தோட, அப்னேர் ஒரு மலே உச்சியிலே அணிவகுத்து நின்ற பேன்யாமீனருக்குக் கிட்டிப்போனவுடனே திரும்பிநின்று கட்கம் ஓயாமற் சங்கரிக்கவேண்டுமோ? முடிவிலே கசப்பாகுமே, உமது சனங்கள் தங்கள் சகோதரரைத் தொடராமல் நிற்கும்படி சொல்லுமென்று கேட்க, யோவாபு தன் சனங்களேத் தடுத்துக்கொண்டு திரும்பி எப்ரோனுக்குப் போஞன். இப்படியே ஷவுலின் குடும்பத்தாருக்கும் தாவீ

தின் குடும்பத்தாருக்கும் பலமுறையும் யுத்தங்கள் நேரிட்டன. தாவீது வரவரப் பெலமடைந்தான். ஷவுலின் குடும்பமோ வரவரக் குன்றினது. (உ. சாமு. கூ. க.

உoஅ. இந்தத் தாவீதுக்கு அகிநோவாமிடத்தில் அம்நோனும், அபீகயிலிடத்தில் கிலியாப்பும், மாகாளிடத்தில் அப்ஷாலோமும், அகீத்திளிடத்தில் அதோனியாவும், அபீதாளிடத்தில் ஷிபத்தியாவும், எக்லாளிடத்தில் இத்ரியாவும் பிறந்தார்கள். இப்படியிருக்கையில் இஷ்போஷேத்தின் சேனைத்தலைவனாகிய அப்னேர் ஷவுலுடைய வைப்பாட்டியைப் பரிசித்ததினிமித்தம் இஷ்போஷேத்துக் கடிந்துகொள்ள, அப்னேர் கோபங்கொண்டு தாவீதுடனே உடன்படிக்கைபண்ணப் போனபொழுது தாவீது தன் மனைவியாகிய மீகாளை என்னிடத்திற்கு அழைத்துவந்தாலொழிய உன் முகத்தைப் பாரேனென்று சொல்லுவித்து இஷ்போஷேத்துக்கும் அவளைத் தன்னிடம் அனுப்பச் சொல்லியனுப்பினான். (உ. சாமு. கூ. கச.

உoகூ. உடனே இஷ்போஷேத்து அப்னேரை அழைத்துத் தன் சகோதரியாகிய மீகாளைக் கூட்டிவரும்படி அனுப்ப அவன் போய் இஸ்ரவேலருள் முதியோருடனே நீங்கள் தாவீதை உங்களுக்கு இராசாவாக்கினீர்கள். யெகோவாவும் உங்களைத் தாவீதின்வழியாய்ப் பெலிஸ்தியருடைய கையில்நின்றும் மீட்டுக்கொள்வேன் என்று சொல்லியிருக்கிறார் என்றான். அதற்கவர்கள் இணங்கினார்கள். இதை அறிந்த அப்

னேர் தன்னுடனே இருபதுபேரையுங் கூட்டி க்கொண்டு இந்தச் செய்தியைத் தாவீதுக்குச் சொல்ல எப்ரோனுக்குப் போய்த் தாவீதுட னே விருந்துகொண்டாடித் திரும்பிப்போய் இ ஸ்ரவேலரையும் அழைத்துக்கொண்டு உத்தரவு பெற்றுப்போனதை யோவாபு அறிந்து, தாவீத ண்டையிலேபோய் உளவுபார்க்கவந்த அப்னே ரை அனுப்பிவிட்டீரே என்று சொல்லிப் புற ப்பட்டுப் போய், அப்னேரைத் திரும்ப அழை ப்பித்து அவனைக் கொன்றுபோட்டான். இ தை அறிந்து தாவீது மகா துக்கமுள்ளவனாகி அ வனை எடுத்து அடக்கம்பண்ணுவித்துப் பட்டி னிகாத்திருந்தான். (உ. சாமு. ௩. ௩௫.

உ௧0. பின்பு இஷ்போஷேத்தின் தளகர்த்த ராகிய பானாவும், ரேகாப்பும் இராசாவுடைய வீட்டுக்குட் பிரவேசித்து அவன் நித்திரையாயி ருக்கையில் அவனைக் கொன்று அவனுடைய தலையை வெட்டி எடுத்துக்கொண்டு தாவீதண் டை போய் இது செய்தியை அவனுக்கு அறி விக்க, தாவீது அவர்களைப் பிடித்துக் கொல்லு வித்து அவர்கள் கைகளையுங் கால்களையுந் துண் டிப்பித்துத் தூக்குவித்தான். அதைக் கேள்வி ப்பட்டு இஸ்ரவேலர் யாவரும் அவர்களிடத்தி ல் வந்து தங்களுக்கு அவனை இராசாவாக ஏற் படுத்தினார்கள். அதன்மேல் தாவீதுக்கு யெரூ ஷலேமிலே, ஷம்முவா, ஷோபாப், நாதானெ ன்பவர்களும், உரியாவின் மனைவியாகிய பற் சேபாளென்னும் மறுமனைவியிடத்திலே சலோ

மோன் முதலிய வேறு பிள்ளைகளும் பிறந்தார்கள். (உ. சாமு. ச. ரு. கசு.

உகக. இப்படியே தாவீது இஸ்ரவேலருக்கும் இராசாவானுனென்றுபெலிஸ்தியர் கேள்விப்பட்டுஇவனுடனே யுத்தம்பண்ணவந்தெதிர்த்துத் தோற்றேடினார்கள். மறுபடியும் பெலிஸ்தியர் வந்து தேசத்திற் பரந்தபொழுது தேவகட்டளைப்படி அவர்களுக்குப் பின்பக்கமாய்ப் போய் யாவரையுஞ் செயங்கொண்டான். பின்பு இவன் நியாயப்பிரமாணப்பெட்டி கிபியாவூரில் அபினுதாப்பின் வீட்டிலிருக்கிறதென்று கேள்விப்பட்டுச்* சனங்களுடனே எழுந்துபோய் அதை ஒரு புது இரதத்தில் ஏற்றிக்கொண்டு வருகிறபொழுது அந்தப் பெட்டி அசைந்ததென்று கண்டு அதைப் பிடித்த ஊசா தேவமுனிவில், அகப்பட்டு மரித்தான்.† இப்படி நடந்த சங்கதியைக் குறித்துப் பயந்ததினுல் அந்தப்பெட்டியைத் தாவீது தன்வீட்டுக்குக் கொண்டுவராமல் ஓபேத்ஏதோமின்வீட்டில் வைத்தான்.
(உ. சாமு. சு. க0.

உகஉ. மூன்று மாதஞ் சென்றபின் மறுபடியுந் தாவீதுபோய் அந்தப் பெட்டியை எடுத்துக்கொண்டு தன்நகரத்துக்கு வருகையில் அனந்த மகிழ்ச்சிகொண்டு ஆநந்த கூத்தாடினதை அவனுடைய மனைவியாகிய மீகாள் கண்டு அவனுக் கெதிர்கொண்டுவந்து ஒருவீணன் நிருவாணியாய் நிற்பதுபோல இஸ்ரவேலின் இராசா நின்றார். இது எவ்வளவு மகிமைஎன்றாள். அ

* க. சாமு. எ. க. † எண். ச. கரு.

தற்குத் தாவீது நான் என்தேவனுடைய சமுக த்தில் நடித்தேன். இன்னுமதைச்செய்வேன். அதிலுந் தாழுவேன். நீசனுமாவேன். அதினு லே என்தாசரின் கன்னியரால் மதிக்கப்பட்டி ருப்பேனென்ருன். அதினுலே மீகாளுக்கு மர ணபரியந்தம் பிள்ளையில்லை. (உ, சாமு. சு. உரு.

உகரு. பின்பு தாவீது நாதான் என்னும் தீர் க்கதரிசியை நோக்கி நானித்தனை அலங்கார ம ண்டபத்திலிருக்கத் தேவனுடையபெட்டி கூ டாரத்திலிருப்பதோவென்ருன்.* அதற்கு நா தான் யெகோவா உம்முடனேயிருக்கிருரே, நீர் விரும்புகிறதைச் செய்யுமென்ருன். அன்றிரவு யெகோவா நாதானுக்குத் தரிசனையாகி, நீ எ னக்கொருவீடுகெட்டுவாயா? நான் எனக்கொரு வீடு கட்டாதிருக்கிறதென்னவென்று ஒருவரிட த்திற்சொன்னதுண்டா? உன் ஆயுள்நாட்கள் பூ ரணமாகி நீ, மரணமடையுங்காலத்தில் உன்மக ன் எனக்கொரு ஆலயத்தைக்கட்டுவான். நா ன் அவனுக்குப் பிதாவாயிருப்பேன், அவன்எ னக்குப் புத்திரனுவான். அவன் பாவஞ்செய்தா ல் அவனைத் தண்டிப்பேன். அனுக்கிரகத்தை அவனைவிட்டெடேனென்று யெகோவா சொ ன்னுரென்று சொல்லுவித்தார்.

(உ. சாமு. எ. கச.

உகச. அதைக் கேட்ட தாவீது உமது நாம ம் சதாகாலமும் துதிக்கப்படுவதாக, உமது தா சனின் சந்தானம் உமது சமுகத்தில் நிலைத்தி ருப்பதாக. நீரே சத்திய தேவன். உமதுவா

* அப்போ. எ. சகூ.

க்கும் சத்தியம். நீர் உமது அடியானுக்கு இந்த மங்கல வாக்கை அருளினீரென்று துதித்தான். இந்த்த் தாவீது தேவபத்தியுள்ளவனாய்ப் பலபல யுத்தங்களையுஞ் செயங்கொண்டு இஸ்ரவேலர் யாவரையும் பரிபாலித்து நியாயஞ் செய்துவந்தான். யோவாப்பு சேனபதியாகவும், யோஷாபாத் இதிகாசகர்த்தனாகவும், சாதோக்கும்,அகிமெலேக்கும்ஆசாரியர்களாகவும், செராயா எழுத்துக்காரனாகவும் இருந்தார்கள்.

(உ. சாமு. அ. ௰எ.

உகரு. இந்தத் தாவீது ஷவுலின்பௌத்திரனும் யோனத்தானுடைய புத்திரனுமான மெபீவோஷேத்து ஐந்துவயதாயிருக்கையில் யோனத்தான் இறந்த செய்தியை அந்தப் பிள்ளையின் தாதி கேள்விப்பட்டு ஏங்கிப் பிள்ளையை விழவிட்டதினால் அவன் கால் முறிந்து முடவனாயிருக்கிறானென்று கேள்விப்பட்டு அவனை அழைப்பித்து அவனுக்கு அபயங்கொடுத்து* அவனுடையபேரனாகிய ஷவுலின் நிலங்களையும் அவனுக்குக்கொடுத்து அந்த நிலங்களுக்குப் பராபரிப்புக்காரனாகச் சீபாவென்பவனையும் நியமித்து மெபீவோஷேத்து எப்பொழுதும் தன்னுடனே போசனம் பண்ணவுங் கற்பித்தான். (உ. சாமு. கூ. கக.

உகசு. இப்படி இருக்குங் காலத்தில் அம்மோனியரின் இராசனாகிய நாதான் இறந்து போனபொழுது அவனுடைய மகனாகிய அனூனுக்கு ஆறுதல் சொல்லும்படியாக ஆட்களை அனுப்ப, அவன் இவர்களை வேவுகாரர் என்று எண்ணி அவர்களைப் பிடித்து அவர்கள் தா

* க. சாமு. உ0. கச. கடு.

டையில் ஒருபங்கையும் அவர்கள் வஸ்திரங்
களில் அரைவாசியையும் வெட்டுவித்து அனு
ப்பிவிட்டான். தாவீது அதைஅறிந்து அம்மோ
னியருடனே யுத்தஞ் செய்ய யோவாப்பையு
ந்தளங்களையும் அனுப்பிவிட,அம்மோனியர்சூ
ரியாவிலும், மாகாவிலும், இஷதோப்பிலுமுள்
ள யுத்தவீரரில் முப்பத்துமூவாயிரஞ் சனங்களை
க் கூலிப்படையாய்ச் சேர்த்துக்கொண்டுபோய்
யுத்தஞ்செய்தபொழுது யோவாப் தன்தளங்களு
டனே சூரியரை எதிர்த்தான். அவன் சகோதர
னாகிய அபீஷாய் தன்தளங்களுடனே அம்மோ
னியரை எதிர்த்தான். (உ. சாமு. ௧0. ௧௪.

உ௧எ. இப்படியே இருபகுதியாய் யுத்தம் ந
டக்கையில் சூரியரும் அம்மோனியருந் தோ
ற்றோடினார்கள். பின்பு சூரியர் யோர்தானுக்
குக் கிழக்கேயுள்ள சூரியரையுஞ் சேர்த்துக்
கொண்டு திரும்பவும் யுத்தத்துக்கு வருகிறதை
த் தாவீது கேள்விப்பட்டு, இஸ்ரவேலரையுஞ்
சேர்த்துக்கொண்டுபோய் எழுநூறு இரதவீரரை
யும், நாற்பதினாயிரம் குதிரைவீரரையும், அவர்
கள் சேனாபதியாகிய ஆத்சேரையுஞ் சங்கரிக்
க, சூரியர் யாவரும் முறிந்தோடினார்கள். மற்
றும் இராசாக்கள் யாவரும் தாவீதுடனே சமா
தானப்பட்டார்கள். (உ. சாமு. ௧0. ௧௯.

உ௧அ. மறுவருஷம் ரப்பாவுக்கு விரோதமா
ய் யுத்தம் நடக்கையில் தாவீது யோவாப்பையு
ம் சனங்களையும் யுத்தத்துக்கனுப்பித் தான் யெ
ருஷலேமிலிருந்தான். அப்பொழுதுதாவீது ஊ
ரியாவின் மனைவியாகிய பத்ஷேபாளைக் கண்

டு விரும்பி ஊரியாவை யுத்தத்திலே தனிப் படவிட்டு, அவனை மரணத்துக் கொப்புக்கொ டுத்துவிடென்று தன்சேனைபதியாகிய யோவாப் புக்கு ஒரு காகிதமெழுதி ஊரியாவின் கையி லே கொடுத்தனுப்பினான். யோவாப்போ தா வீது சொன்னபடி செய்ததினாலே ஊரியாமரி த்தான். யோவாப் நடந்தசெய்தியைச் சொ ல்லும்படி தூதனை அனுப்ப அவன் வந்துசொன் னான். அதைத் தாவீது கேட்டு நீபோய், கட்க ம் ஒருவரைப்போலப் பலரையும் பட்சிக்கின்ற து. நீ தைரியவீனப்படாமல்நின்று நகரத்தை வசப்படுத்தென்றுசொல்லி அனுப்பினான். பி ன்பு பத்ஷேபாளைத் தன்வீட்டுக்கு அழைப்பி த்துத் தனக்கு மனைவியாக்கினான்.

(௨ சாமு. ௧௧. ௨எ.

௨௧௯. அப்பொழுது தேவஏவுதலால் நாதா ன் என்னும் தீர்க்கதரிசி தாவீதண்டைவந்து இராசாவே, அனேக ஆடுமாடுகளையுடைய ஒ ரு ஐசுவரியவான் ஒரு தரித்திரன் அருமையா ய் வளர்த்த ஒரே ஆட்டுக்குட்டியைப் பிடி த்து அடித்து விருந்து கொடுத்தான் என்றான்.

அதற்குத் தாவீது அந்த ஐசுவரியவான் வ றியவனிடத்தில் அபகரித்ததில் நாலு மடங்கு இறுக்கவேண்டும். அவனுங் கொலையுண்ண வேண்டும் என்றான். அப்பொழுது நாதான் நீர் ஊரியாவைக் கொல்லுவித்து அவன் மனை வியை உமக்கு மனைவியாக்கினதின் நிமித்த ம் யுத்தம் உம்மைவிட்டு நீங்குவதில்லை. உ மக்குரிய அருந்திரவியமான மனைவியர் உமது

அயலானுக்கு வசப்படுவார்கள். * உமக்கு அவளிடத்திற் பிறந்தபிள்ளையுஞ் சாகுமென்றான்.
(உ. சாமு. கஉ. கச

உஉ௦. பின்பு பத்ஷேபாளுடைய பிள்ளை கடூரமான நோய்கொண்டு விழுந்ததினால் தாவீது அதிதுயரப்பட்டுப் பட்டினியாயிருந்து பிள்ளையினிமித்தம் யெகோவாவைப் பிரார்த்தித்துக்கொண்டே இருந்தான். ஏழாம்நாளிற் பிள்ளையும் மரணமடைந்தது. தாவீது அதைஅறிந்து பிள்ளை இனிஎன்னிடத்துக்கு வராது. நானே அவனிடத்திற்குப் போவேனென்று சொல்லித் தேவச் செயலுக்கமைந்து புசித்துத் திருத்தியாயிருந்தான். பின்புபத்ஷேபாளிடத்திலே சலோமோன் என்னும் இராசாபிறந்தான். இவனுக்கு யெதிதீயா (தேவநேசன்) என்று பேரிட்டான். (உ. சாமு. கஉ. உரு.

உஉக. இரண்டுவருஷம் சென்றபின், அப்ஷாலோம் அம்னோனை விருந்துக்கழைத்து அவனைக் கொல்லுவித்து, தன் தாயின் பிதாவும் கிசூரின் இராசாவுமாகிய தல்மாயிடத்தில் ஓடிப்போய் அடைக்கலமாயிருந்தான். அதினிமித்தந் தாவீதுராசா மகா சஞ்சலமுள்ளவனாய் வருந்துகையில் யோவாப்பு ஒரு ஸ்திரீயை அழைப்பித்து நீ இராசாவிடத்திலேபோய் இராசாவே, நானொருவிதவை. எனக்கு இரண்டு புத்திரருண்டு. அவர்களிலொருவன் மற்றவனைக் கொன்றுபோட்டான். அதினிமித்தம் என்குடும்பத்தாரனைவரும் அவனையுங்கொன்று பழி

* ௧. சாமு. கசு. உஉ.

வாங்கும்படி முயலுகிறார்கள், என்னசெய்வே னென்றாள். அதற்கு இராசா உன்னுடனேவா க்குவாதஞ் செய்கிறவனை என்னிடத்துக்குக் கொண்டுவாவென்றுசொல்ல, அவள் பழிவாங் குகிறவர்கள் இப்படியே பிறரையுங் கொன்று போடாதிருக்கமன்றாடுகிறேனென்றாள். அதை இராசா அறிந்து நீ யோவாப்புடைய யோசனை யைச் சார்ந்து நிற்கிறாயல்லவா வென்று கேட் டான். அவள் ஆம் என்றாள். அப்பொழுது யோவாப்பை அழைப்பித்து அப்ஷாலோமை அழைத்து வாவென்று கட்டளையிட்டான்.

(உ. சாமு. கச. உக.

உஉஉ. யோவாப்புபோய் அப்ஷாலோமைக் கூட்டிக்கொண்டுவர அப்ஷாலோம் இராசாவி ன் சமுகத்தைச் சேராமல் தன்வீட்டிலே இர ண்டுவருஷமட்டாக இருந்தான். பின்பு அப் ஷாலோம் யோவாப்பை அழைப்பித்து இராசா விடத்திலனுப்பி உத்தரவுபெற்று இராசாவுடை ய சமுகத்திலே போய் அபயம்பெற்று வாழ்ந்தி ருந்தான். இந்த அப்ஷாலோம் இருநூறு சனங் கள் மட்டுக்குச் சேர்த்துக்கொண்டு எப்ரோனுக் குப்போய் அப்ஷாலோம் இராசாதிகாரம் பெ ற்றிருக்கிறானென்று பிரசித்தப்படுத்துங்களென் றுசொல்லிப் பிரசித்தப்படுத்துவித்தான். * அ தைத் தாவீது கேள்விப்பட்டுத் தன் பணிவிடை க்காரருடனே நாம் அப்ஷாலோமுக்குத் தப்பி ஓடிவிடுவோமென்று முயற்சி பண்ணிக்கொண் டு தன் வைப்பாட்டிகள் பத்துப்பேரைத் தன்வீ

* உ. சாமு. கஉ. க0.

ட்டுக்குக் காவலாகவைத்துத் தன்சனங்களுடன் வனவாசியானான். (உ. சாமு. ௧௫. ௧௭.

உ௨௩. இப்படித் தாவீது புறப்பட்டுப்போயிருக்கையில் ஷிமியிஎன்னுமொருவன் தாவீதுக்கு முன்னேவந்து இரத்தப்பிரியனே, பேய்மகனே, போ, போ! ஷவுல்வமிசத்தின் இரத்தப்பழி உன்மேல் வந்துவிட்டது. நீ ஆபத்தில் அகப்பட்டாயென்றான். அப்பொழுது அபீஷாய் இந்தச் செத்த நாய் என்ஆண்டவனைத் தூஷணிப்பதென்ன? நான் அவன் தலையைக்கொண்டுவருகிறேனென்றான். அதற்குத் தாவீது யெகோவாவுக்குச் சித்தமில்லாதிருந்தால் இவன் என்னைத் தூஷணிப்பானோ? அவன்தூஷணிக்கட்டும். யெகோவா என் கண்ணீரைப் பார்த்து எனக்குச் சகாயஞ்செய்வாரென்றான். பின்பு அப்ஷாலோம் யெருஷலேமுக்குவந்து தன் மந்திரியாகிய அகிதோபேலுடைய ஆலோசனைப்படி தன்பிதாவின் வைப்பாட்டிகளைப் பரிசித்தான்*. (உ. சாமு. ௧௬. ௨௨.

உ௨௪. பின்பு தாவீது இளைப்படைந்திருக்கிறானென்று அறிந்து அகிதோபேல் தான் பன்னீராயிரஞ் சனங்களுடனே போய்த் தாவீதைச் சங்கரித்து, அவனுடனேபோன சனங்களைத் திருப்பிக்கொண்டு வருகிறேனென்று சொல்ல, அப்ஷாலோம் ஊஷாயை அழைத்து அகிதோபேலுடைய ஆலோசனை நல்லதோவென்று விசாரித்தான். அவன், உம்முடையபிதா மகா வீரன். அவர்கையிலகப்பட்டு உமது சனங்களிற் சிலர்

* உ. சாமு. ௧௨. ௧௧. ௧௨.

மரித்தாலும் யாவருக்குள்ளும் அப்ஷாலோமி ன் சனங்கள் சங்காரமானார்களென்று பேருண் டாகும். அதினால் எந்தத் தைரியவானும் இள க்கரித்துப்போவான். ஆகையால் நாமெல்லா ரும் ஒன்றித்துப்போவோம். நீரே யுத்தத்துக்கு ப் புறப்படுமென்றான். அது அப்ஷாலோமு க்கு நல்லதாய்க்கண்டது. ஆகிலும் அதுவே அ ப்ஷாலோமைச் சேதிக்கத் தேவனுடைய சங் கற்பமாயிருந்தது. (உ. சாமு. கஎ. கச.

உஉரு. இந்த ஊஷாய் தாவீதின் சகாயரான சாதோக்கிடத்திலும் அப்யாதாரிடத்திலும் நட ந்த ஆலோசனை முற்றையுஞ் சொல்லி இராசா வுஞ் சனங்களும் அந்த இடத்தைவிட்டு அப்பா ற்படவேண்டுமென்று அறிவித்தான். அதைக் கேட்டுத் தாவீதும் சனங்களும்யோர்தானைக்கட ந்து அப்பாற்பட்டார்கள். அகீதோபேலோ தா ன்சொன்ன ஆலோசனையை அப்ஷாலோம் அ ங்கிகரியாததினிமித்தம் வெறுப்படைந்து நான் றுகொண்டு செத்தான். அப்ஷாலோமோ யோ வாப்புடைய இடத்துக்குஅமாசாவை நியமித்து க்கொண்டு தாவீதுடனே யுத்தத்துக்குப் புறப் பட்டுப்போய்க் கிலியாத்திலே பாளயமிறங்கி னான். (உ. சாமு. கஎ. உசு.

உஉசு. தாவீதும் சனங்களை மூன்று பவிஞ் சாக்கி ஒன்றை யோவாப்பின்கையிலும், ஒன் றை அபீஷாய்கையிலும், ஒன்றை இத்தாயி கை யிலும் ஒப்புவித்து யுத்தத்துக்குஅனுப்புகையில் அப்ஷாலோமைத் தயவாய் நடத்தும்படி சொ

ல்லி அனுப்பினான். இவர்கள் போய் எதிர்த்து யுத்தம்பண்ண, அப்ஷாலோமுடைய சனங்களில் இருபதினாயிரம் பேர் மாண்டார்கள். அப்ஷாலோம் கோவேறுகழுதைமேலேறிப்போகையில் ஓர்மரக்கொம்பின் கவரிலே தலை மாட்டிக்கொள்ள, கழுதை அவனைவிட்டு ஓடிப்போய்விட்டது. அவனே அதிற்தொங்கினான். அதை யோவாப்புகேள்விப்பட்டுஒடிப்போய்அப்ஷாலோமைக்குற்றிக்கொன்று எக்காளமூதினான். அதினாலே தாவீதின் சனங்கள் இஸ்ரவேலரைத் தொடராமல் நின்றுவிட்டார்கள். இஸ்ரவேலரோ தங்கள் பாளயத்துக்குப்போனார்கள்.

(௨. சாமு. ௧அ. க்கூ.

௨௨எ. அப்பொழுது கூஷியென்பவனும் அகிமாத்ஸ்என்பவனும் ஓடிப்போய் நடந்தசங்கதியைத் தாவீதுக்கறிவிக்க, தாவீது அப்ஷாலோமின் நிமித்தம் துக்கித்துப் புலம்பிக்கொண்டிருந்தான். அதை யோவாப்பு அறிந்து தாவீதண்டைபோய், இராசாவே, நீர் உமதுசத்துருக்களை நேசித்து, மித்துருக்களைப் பகைக்கிறீரென்று யாவருக்கும் விளங்கப்பண்ணுவது புத்தியல்ல. இப்பொழுது நீர் புறப்பட்டு யாவருக்கும் சமாதானஞ் சொல்லிச் சந்தோஷமாய் இருமென்று சொல்ல, அவனும் அப்படியேசெய்து சமாதானமானான். இவைகளெல்லாம் தாவீது இராசா ஊரியாவுக்கும் அவன்மனைவிக்கும் செய்த முறைகேடான துரோகத்தின் நிமித்தம் தெய்வச்செயலாய்ச்சம்பவித்தது. பின்பு யூதச்சனங்கள்

சகலரும் கூடிப்போய்த் தாவீதையும் சனங்க ளையும் அழைத்துக்கொண்டு திரும்பிவருகையி ல் முன்னே தாவீதை இகழ்ந்து கல்லெறிந்த ஷி மியி போய் அவனுடைய பாதத்திலே விழுந்து வணங்கி என் ஆண்டவனே, நான் பாவஞ்செய் தேன். என்பாவதோஷத்தை மன்னித்தருளு மென்று வேண்டிக்கொண்டான். இராசாவும் அவனுக்கு அபையங்கொடுத்தான்.

(உ. சாமு. சக. உரு.

உஉஅ. பின்பு அப்ஷாலோமைச் சார்ந்த சன ங்களுக்குள்ளிருந்த ஷேபா அந்தச்சனங்களைத் தன்வசமாகச் சேர்த்திருக்கிறதைத் தாவீது அறி ந்து, அவர்களைத் தன்பக்கமாய் அழைத்துவரும் படி அமாசாவை அனுப்பினான். அவன் வரத் தாமதித்ததினால் தாவீது அபீஷாயை அழைத்து யோவாப்பின் சகோதரனாகிய அப்ஷாலோமை ப் பார்க்க ஷேபா அதிக கொடுமை செய்வான். ஆகையால் அவன் அரணுள்ள நகரங்களிலே போய்ப் புகுமுன் அவனைப்பிடித்துக் கொல் லென்று அனுப்பினான். அதனால் அபீஷாயும் யோவாப்பும் தளங்களுடனே ஷேபாவைத் தே டிப் போனார்கள். போகையில் வழியிலே எ திர்ப்பட்ட அமாசாவைத் தந்தரமாகக் கொ ன்று, ஷேபாவைத் தொடர்ந்து போனார்கள். ஷேபாவோ பயந்து ஆபேல் நகரத்திலே பு குந்து ஒளித்திருந்தான். இவர்கள் போய் நக ரத்தை வளைந்து மதிலை இடிக்கிறதைச் சன ங்கள் அறிந்து ஷேபாவுடையதலையை வெட் டி யோவாப்புக்குக் கொடுத்தார்கள். அவன் வா

ங்கிக்கொண்டு திரும்பினான். (உ. சாமு. ௨0 ௨௨.

௨௨௯. பின்பு பெலிஸ்தியருக்கும் இஸ்ரவேலருக்கும் நடந்த யுத்தத்திலே முந்நூறுஷேக்கல் நிறைகொண்ட ஒரு ஈட்டியைப்பிடித்து தாவீதைக் கொல்லவந்த ஒருவனை அபீஷாய்கொன்று வெற்றியடைந்தான். மறுபடியும் நடந்தயுத்தத்திலே சீபெக்காய் என்பவன் ஷாப்பென்னும் பெலிஸ்தியனைக்கொன்று செயங்கொண்டான். இப்படியே தாவீது பலமுறையும் நடந்தயுத்தத்திலே சகலரையும் செயங்கொண்டு தேவனை ஸ்தோத்திரித்து அனேக சங்கீதங்களையும்பாடித் தேவனுக்கு ஆலயங்கட்டும்படி பல தளபாடங்களையுஞ் சேர்த்து வைத்திருந்தான்*.

(உ. சாமு. உக. கரு. உஉ. அதி.

௨௩0. பின்பு இஸ்ரவேலரையும் யூதரையும் கணக்கிடும்படி தாவீது கட்டளையிட்டபொழுது, அவர்கள்போய் ஒன்பதுமாதம்மட்டாய்த் தொகையிட்டு ஆயுததாரிகளாய் இருக்கிறவர்கள் இஸ்ரவேலருக்குள் எட்டு இலட்ச சனமென்றும், யூதருக்குள் ஐந்து இலட்ச சனமென்றும் கணக்கிட்டு ஒப்புவித்தார்கள். அதினிமித்தம் யெகோவா கோபமடைந்து உன்தேசத்தில் ஏழு வருஷ பஞ்சம்வருவதோ? மூன்றுநாள் பெருவாரிக்காய்ச்சல் வருவதோ? மூன்றுமாதம் உன் சத்துருக்கள் உன்னைத்தொடர அவர்கள் முன்னின்று ஓடிப்போவதோ? எது உனக்கு இலகு? ஒன்றைத் தெரிந்துகொள்ளென்று காத்தென்னும் தீர்க்கதரிசியைக்கொண்டு சொல்லுவித்

* அப்போஸ்தலர் நடபடி. எ. சகூ.

தார். அதற்குத் தாவீது யெகோவா தயாளர். அவர்கையிலகப்படுவதே நமக்குச் சகாயமென்றான். அதினாலே தேசம்முழுவதும் பெருவாரிக்காய்ச்சலுண்டாயிற்று. அதிலே எழுபதினாயிரம்பேர் இறந்தார்கள். அப்பொழுது தாவீது ஆண்டவரே, நானே பாவஞ்செய்தேன். இந்த ஆடுகள் என்ன பாவஞ்செய்தன? உமதுகரம் எனக்கும் என்பிதாவின் வீட்டுக்கும் விரோதமாய்வரட்டுமென்றான். அப்பொழுது தீர்க்கதரிசி,நீயெகோவாவுக்கு ஒருவேதிகை உண்டாக்கிப் பலியிடு என்றான். தாவீது அப்படியேசெய்ய, யெகோவா அவனுக்கிரங்கி அந்தவாதையை விலக்கிவிட்டார். (உ. சாமு. உச. உரு.

உருக. தாவீது வயோவிருத்தனானபொழுது அவன் மகனாகிய அதொனியா யோவாப்போடும் அப்யாதாரோடும் கூடிக்கொண்டு இராச்சிய அதிகாரத்தைத் தனக்காக்கிக்கொள்ளும்பொருட்டாய்த் தாவீதின் புத்திரருக்குள் சலோமோனைத்தவிர மற்றப்புத்திரரையும் யூதவமிசத்தார் அனைவரையும் அழைத்து விருந்திட்டான். அப்பொழுது பத்ஷேபாள் நாதான்என்னும் தீர்க்கதரிசியின் யோசனைப்படி தாவீதிடத்திலே போய் இராசாவே, உமதுபுத்திரனாகிய சலோமோன் உமக்குப் பின்பு அரசாளுவானென்று வாக்குப்பண்ணியிருந்தீரே. இப்பொழுது அதொனியா யோவாப்பையும்,அப்யாதாரையும் மற்றுமனேகரையும் அழைத்து விருந்திட்டு இராச்சியபரிபாலனத்துக்கு அடியிடுகிறானென்றாள். அதற்குத் தாவீது உன்மகனாகிய சலோமோனே அரசா

ருவானென்று எனக்கு நேரிட்ட சகலவிதஆ பத்துக்களினின்று மீட்டுக்கொண்ட யெகோ வாவின் நித்தியதத்துவத்தைக்கொண்டு சொல் லுகிறேனென்றுசொல்லி, ஆசாரியனுகிய சா தோக்கையும், தீர்க்கதரிசியாகிய நாதானையும், யோய்தாவின் புத்திரனுகிய பினயாவையும் அழைப்பித்து சலோமோனுக்கு இராசாபிஷேக ஞ்செய்வித்தான். (க. இராசா. க. ருகூ.

உருஉ. இந்தச்செய்தியை அதோனியாவும் அவனைச்சார்ந்த சனங்களும் கேள்விப்பட்டுச் சந்தேகப்பட்டிருக்கையில் வந்த அப்யாதாரின் மகனுகிய யோனதானை உள்ளேஅழைப்பித்து நடந்த சங்கதியைத் தெளிவாயறிந்து பயந்தெளிந்து பிரிந்துபோய்விட்டார்கள். அதோனியாவோ சலோமோனுக்குப்பயந்து ஆலயத்துக்குப்போய் அதின் வேதிகையின் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு சலோமோன் தன்னைப் பிராணசேதம் பண்ணமாட்டேனென்று உறுதிவாக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டனுப்பினுன். அதற்குச் சலோமோன் அதோனியா யோக்கியனுய் நடவாதிருந்தால் கொல்லப்படுவானென்று கற்பித்து அவனை அழைப்பித்து வீட்டுக்கு அனுப்பினுன். (க. இரா. க. ருகூ.

உருரு. பின்பு தாவீது தனக்கு மரணஞ் சமீபித்துவிட்டதென்றறிந்து சலோமோனை அழைத்து நீ யெகோவாவின் காவலைக்காத்து அவர் அருளியவழியிலே நடந்து அவருடைய பிரமாணங்களைப் பேணிக்கொள். யெகோவா உன்

பிள்ளைகள் உண்மையுள்ளவர்களாய்த் தங்கள் பூரண இருதயத்தோடும், பூரண ஆத்துமத்தோடு ம் எனக்கு முன் நடப்பார்களாகில், இஸ்ரவே லிலே சிங்காசனத்தில் வீற்றிருப்பவன் ஒழிந் துபோகானென்று*என்க்குச்சொன்ன வாக்குத் த்தத்தை நிலைப்படுத்துவாரென்று சொல்லி ம ரணமடைந்தான். இந்தத் தாவீது எப்ரோனில் ஏழுவருஷமும்,யெருஷலேமில் முப்பத்துமூன் றுவருஷமும் ஆக சo. வருஷம் அரசாண்டா ன். (க. இராசாக்கள். உ. கக.

உகூச. பின்பு அகீத்தென்பவளின் புத்திரனு கிய அதொனியா பத்ஷேபாளிடத்திலே வந்து சூனேமூராளாகிய அபீஷாக்கை என்க்கு வி வாகஞ்செய்துதரும்படி சலோமோனிடத்திலே கேட்கவேணுமென்று வருந்திக்கேட்டான்: அ தினிமித்தம் பத்ஷேபாள் சலோமோனிடத்தி ற்போய்க்கேட்டாள். அவனுடையகேள்வி நீ தி தவறியிருந்தபடியால் சலோமோன் அதொ னியாவைக் கொல்லுவித்தான். பின்பு சலோ மோன் ஆசாரியனுகிய அப்யாதாரை அழைப்பி த்து நீ மரணத்துக்குப் பாத்திரனுய் இருக்கிறு ய். ஆகிலும் நீ என்பிதாவுக்கு முன்னே யெ கோவாவின் பெட்டியைச்சுமந்தவனும், அவ் ரோடே சேர்ந்துநின்று வருத்தப்பட்டவனுமா ய் இருப்பதினுல் உன்னை விடுகிறேன். நீ அ னதோத்துக்குப் போய்விடு என்றுசொல்லி அ னுப்பினுன். இப்பொழுதே தேவன் க: ம். சா மூவேல் உ. ம். அதிகாரம். உஎ ம். வசனத்திற்

---

* உ. சாமு. எ. கக.அகூ. சங்கீதம். அகூ. ௩௩. ௩ச.

சொல்லியபடி ஏலியுடைய வமிசத்தின் ஆசாரிய ஊழியம் நின்றுபோயிற்று.

(க. இராசாக்கள். உ. உஎ.

உ௲ரு. பின்பு சலோமோன் தாவீதின்சேனாபதியாகிய யோவாப்பையுங் கொல்லுவித்துப் பினாயாவைத் தளகர்த்தனாக்கினான். இப்படியே இவன் தனக்கு உட் சத்துருவாயிருந்த சகலரையுங்கொல்லுவித்துத் தன் இராச்சியத்தை நிலைப்படுத்தித் தாவீது சொன்ன கடைசிவாக்கின்படி யெகோவாவிலே அதிக பத்தியுள்ளவனாய் நடந்துவருகையில், யெகோவா அவனுக்குத் தரிசனையாகி உனக்குவேண்டிய வரமென்னவென்று கேட்டார். அதற்குச் சலோமோன் உமது சனங்களை நியாயமாய் நடத்தத்தக்க ஞானத்தைத் தரவேண்டுமென்றான். அதினால் யெகோவா மகிழ்ந்து, அவனுக்கு ஞானத்தையும், செல்வத்தையும், மேன்மையையுங் கொடுத்து நீ தாவீதைப்போலப் பத்தனாய் நடந்தால் உனது ஆயுள் நாட்களும் நீடித்திருக்குமென்று வாக்குப்பண்ணினார்.

(க. இராசாக்கள். ௩. கச.

உ௲சு. இவன் அரசாளுங்காலத்தில் ஒருவீட்டிலே குடியிருந்த இரண்டு ஸ்திரீகளுள் ஒருத்தி மூன்றுநாளுக்கு முன்னும், மற்றவள் மூன்றுநாளிற்பின்பும் புத்திரோற்பத்தி அடைந்தார்கள். அவர்களில் ஒருத்தி நித்திரையிலே தன்பிள்ளையின்மேற் புரண்டதினால் அது நசுங்குண்டு செத்துப்போயிற்று. அதைக்கண்டமாத்திரம் அவள்எழுந்து அந்தச் செத்தபிள்ளையை எடு

த்துக்கொண்டுபோய் மற்றவளுடைய படுக்கை யில்வைத்து அவளுடையபிள்ளையை எடுத்துப் போய்த் தன்னோடே அணைத்துப் படுத்துக்கொ ண்டாள். மறுநாட்காலமே மற்ற ஸ்திரீ விழி த்தெழுந்து அவள்பிள்ளை தன்னருகே செத்துக் கிடக்கவும், தன்பிள்ளை அவள்கையில் உயிரோ டிருக்கவுங்கண்டு, நீ உன்பிரேதத்தை எடுத்துக் கொண்டு என்பிள்ளையைத் தாவென்றுகேட்டா ள். அதற்கு அவள் செத்தது தான் உன்பிள்ளை; உயிரோடே என்கையிலிருக்கிறதே என்பிள் ளையென்றாள். இப்படிஇருவரும் விவாதஞ்செ ய்துகொண்டு சலோமோனிடம் தீர்ப்புக்குப் போக, அவன் இவ்விருவரையும் விசாரித்தும் உண்மையைக் கண்டுபிடிக்கக் கூடாமையால் அதின்நிச்சயத்தை அறியவருமென்று நினைத்து, உயிரோடிருக்கும் பிள்ளையைத் தம்மிடத்திலே கொண்டுவரும்படிசெய்து தன்பணிவிடைக்கா ரனுடனே நீ அதை இரண்டாகத் துண்டித்து மாதாமாரிருவருக்கும்பப்பாதியாகக்கொடுஎன் றுசொன்னான். (௧. இராசா. ௩. ௨௫.

௨௩௭. அதை அந்தப்பிள்ளையின் மாதா கேட் டமாத்திரத்திலே மனதுருகி ஆண்டவனே, இ ந்தப் பிள்ளையைத் துண்டிக்கவேண்டாம். இ தை அவளுக்கே கொடுத்துவிடுமென்றாள். மற் றவளோ இராசாவின் தீர்ப்பின்படி ஆகட்டு மென்றாள். அதை இராசாக் கண்டு பிள்ளையை க்கொல்ல இணங்கினவள் அந்தப்பிள்ளைக்கு மாதாவல்லவென்றும், இணங்காதவளே அதி ன்மாதாவென்றும், அறிந்து பிள்ளைக்கு உருகி

ணமாதாவுக்கே அந்தப் பிள்ளையைக் கொடுத்தான். (௧. இராசாக்கள். ௩. உ௭.

உகூஅ. இவனுடைய காலத்தில் யூதா வமிசத்தாரும், இஸ்ரவேல் வமிசத்தாரும் மகாசமாதான முள்ளவர்களும் வாழ்வுள்ளவர்களுமாயிருந்தார்கள். பெலிஸ்தியரையும் இவனேஅரசாண்டான். நாற்திசையிலுமுள்ள இராசாக்களும் சமாதானமுள்ளவர்களாயிருந்தார்கள். இந்தச் சலோமோனுக்கு மதில் சூழ்ந்த நகரங்கள் அறுபதும், நாலாயிரங் குதிரைலாயங்களும் நாற்பதினாயிரங் குதிரைகளும், ஆயிரத்துநானூறு இரதங்களும், பன்னீராயிரங் குதிரைக்காரருமுண்டு. இவனுக்கும் இவனுடைய சேனைகளுக்கும் வேண்டியவைகளை மாதவீதமாய் நியமிக்கப்பட்ட அதிகாரிகளே கொடுத்துவந்தார்கள். இவன் மூவாயிரம் நீதிமொழிகளையும், ஆயிரத்தைந்து உன்னத கீதங்களையுஞ் சொன்னான். (௧. இராசா. ௪. கூஉ.)

உகூகூ. இதுவன்றி, சலோமோன்இராசாபிஷேகம்பெற்றானென்று தீருவின் இராசாவாகிய ஈராம் கேள்விப்பட்டு சலோமோனுக்குச் சந்தோஷஞ்சொல்ல ஆட்களையனுப்பினான். அப்பொழுது சலோமோன் அவர்களுடனே என் பிதா யெகோவாவுக்கு ஒரு ஆலயத்தைக் கட்ட விரும்பியும், அவருக்கு யுத்தங்கள்மிகுத்திருந்ததினால் அதைக்கட்டி முடிக்கக்கூடாமையாயிருந்தது. இப்பொழுதோ யெகோவா எனக்குச்சமாதானத்தைக்கட்டளையிட்டபடியால் நான் அவருக்கு ஒருஆலயங்கட்டவிரும்புகிறேன். ஆகை

யால் நீர்நானனுப்பும் ஆட்களுடனே உமது ஆ
ட்களையும்அனுப்பி, எரஸ்விருட்சங்களைத் தறிப்
பித்து அனுப்பும்படி கேட்கிறேனென்று சொல்
லி அனுப்பினுன். அதற்கு ஈராம் சம்மதித்து இ
லிபானேன்மலைக்கு ஆட்களை அனுப்பி எரஸ்வி
ருட்சங்களையும், தேவதாருவிருட்சங்களையும்,
தறிப்பித்துத் தெப்பங்களாய்த் தொடுத்து, மத்தித்
தரேனியாக் கடலிலே தீறுநகரத்துறையிலிறக்
கி யொப்பாதுறையிற் சேரும்படி அனுப்பினு
ன். அவைகளைக் கொண்டே தேவாலயத்தைக்
கட்டினுன்.(க. இராசா.ரு.கூ.) அந்தத் தேவாலய
ம் சீயோன் மலையிலுள்ளதும், ஆபிரகாம் தன் ம
கனைப் பலிசெலுத்தக் கொண்டுபோனதுமான
மோரியமலையில்* அறுபதுமுழ நீளமும், இருப
துமுழஅகலமும்,முப்பதுமுழஉயரமுங்கொண்
டதாகக் கட்டப்பட்டது. அந்த ஆலயத்தின் மூ
லமண்டபம்இருபதுமுழநீளம். அகலமும்(உ0.)
அது முழுதும் பொற்றகடிடப்பட்டிருந்தது.
அதிலே பொற்றகட்டால் மூடப்பட்ட உடன்
படிக்கையின் பெட்டியும் அந்தப்பெட்டிக்குள்
ளே பத்துக்கற்பனைகள் எழுதப்பட்ட இரண்டு
கற்பலகைகளுமிருந்தன. அந்தப் பெட்டியின்
மேல் இரண்டரைமுழ நீளமுள்ளதாய்ப்பொன்
னினுலே செய்யப்பட்ட கிருபாசயமிருந்தது.
அதினிரண்டோரத்திலும் இரண்டு கெருபிக
ளிருந்தன. அதினருகே பொன்னினுலே செ
ய்யப்பட்ட தூபக்கலசமும், மன்னுவையுடை
ய பொற்பாத்திரமும், ஆரோனுடைய தளிர்த்
தகோலும் இருந்தன. இதிலே வருஷமொரு

---

* ஆதியாக. உஉ. உ.

முறை மகா ஆசாரியன் பிரவேசித்து, தானும் சபையும் செய்த பாவங்களில் அறிவுக்கெட்டா மையாயிருந்த பாவங்களுக்காக இரத்தத்தினா லே பிராயச்சித்தம் பண்ணுவான்.

(௧. இராசா. ௬. ௨. நாளா. ௬.

௨௪0. அதற்கு முற்புறத்தில் நாற்பதுமுழ நீள ங்கொண்ட மண்டபத்தையுங் கட்டினான். அ தன் தென்புறத்திலே கிளைவிளக்கும் வடபுறத் திற் சமுகத்தப்பபீடமும், அவைகளின் நடுவே தூபபீடமும் வைக்கப்பட்டன. அதிலேதா ன் தினந் தினம் ஆசாரியர்போய் ஆராதனைசெ ய்துவருவார்கள். இந்தஆலயத்தைச் சுற்றி மூன் றுபுறத்திலும் ஐவைந்துமுழ உயரமுள்ள அறை களும் சுற்றுப்பிரகாரமும் அதைச்சூழ லேவியர் வீதியும், அதைச்சூழச் சனவீதியும், அதற்குக் கி ழக்கே ஸ்திரீ சபாமண்டபமும், அதைச்சூழச்சா தாரண சனத்தெருவும், இவைகளெல்லாவற்றை யுஞ்சூழ ஒருமதிலும் செய்யப்பட்டன. (௧. இ. ௬.

௨௪௧. இவைகளெல்லாம் அனேக விசித்திர வேலையாய்ச் செய்யப்பட்டன. இந்தத் தே வாலயம் முற்றையும் யெகோவா தாவீதுக்கு வரைந்து காட்டினவிதமாய் ஏழு வருஷத்தி ற்கட்டி முடித்தான்*. அதின்பின் சலோமோ ன் யெரூஷலேமிலே தனக்கொரு வீட்டை யும், லிபானோனிலே இராச ஸ்திரீகளுக்கு நூறுமுழ நீளமும், ஐம்பது முழ அகலமுங் கொண்ட ஒரு வீட்டையும், ஐம்பதுமுழநீளமு ம், முப்பதுமுழ அகலமுமுள்ள ஒரு கொலும

* அப்போஸ்தலர் நடபடி. ௭. ௪௭.

ண்டபத்தையும், ஒரு நியாய மண்டபத்தையும், தன்மனைவியாகிய பார்வோனின் மகளுக்குஒரு அந்தப்புரத்தையுங் கட்டுவித்தான். இவைக ளெல்லாம் வாளால் அரிந்து அளவின்படிவெட் டப்பட்ட விலையுயர்ந்த கற்களாயிருந்தன.

(க. இராசா. எ. ககூ.

உசஉ. இன்னுமிவன் பதினெட்டுமுழநீளமும், பன்னிரண்டுமுழச் சுற்றுமுடைய இரண்டு பித் தளைத்தம்பங்களையும், அதின்மேல் ஐந்துமுழஉ யரமுள்ள இரண்டு குடங்களையும்.அந்தக்குடங் களொவ்வொன்றிற்கும்எழேழுசங்கிலிகளையும், அந்தக்குடங்களுக்கு அலங்காரமாக மாதுளம் பழங்களையும், பித்தளையினால் வார்ப்பித்து அந்த த் தூண்களின்மேலே வைத்துத் தேவாலயத்துத் தலைவாசல் மண்டபத்து முகனையில் ஒன்று வல திலும் ஒன்று இடதிலுமாக நிறுத்தினான். வலத் தம்பத்துக்கு யாகின்(ஸ்திரம்)என்றும்,இடத்தம் பத்துக்குப் போவஸ்(பெலம்)என்றும்பேர். மே லும் இவன்விட்டளவு பத்துமுழமும், சுற்றளவு முப்பது முழமும், உயரம் ஐந்து முழமுங்கொ ண்டதாக ஒரு பித்தளைத் தொட்டியையும் உண் டாக்கி அதைத் தாங்கும்படி பன்னிரண்டு இரு ஷபங்களையுமுண்டாக்கி அவைகளை நான்குதி சையிலும் முகமாகநிறுத்தி அவைகளின் பின்பு றத்தில் அந்தத்தொட்டியைவைப்பித்தான். அத ற்குச் சமுத்திரத்தொட்டியென்று பேர்.

(க. இரா. எ. உச.

உசரு. மேலும் நான்கு முழநீளமும்,நான்குமு ழ அகலமும் மூன்று முழ உயரமுமுள்ள பத்து

ப்பித்தளைப் பீடங்களைச் செய்வித்து அதின் விளிம்புகளிலே சிங்கங்களையும், இருஷபங்களையும், கெருபிகளையும்; உண்டாக்கி அந்தப் பீடத்தைத் தாங்கும்படி ஒவ்வொரு பீடத்துக்கும் நன்னான்கு பித்தளைச் சில்லுகளையுஞ் செய்வித்தான். பின்பு பித்தளையினாலே பத்து ஸ்நானபாத்திரங்களையுஞ் செய்வித்து அந்தப் பீடங்களின் மேல் வைத்து, அவைகளை ஆலயத்தில் இடதுபுறத்தில் ஐந்தும் வலது புறத்தில் ஐந்துமாக நிரைத்து, வலப்புறத்திலே சமுத்திரத்தொட்டியை ஸ்தாபித்தான். இன்னும் இவன் வேதிகையையும், சமுகத்தப்ப பீடத்தையும், கிளைவிளக்குகளையும், விளக்குத் தண்டுகளையும், கருவிகளையும், பாத்திரங்களையும், திரிவெட்டிகளையும், கிண்ணங்களையும் கரண்டிகளையும், கலசங்களையும், கதவுப்பிணையல்களையும், பொன்னினாலே செய்வித்தான்.

(க. இராசா. எ. ருo.

உசச. இதன்பின்பு சலோமோன் கோத்திரத் தலைவர் மற்றும்முதியோர் யாவரையுஞ் சனங்களையும் அழைப்பித்து, தாவீதின் நகரமாகிய சீயோனிலிருந்த நியாயப்பிரமாணப் பெட்டியை எடுப்பித்துக் கட்டப்பட்ட ஆலயத்திலே ஸ்தாபித்தான். அப்பொழுது ஒரு மேகம் அந்த ஆலயத்தை நிரப்பியிருக்கிறதைச் சலோமோன் கண்டு, யெகோவாவின் வேதிகைக்கு முன் நின்று வானத்துக்கு நேரே தன்கையை விரித்து யெகோவாவே, நீர் சதாகாலமும் வாசம்பண்ணும்படி இந்த ஆலயத்தை உமக்காகக் கட்டினேன்.

யெகோவா நமது முன்னோரை எகிப்தில் நின்று புறப்படுத்தினபொழுது பண்ணின உடம்படிக்கையை வைக்கும்படி இந்த ஸ்தானத்தை ஏற்படுத்தினேன்.* வானத்திலும் பூமியிலும் உமக்கொப்பான தேவனில்லை. பூரண இருதயத்தோடே உமக்குத் தாசிகஞ் செய்பவருக்கு உமது உடம்படிக்கையையும், அனுக்கிரகத்தையும், பரிபாலித்தீர். தேவன் பூமியில் வாசம்பண்ணுவாரோ? ஆகாச மண்டலங்களும் உம்மை அடக்காதே. நான் கட்டின வீடு உம்மை அடக்குமா?† எனது நாமம் அதிலே ஸ்தாபிக்கப்படுமென்று நீர் என் பிதாவுக்குச் சொல்லியபடி இந்த வீட்டின்மேற் கடாட்சம்வைத்திருப்பீராக. உமது அடியானும் உமது சனங்களும் இந்த ஸ்தலத்துக்கு நேராய்ச் செய்யும் விண்ணப்பத்தை உமது வாசஸ்தலமாகிய வானத்தினின்று கேட்பீராக. இவர்கள் பாவங்களின் நிமித்தம் வானம் வறக்கச் சனம் வருந்துகையில் சனம் மனந்திரும்பி உம்மைப் பிரார்த்தித்தால் அவர்களுக்கு நன்னெறியைப் போதித்து மழையை வருஷிப்பிப்பீராக. தேசத்திலே பஞ்சம், கொள்ளைநோய் முதலிய எந்த வாதை வந்தாலும் அவர்கள் மனந்திரும்பி உம்மைப் பிரார்த்தித்தால், அவர்களுக்குச் சகாயஞ்செய்தருளும். அப்படியே எந்த அன்னியரும் உமது நாமத்தை மதித்து உம்மைப் பிரார்த்தித்தால் அவர்களுக்குஞ் சகாயஞ்செய்தருளும். எங்கள் முன்னோர்களுடனே இருந்த பிரகாரம் நம்மோடும் இருந்தருளுமென்

* உபா. கஉ. க0. † அப்போஸ்தலர். எ. சஅ. சகூ.

று சொல்லிப்பிரார்த்தித்தான் (௧. இரா. அ. ௫௩.

௨௪௫. பின்பு சலோமோன் சனங்களுடனே யெகோவாவுக்குப் பலிகளைச்செலுத்திப்பதினா லுநாள்வரையும்உற்சவங்கொண்டாடினான். அதன்பின்புசலோமோன் கேசெரையும், பேதோரோனையும், பாலாத்தையும், தாத்மோரையும், கட்டினதுமன்றித் தனக்குள்ள சகல இடங்களிலும் களஞ்சியங்களையுங் கட்டி, எமோரியர், எத்தியர், பெரீசியர், ஈவியர், எபூசியர் முதலிய சாதிகளையெல்லாம் அடிமைகளாக்கி இஸ்ரவேலரைத் தனக்குச் சேனைகளும், சேனாபதிகளும், பிரபுகளும், இரதவீரரும், குதிரைவீருமாக நியமித்து அரசாண்டான். இவன், வருஷத்தில் மூன்றுமுறை யெகோவாவுக்குத் தகனபலிகளையும், ஸ்தோத்திரப் பலிகளையுமிட்டுத் தூபமுங் காட்டி வருவான். இதுவன்றி இவன் பல கப்பல்களையுஞ் செய்வித்து ஒப்பீருக்கனுப்பித் தங்கங்களை வாங்கினான். (௧. இரா. ௯. ௨அ.

௨௪௬. இப்படியிவன் கீர்த்திபெற்றிருக்கிறதை ஷேபா தேசத்து இராசாத்தி கேள்விப்பட்டு, சுகந்த திரவியங்களையும் ஒட்டகங்களில் ஏற்றிக்கொண்டுவந்து அவைகளை இவனுக்கு வெகுமதிகளாகக் கொடுத்து, இவனுடைய இராச்சிய சிறப்புக்களையும், தேவாலயச் சிறப்புக்களையும் பார்த்து மெய்ச்சிக்கொண்டு இவனிடத்திலும் வெகுமதி பெற்றுக்கொண்டு தன் தேசத்துக்குத் திரும்பினாள்*. இவன் பொன்னினாலே இருநூறு பரிசைகளையும், முந்நூறு சிறு கேடகங்களையும் செய்வித்தான். தனது சிங்காசனத்தை

* மத்தேயு. ௧௨. ௪௨.

யானைத்தந்தங்களினாலே செய்வித்து, அவைக
ளைப் பொற்றகட்டால்மூடி அதை மகா சிங்கா
ரமாய் அலங்கரித்தான். அவனுடைய வீட்டிலு
ள்ள சகல பாத்திரங்களும் சுத்த தங்கமாயிருந்
தன. அவனுடைய கப்பல்கள் தர்ஷீஷுக்குப்
போய், பொன், வெள்ளி, யானைத்தந்தம், மயில்,
குரங்கு முதலிய நூதனங்களைக் கொண்டுவந்த
ன. இவனுக்கு எகிப்தின் இராசாவும் மற்றும்
இராசாக்களுங் கப்பங்கட்டி வந்தார்கள்.
(க. இரா. ௧௦. ௨௯.

௨௪௭. இப்படியே இவன் சம்பூரணமாய் இரா
ச்சியம்பண்ணி வருகையில், மோவாபியர், அ
ம்மோனியர், ஏதோமியர், சீதோனியர், எத்திய
ர் என்னும் புறச்சாதியாருடைய ஸ்திரீகள்மே
ல் அன்புவைத்து எழுநூறு மனைவியரையும், மு
ந்நூறு வைப்பாட்டிகளையுஞ் சேகரித்தான். இ
வன் அவர்களால் மெய்வழியைவிட்டு இழுப்பு
ண்டு சீதோனியரின் தேவியாகிய அஷ்தோரே
த்தையும், அம்மோனியருடைய மோலெக்கை
யும், மோவாபியருடைய கிமோஷையும் வழி
படுகிறவனாகி அவைகளுக்கு மேடைகளையுங்
கட்டுவித்தான்*. (க. இரா. ௧௧. ௭.

௨௪௮. அப்பொழுது யெகோவா அவனுக்குத்
தரிசனையாகி, நீ உன் பிதா நடந்த வழியில் ந
டவாமல், அன்னிய தேவர்களைப் பின்பற்றின
படியால், உன் இராச்சியத்தைப் பிரிவுபடுத்தி
உனது அடிமைக்குப் பத்துக் கோத்திரத்தையு
ம் உன் மகனுக்கு ஒரு கோத்திரத்தையுங் கொ
டுப்பேன் என்றார். இவன் நெறி தவறி விழு

* நெகேமியா. ௧௩. ௨௬. உ௩௯௯

ந்ததினிமித்தம் ஏதோமின் இராச வமிசத்தில் யோவாப்புடைய சங்காரத்துக்குத் தப்பி எகிப்துக்கு ஓடியிருந்த ஆதாத்தை ஏவ, அவன் இன்னுஞ் சில விரோதிகளைச் சேர்த்துக்கொண்டு இஸ்ரவேலருக்குத் தின விரோதியாய் ஆரியாவிலே அரசாண்டான். இப்படியிருக்கச் சலோமோன் தன்னுடைய பணிவிடைக்காரனாகிய யெரோபேயாமை யோசேப்பின் வமிசத்துக்குத் தலைவனாக நிசமித்து அனுப்பினான். யெரோபேயாம் போகையில் அகியாவென்னும் தீர்க்கதரிசி அவனைச் சந்தித்து அவனுடையபோர்வையைப் பன்னிரண்டு துண்டாகக் கிழித்துத் தாவீதின் கீழ்ப்படிதலினிமித்தம் சலோமோன் செய்த குற்றத்தைப் பொறுப்பேன்: சலோமோனுடைய குற்றத்தை அவன் சுதனாகிய ரெகோபேயாமிடத்திற் பாரித்து அவனுடைய இராச்சியத்தைப் பகுத்துப் பத்துக்கோத்திரத்தை உன் கைவசமாய்த் தருவேன் என்று யெகோவா சொல்லுகிறார் என்றான். இதை அறிந்த சலோமோன் யெரோபேயாமைக் கொல்லத் தேடினான். அவனோ எகிப்து இராசனாகிய ஷிஷாக்கினிடத்திற் போய் அடைக்கலம் புகுந்திருந்தான். சலோமோனோ நாற்பது வருஷம் அரசாண்டு மரித்தான். (க. இரா. கக. சா௩: இவனுடைய இடத்துக்கு இவன் புத்திரனாகிய ரெகோபேயாம் இராசாவானான்.

# ௫ம். அதிகாரம்.

௧. பின்பு ரெகோபேயாமுக்கு இராச அபிஷேகம்பண்ணும்படி ஷிகேமிலே சபை போய்க் கூடிற்று. அப்பொழுது சனங்கள் அவனை நோக்கி உமது பிதா எங்கள்மேல் ஏற்றின் பாரத்தை இலகுவாக்கினால் நாங்கள் உமக்குத் தொண்டுசெய்வோம் என்றார்கள். அதற்கு அவன் நீங்கள் போய் மூன்றும் நாளிலே வாருங்களென்று சொல்லி அனுப்பிப் பிதாவின் மந்திரிமாரை அழைத்து இந்தச் சனங்களுக்கு என்ன மறுமொழி சொல்லவேண்டுமென்று கேட்க, அவர்கள் நீர் தாழ்மையான உத்தரங் கொடுத்தால் அவர்கள் எப்பொழுதும் உமக்கு ஊழியக்காரராவார்களென்றார்கள். (௧. இரா. ௧௨. ௭.

௨. அதை அவன் தள்ளித் தன்னோடொத்த வாலிபரை அழைத்து ஆலோசனை கேட்க, அவர்கள் நீர், என் பிதாவின், இடுப்பிலும் என் சிறுவிரல் பெரிது. என் பிதா உங்கள்மேல் இட்ட பாரத்திலும் அதிபாரத்தை உங்கள்மேல் ஏற்றுவேன். என் பிதா உங்களைக் கசையினாலே தண்டித்தார். நான் உங்களைத் தேட்களினாலே வாதிப்பேனென்று சொல்லுமென்றார்கள்.

அதைக்கேட்டு ரெகோபேயாம் சனங்களுடனே அப்படிச்சொல்ல, சனங்கள் அவனுடனே தாவீதோடே எங்களுக்குப் பங்குபாகமில்லை என்றுசொல்லித் திரும்பிப் போய்விட்டார்கள். யூதாவின் நகரங்களிலிருந்த இஸ்ரவேற் சனங்களை மாத்திரம் ரெகோபேயாம் அரசாண்டான்.

௫. மற்றப் பத்துக் கோத்திரத்தாரும் சலோமோன் மரித்தபின் தங்களுக்குள் வந்திருந்த யெரோபேயாமை அழைத்துத் தங்களுக்கு இராசாவாக்கினார்கள். இதைக் கேள்விப்பட்டு ரெகோபேயாம், யூதா, பேன்யாமீன் என்னும் இரண்டு கோத்திரத்தாருக்குள்ளும் ஒரு இலட்சத்தொன்பதினாயிரம் வீரவான்களைத் தெரிந்துகொண்டு யுத்தத்துக்குப் புறப்பட்டான். அவர்களை யெகோவா தடுத்ததினால் அவர்கள் தங்கள் முயற்சியை விட்டுத் தங்கள் தங்கள் தானத்துக்குப்போய்விட்டார்கள். (௧. இரா. ௧௨. ௨.

| யூததீர்க்கதரி. | | யூதராசாக்கள். | ஆண். | கி. மு. | | இஸ்.ராசாக்கள். | ஆண். | கி. மு. | இஸ்.தீர்க்க |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஷீமாயா | ௧ | ரெ·கோபேயா. | ௧௭ | ௯௭௫ | ௧ | யெரோபேயாம் | ௨௨ | ௯௭௫ | தேவதாசன் |
| ஓபேத் | ௨ | அபீயா | ௪௧ | ௯௫௮ | ௨ | நாதாபு | ௨ | ௯௫௪ | அகியா |
| அசரியா | ௩ | ஆசா | ௩ | ௯௫௫ | ௩ | பாஷா | ௨௪ | ௯௫௩ | |
| அனனி | ௪ | யோஷபாத் | ௨௫ | ௯௧௪ | ௪ | ஏலா | ௨ | ௯௩0 | |
| யெகூ | ௫ | யெகோராம் | ௮ | ௮௯௨ | ௫ | சிம்றி | ௭ நாள் | ௯௨௯ | |
| வலீயேசர் | ௬ | அகஸ்யா | ௧ | ௮௮௫ | ௬ | உம்றி | ௧௨ | ௯௨௫ | |
| யாகாசாயேல் | ௭ | அத்தாலியாள் | ௬ | ௮௮௪ | ௭ | ஆகாப் | ௨௨ | ௯௧௪ | இலீஷா |
| ௧ சகரியா | ௮ | யோவாஸ் | ௪0 | ௮௭௮ | ௮ | அகஸ்யா | ௨ | ௮௯௭ | மீகாயா |
| | ௯ | அமத்சீயா | ௨௯ | ௮௩௯ | ௯ | யெகோராம் | ௧௨ | ௮௯௬ | இலீஷா |
| ௨. சகரியா | ௧0 | அசரியா | ௫௨ | ௮௧0 | ௧0 | யெகூ | ௨௮ | ௮௮௪ | |
| ஏசாயா | ௧௧ | யோதாம் | ௧௬ | ௭௫௫ | ௧௧ | யோவாகாஸ் | ௧௭ | ௮௫௬ | யோனா |
| மீகா | ௧௨ | ஆகாஸ் | ௧௬ | ௭௪௨ | ௧௨ | யோவாஸ் | ௨ | ௮௩௯ | |
| நகூம் | ௧௩ | இஸ்கியா | ௨௯ | ௭௨௭ | ௧௩ | யெரோபேயாம் | ௪௧ | ௮௨௫ | ஓசியா |
| யோவேல் | ௧௪ | மனாசே | ௫௫ | ௬௯௮ | ௧௪ | சகரியா | ௬மாதம் | ௭௭௩ | ஆமோஸ் |
| எரேமியா | ௧௫ | ஆமோன் | ௨ | ௬௪௩ | ௧௫ | ஷல்லூம் | ௧ மாதம் | ௭௭௨ | |
| அபகூக் | ௧௬ | யோஷீயா | ௩௧ | ௬௪௧ | ௧௬ | மெனகேம் | ௧0 | ௭௭௨ | |
| செப்பனியா | ௧௭ | யோவாகாஸ் | ௩ மாதம் | ௬௧0 | ௧௭ | பெக்காகியா | ௨ | ௭௬௧ | |
| எசேக்கியே. | ௧௮ | யோயாகீம் | ௧௧ | ௬௧0 | ௧௮ | பெக்கா | ௨0 | ௭௫௯ | ஓதெத் |
| தானியேல் | ௧௯ | யோயாகீன் | ௩ மாதம | | ௧௯ | ஒஷீயா | ௯ | ௭0 | |
| ஒபதியா | ௨0 | சிதிகியா | ௧௧ | ௫௯௯ | ௨0 | | | | |

## யூதாராசாக்கள்.

௧. ரெகோபேயாம்.

சலோமோனின் புத்திரனாகிய ரெகோபேயாம் நாற்பத்தொரு வயதிலே யூதாவை அரசாளத் தொடங்கினான். அவனுடைய சனங்கள் யெகோவாவின் விதிப் பிரமாணங்களை மறந்து, மலைகள்மேலும், மேடுகள் மேலும், விருட்சங்களின் கீழும், சிலைகளையும், நந்தன வனங்களையும், ஸ்தாபித்து அவைகளுக்கு ஆராதனை செய்துவருகையில் எகிப்து இராசனாகிய ஷிஷாக் யெரூஷலேமுக்கு வந்து (௧. இரா. ௧௪. ௨௫.) இவர்களை நிலைகுலைத்துத் தேவாலயத்திலும், (௨. நா. ௧௨. ௫.) அரண்மனையிலுமுள்ள பொக்கிஷங்களை வாரிக்கொண்டு லிபானோன் வனத்திற் சலோமோன் கட்டுவித்த மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்த பொற் பரிசைகளையும் எடுத்துக்கொண்டு போனான். அக்காலத்தில் ஷிமாயியா என்னுந் தீர்க்கதரிசி ரெகோபேயாமையும், அவனுடைய அதிபதிகளையுங் கண்டு நீங்கள் யெகோவாவை விட்டுவிட்டபடியால் அவர் உங்களை ஷிஷாக்கின் கையில் ஒப்புக்கொடுத்தாரென்று எச்சரிக்க, அவர்கள் தங்களைத் தாழ்த்தி யெகோவாவைப் பிரார்த்தித்ததினால் பின் முன்னாகப் (௨. நா. ௧௨. ௭.) பதினேழு வருஷம் அரசாள இடங் கொடுத்தார். இவனுள்ள காலமெல்லாம் இவனுக்கும் யெரோபேயாமுக்கும் தொந்தயுத்தம் நடந்தன. இவன் ஐம்பத்தெட்டு வயதில்மரணமடைந்தான். (௧. இரா. ௧௪. ௩௧.

## இஸ்ரவேல் இராசாக்கள்.

க. யெரோபேயாம்.

க. இவன் ஷிகேம் என்னும் நகரத்தைக் கட்டி, இஸ்ரவேலரை ஆண்டு வருங்காலத்தில், இந்த இஸ்ரவேலர் யெருஷலேமுக்கு உற்சவங்கொண்டாடப் போனால் அவர்கள்தன்னைவிட்டு ரெகோபேயாமைச் சார்ந்துவிடுவார்களென்று எண்ணிப்பொன்னினாலே இரண்டு இடபங்களை உண்டாக்கி ஒன்றைத் தென்புறமான பெத்தேலிலும், மற்றதை வடபுறமான தாணிலும் வைத்து லேவிகோத்திரத்துக்கு அன்னியரான சனங்களை ஆசாரியராக்கி உற்சவங் கொண்டாடித் தூபங்காட்டுகையில் அகியாவென்னுந் தீர்க்கதரிசி வெளிப்பட்டு; வேதிகையே, தாவீதின் வமிசத்திலே யோஷியாவென்னும் ஒருவன் பிறந்து உன்மேலே தூபங்காட்டும் ஆசாரியர்களை உன் மேற்பலியிடுவான். மனிதருடைய எலும்புகள் உன்மேற் தகிக்கப்படும். இப்பொழுது இந்த வேதிகையும் வெடித்துச் சாம்பர்கொட்டுண்ணும். அதுவே இது தேவவாக்கு என்பதற்கு அடையாளமென்றான். (க.இரா. கங. ௩.) அதைக் கேட்ட யேரோபேயாம் அவனைப் பிடியுங்களென்று தன் கையைநீட்ட, அந்தக் கை திரும்பமுடக்கக்கூடாமற் சூம்பிப் போயிற்று. உடனே வேதிகையும் வெடித்துச் சாம்பலுங் கொட்டுண்டது. (க. இரா. ௰௩. ரு.)

உ. அப்பொழுது இராசா தன்கை முன்போலச் சொஸ்தமாகும்படி வேண்டிக்கொள்ளச்

௨. இவனுடையஇடத்துக்குஅவன் புத்திரனாகிய அபியாம் இராசனானான். இந்த அபியாம் முன் சொன்ன யெரோபேயாமுடைய அரசாட்சியின் பதினெட்டாம்வருஷத்தில் யூதாவுக்கு இராசனாகி மூன்று வருஷம் அரசாண்டபின் யெரோபேயாமுடன் யுத்தம்பண்ணும்படி நாலு லட்சம் யுத்தவீரர்களையும் சேர்த்துக்கொண்டு போக யெரோபேயாம் எட்டுலட்சம்சனங்களுடனே வந்தெதிர்த்தான். அபியா அவர்களுடனேநீங்கள் அனேகர், நாங்களோ சிலர்; ஆகிலும் நீங்கள் யெகோவாவை விட்டுப் பொன் இடபங்களை வணங்குகிறீர்கள். நாங்களோ யெகோவாவை வணங்குகிறோம். நீங்கள் லேவியரல்லாதவர்களை ஆசாரியர்களாக்கினீர்கள். எங்கள் ஆசாரியர் லேவியர். எங்கள் சேனாபதி யெகோவா. நீங்கள் அவருக்கு விரோதமாய் யுத்தஞ் செய்து செயமடைய மாட்டீர்களென்றான்.

ஆ. அபியாம்.

௩. அதைக்கேட்டு யெரோபேயாம்பதிவிருந்த படையை இவர்களுக்குப் பின்புறத்தில் அனுப்பி, தாங்கள்முன் புறத்தில் நெருங்கி வர, யூதர் கண்டு யெகோவாவை நோக்கி ஒலமிட்டார்கள். அப்பொழுது யெகோவா இஸ்ரவேலரை யூதர் கையில் ஒப்பித்தார். இஸ்ரவேலரோ பயந்து ஓடினார்கள். அன்றையில் யுத்தத்தில் இஸ்ரவேலரில் ஐந்து லட்சம்பேர் கொலையுண்டார்கள். அபியா பெத்தேலையும், இஷானாவையும், எப்ராயீமையும் பிடித்துக்கொண்டான். இ

சொல்லி அகியாவை அவன் மன்றாடினதினால் தீர்க்கதரிசி அப்படியே பிரார்த்தித்தான். அவனுடையகை உடனே சொஸ்தமாயிற்று. அப்பொழுது இராசா அவனைத் தன் வீட்டுக்கு வந்து பசித்துக் குடித்து வெகுமதிபெற்றுத் திரும்பிப் போவென்று மன்றாடினான். இவனோ அப்படிச் செய்யத் தனக்குத் தேவ உத்தரவில்லையென்று மறுத்துத் திரும்பிப்போகிற வழியில் ஒரு கிழத்தீர்க்கதரிசி இவனைச் சந்தித்து நானுமொரு தீர்க்கதரிசி, யெகோவாவுடைய தூதன் என்னுடனே உம்மை அழைத்துப் போய்ப் போசன பானம் பண்ணும்படி செய்யச்சொன்னார் என்றான். (௧. இரா. ௧௩. ௧௮.) அதை நம்பி இவனுங்கூடிப்போய்ப் போசன பானம்பண்ணியிருக்கையில் கிழவனுக்குத் தேவ வாக்குண்டாகி, நீ என் கட்டளையை மீறிப் போசனபானம் பண்ணினபடியால் உன் பிரேதம் உன் முன்னோருடைய பிரேதவறையில் அடையமாட்டாதென்றது. (௧. இரா. ௧௩. ௨௨.) இதைக் கேட்டு இவன் புறப்பட்டுப்போகிற வழியில் ஒரு சிங்கம் இவனைக்கொன்றுபோட்டது. அதை அவனை அழைத்துக்கொண்டுபோன கிழ தீர்க்கதரிசி கேள்விப்பட்டுப் புறப்பட்டுப்போய் அந்தப் பிரேதத்தை எடுத்துவந்து தன்சொந்தப் பிரேதவறையிற்சேமித்தான். (௧. இரா. ௧௪. ௩௧.) யெரோபேயாம் இந்த அதிசயங்களை எல்லாம் அறிந்தும் தனது துன்னெறியை விட்டு விடாதது அவனுடைய வமிசத்துக்குத் துரோகமாயும் சந்தானசேதமாயும் முடிந்தது. (௧. இரா. ௧௪.)

ந்த அபீயா பெலசாலியாயிருந்து அரசாண்டு மரித்தான்.

ஆசா. ௩. ௪. அபீயாவுடைய இடத்துக்கு அவன்புத்திரனாகிய ஆசா இராசாவாகித் (க. இரா. க௯. ௯.) தன் தேசத்திலுள்ள அன்னியதேவ வணக்கங்களையும், விக்கிரகாராதனையையும் அகற்றி, யாவரும் யெகோவாவையே வழிபடக் கட்டளையிட்டு, அனேக நகரங்களைக் கட்டி அரசாண்டு வருகையில் கூஷியனாகிய சேரா பத்திலட்சம் காலாட்களையும் முன்னூறு இரதங்களையும் கொண்டுவந்து எதிர்க்க, இவன் யெகோவாவுக்கு அபயமிட்டுப் போய் எதிர்த்தான். கூஷியர் தோற்றோடினார்கள். இவர்களோ அவர்களுடையசகல சம்பத்துக்களையும் கொள்ளையிட்டுக்கொண்டு தங்கள் ஊருக்குத் திரும்பினார்கள். (உ. நாளா. கஉ.

௫ அப்பொழுது அசரியாவென்னுந் தீர்க்கதரிசி இவர்களிடத்துக்கு வந்து நீங்கள் யெகோவாவைப் பற்றியிருக்கிறீர்கள். அவரும் உங்களுக்குச் சகாயராயிருக்கிறார். ஆதலால் தேசம் சமாதானமுள்ளதாயிருக்கிறது. நீங்கள் தளர்ந்து போகாதிருங்கள். உங்கள் கிரியைகள் சித்தியாகுமென்றான். அதைக் கேட்டு ஆசா தான் பிடித்த நகரங்களிலுள்ளவிக்கிரகங்களை அகற்றி யெகோவாவின் ஆலயத்தின் முதலாம் வேதிகையைத் திரும்பவும் உண்டாக்கினான். தேவன் இவனுக்குச் சகாயராயிருக்கிறதைச் சனங்கள் கண்டு இஸ்ரவேலரில் திரள் சனங்கள் கூடி யெகோவாவுக்குப் பலியிட்டு, யா

௯. இந்த யெரோபேயாம் தன் புத்திரனாகிய அபீயாம் நோயாயிருந்தபோது தன் மனைவியை அகியா தீர்க்கதரிசியிடத்திற்கு அனுப்பித் தன் பாலகனுக்குச் சம்பவிப்பதென்னவென்று கேட்பித்தான். அவள் அகியாவின் வீட்டு வாசலிற்சேர்ந்தபொழுது, அகியா ஸ்திரியே, நீ வேஷம்மாறி வந்ததென்ன? நீ போய்உன் கணவன் யெரோபேயாமைக் கண்டு நான் உன்னை இஸ்ரவேலுக்கு அதிபதியாக்கினேன். நீ என் கட்டளைகளைப் பேணிக்கொள்ளாமல் அன்னிய தேவர்களையும் விக்கிரகங்களையும் உனக்குத் தெய்வமாக்கி என்னைப் புறம்பே தள்ளிவிட்டாய். ஆதலால் நான் உன் சந்தானத்தை அற்றுப்போகும்படி தள்ளிவிடுவேன். நகரத்திற் சாகிறவனை நாய்தின்னும், வெளியிலே சாகிறவனைப் பறவை தின்னும். நீ உன் நகரத்திற் பிரவேசித்தவுடனே உன் பாலகன் சாவான். யெகோவா வேறொருஇராசாவைத்தோற்றுவிப்பார். அவன்யெரோபேயாமின் வமிசத்தைச்சேதஞ்செய்வான். தானும் பாவஞ்செய்து இஸ்ரவேலரையும் பாவஞ் செய்யப் பண்ணின யெரோபேயாமினிமித்தம் இஸ்ரவேலர் கைவிடப்படுவார்களென்று யெகோவா சொல்லுவித்தாரென்று சொல்லென்றான். (௧. இரா. ௧௪. ௧௬.) அதைக்கேட்டு அவள் திரும்பி நகரத்திற்போக புத்திரன் மரணமடைந்தான். யெரோபேயாமும் இருபத்திரண்டு வருஷம் அரசாண்டு மரித்தான். (௧. இரா. ௧௪. ௨௦.)

வருந் தங்கள் பூரண இருதயத்தோடும், பூரண ஆத்துமாவோடும் யெகோவாவைப் பிரார்த்திப் போமென்றும் உடன்படிக்கைபண்ணினார்கள்.
(௨. நாளா. ௧௫. ௧௫.

௬. அப்பொழுது இந்தஆசா தன்மாதா செய்வித்த மரவிக்கிரகத்தையும் எடுத்துச்சுட்டு, தன் மாதாவையும் இராச்சிய அதிகாரத்தை விட்டெடுத்துத் தானுந் தன்பிதாவும் யெகோவாவுக்கென்று சங்கற்பித்த சகல பொன் வெள்ளிப்பாத்திரங்களையும் யெகோவாவுக்கு ஒப்புவித்து, முப்பத்தைந்து வருஷபரியந்தம் யுத்தமில்லாமற் சமாதானமாய் இருந்தான். இவனுடைய அரசாட்சியின் முப்பத்தாறும் வருஷத்திலே நாதாபைச் சங்கரித்து இஸ்ரவேலுக்கு இராசாவான பாஷா ஆசாவிடத்தில் ஒருவரையும் போகவிடாமற் தடுக்கும்படி இராமாவைக் கட்டத் தொடங்கினான். அதைக் கண்ட ஆசா தேவத் திரவியங்களிற் சிலதைஎடுத்து சூரியரின் இராசாவாகிய பென்னாதத்துக்கனுப்பி நீர் இஸ்ரவேலின் இராசாவாகிய பாஷாவுடனே பண்ணின உடன்படிக்கையைத்தள்ளிப்போடுமென்றுகேட்டான். (௨. நாளா. ௧௧. ௧௯.

எ. அதற்குப் பென்னாதத்தும் சம்மதித்து தன் சேனைகளை அனுப்பித் தாண் முதலிய நகரங்கள்பலதையுஞ் சேதப்படுத்துவிக்கப் பாஷா இராமாவைக் கட்டுவதை விட்டு விட்டான். ஆசாவோ தன் சனங்களைக் கொண்டுபோய்ப் பாஷா இராமாவைக் கட்டச் சேகரித்து வைத்த கற்களையும் மரங்களையும் எடுப்பித்துக்கொ

௪. நாதாபு. | ௪. யெரோபேயாமின் புத்திரனாகிய நாதாபு அரசாளுங் காலத்தில் ஈஷகார் வமிசத்தானாகிய பாஷா நாதாபைக்கொன்று இஸ்ரவேலருக்கு இராசாவாகி யெரோபேயாமின் வமிசத்தை நிருமூலமாய்ச் சங்கரித்தான். இது யெரோபேயாமுக்கு யெகோவா அறிவித்தபடி நடந்தது.

(க. இரா. ௧௫. ௨௫—௩௦.

௫. பாஷா. | ௫. இந்தப் பாஷாவுக்கும் யூதருடைய மூன்றாம் இராசாவாகிய ஆசாவுக்கும் அவர்கள் ஆயுள்பரியந்தம் விடாத யுத்தம் நடந்தது. இவன்இஸ்ரவேலரை அரசாண்ட இருபத்துநாலு வருஷமும் யெகோவாவுக்கு விரோதமாய் நடந்ததினால் யெகோவா யேகூ என்னுந் தீர்க்கதரிசியைக்கொண்டு பாஷாவின் சந்ததியாரில் நகரத்திற் சாகிறவனை நாய் தின்னும். வெளியிலே சாகிறவனைப் பறவைகள் தின்னும் என்று சொல்லுவித்தார். இப்படியே இவன் விக்கிரகாராதனைக்காரனும் யெகோவாவை விட்டு விலகினவனுமாயிருந்து மரிக்க, இவன் புத்திரனாகிய ஏலா இஸ்ரவேலருக்கு இராசாவானான். (க. இரா. ௧௬. ௬.

௬. ஏலா. | ௬. ஏலா தனது உக்கிராணக்காரன் வீட்டிற்குடித்து வெறித்திருக்கையில் இவனுடைய இரதகர்த்தனாகிய சிம்றி வந்துஇவனைச் சங்கரித்துத்தானேஇராசாவானான்.(க.இ.௧௬.௧௦.

எ. சிம்றி இஸ்ரவேலுக்கு இராசாவாகிய பாஷாவின் குடும்பத்திலும் அவன்இனத்திலும்

ண்டுபோய்க் கேபாவையும் மிஸ்பாவையுங் க ட்டுவித்தான். (உ. நாளா. கசு. கூ.

அ. அப்பொழுது அனானி என்னுந் தீர்க்க தரிசி ஆசாவிடத்தில்வந்து நீர் யெகோவாவை ச் சாராமல் ஆரிய இராசாவைச் சார்ந்திருந்தப டியால் உமக்கு யுத்தங்கள்நேரிடுமென்க, ஆசா கோபங்கொண்டு அவனை மறியலாக்கினான். இ ந்தக் குற்றத்தினிமித்தம் அவன்பாதரோகமடை ந்து இரண்டு வருஷம் வருத்தப்பட்டு மரணம டைந்தான். (உ. நாளா. கசு. கஉ.

கூ. பின் அவன்புத்திரனாகியயோஷபாத்அவனு டைய இடத்துக்கு வந்து இஸ்ரவேலருக்கு விரோதமாய்த் தன் படை சனங்களைப் பல விடங்களிலும் நிலைப்படுத்திப் பாகால்களை விலக்கி யெகோவாவைப் பற்றிக்கொண்டு அவருடைய கட்டளைகளைப் பேணி நடந் தான். அவன்தன் அரசாட்சியின் மூன்றாம் வருஷத்தில் பென்னாயில், ஒபதியா, சகரியா, நிதனேல், மீகாயா என்னுந் தீர்க்கதரிசிகளை யும்,ஷிமாயியா முதலியலேவியரையும், இலீஷ் மாமுதலிய ஆசாரியர்களையும் தெரிந்தெடுத்து யூ தச் சனங்களுக்குப் போதகஞ்செய்யும்படி அ னுப்பினான். அவர்கள் வேதப் பிரமாணத்தைக் கொண்டு யூதா எங்கும் போய்ப் போதித்தார் கள். (உ. நாளா. கஎ. கூ.

யோஷபாத்.

கO. அயல் இராசாக்கள் யாவரும்யெகோவா வுக்கு அஞ்சி இவனுக்கு இறை இறுத்தார்கள். (உ. நாளா. கஎ. கக.) இவன் பலவிதத்திலும்

அவன்சினேகிதரிலும் யாதொரு ஆணுமில்லாம ற் சங்கரித்தான். இந்தச் சிம்றி இராசாவாகி ஏழு நாள்இராசாசனத்தில்வீற்றிருக்கிறதைஇஸ்ரவே லர் அறிந்து உம்றியை இராசாவாக அபிஷேக ம்பண்ணி, யாவருந் திரண்டுபோய் இவனிருந்த திர்சாப்பட்டணத்தை முற்றிக்கைபோட்டிருக் கிறதைச் சிம்றி அறிந்து தன் அரண்மனையில் நெருப்பு வைத்து அதிலே எரிந்துபோனான்.

(க. இரா. ௧௬. ௧௯.

உம்றி. அ. இவன்திர்சாவிலேஆறுவருஷமும், ஷ மாரியாவில் ஆறுவருஷமும் அரசாண்டு ஷ மாரியாவைக் கட்டி, விக்கிரகாராதனைக்கா ரனுயிருந்து மரித்தான். (க. இரா. ௧௬. உஅ.

ஆகாப். ௯. பின்பு உம்றியின் புத்திரனாகியஆகாப் இராசாவாகி சீதோனியரின் இராசாவாகி ய இத்பாகாலின் புத்திரியாகிய யெசேபே லை விவாகஞ்செய்து பாகாலை வணங்கி வ ந்தான். இவன் இப்படி இருக்கையில் இலீ சாத் தீர்க்கதரிசி இவனிடத்துக்கு வந்து இந்த வருஷங்களில் என் வாக்கில்லாமல் மழையும் பனியும் உன் தேசத்திற் பெய்ய மாட்டாதென் று சொல்லித்* தேவகட்டளைப்படி கெரீத்தென் னும் சிற்றாற்றண்டை போய் ஒளித்திருந்து காக் கங்கள் காலைமாலை கொண்டுபோய்க் கொடுக்கி ற அப்பத்தையும் மாமிசத்தையும் புசித்து, ஆற் று நீரிற் பானித்துக்கொண்டிருந்தான். பின்பு யெகோவா இட்ட கட்டளைப்படி சாரிபாத் தாருக்குப்போய், ஒரு கைம்பெண் இடத்தில்

* யாக்கோபு, ௫. ௧௭.

விருத்தியடைந்து கோட்டைகளையும், களஞ்சி யங்களையும் அங்கங்கே கட்டுவித்தான். இவ னுக்குப் பதினொருலட்சத்தறுபதினாயிரம்பேர் பரிசாரகர். (௨. நாளா. ௧௭. ௧௯.

௧௧. இவன் இப்படியே விருத்திபெற்றவனாய் இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப்புடனே ச ங்காத்தமானபொழுது அவன் இவனுடனே த னக்குப் படைத்துணையாக வரவேண்டுமென் று கேட்டதற்கு இவனுஞ் சம்மதித்து நீர் முயன் ற காரியத்தைக் குறித்து யெகோவாவிடத்திற் கேட்டறியுமென்க; அவன் நானூறு தீர்க்கதரிசி களை அழைப்பித்துக் கேட்டான். அவர்கள் நீர் யுத்தத்துக்குப் போம். தேவன் உமது கையிற் சத்துருக்களை ஒப்பிப்பார் என்றார்கள்.

(௨. நாளா. ௧௮. ௫.

௧௨. அதற்கு யோஷாபாத் யெகோவாவின் தீர்க்கதரிசி இங்கில்லையா? அவர்களிடத்திற் கேட்டறியவேண்டுமென்க, ஆகாப் மீகாயா எ ன்பவன் இருக்கிறான். அவன் எப்பொழுதும் என்னைக்குறித்துத் தீமை சொல்லுகிறவன். அ தினால் அவனை வெறுக்கிறேனென்று சொல்லி யும் மீகாயாவை அழைப்பித்துக் கேட்க, அவ னும் நீர் போம், உமக்கு அனுகூலமாகுமென்று மறு தீர்க்கதரிசிகளைப்போலே சொன்னான். ம றுபடியும் ஆகாப் சத்தியத்தைச் சொல்லென்று உறுதிப்படுத்திக்கேட்க, அவன் இஸ்ரவேலர் எ ல்லாரும் மேய்ப்பன் இல்லாத ஆடுகளைப்போல மலைகளின்மேற் சிதறுண்டதைக்கண்டேன். அ ப்பொழுது யெகோவா இவர்களுக்குத் தலைவனி

அடைந்து அவளிடத்திலுள்ள ஒருபிடி மாவையு ம் கொஞ்சஎண்ணெய்யையுங் கொண்டு அவனு ம் அந்தக் கைமையும் அவள் மகனும் பூமியில்ம ழைவருஷிக்கும் நாளளவாகப் போஷிக்கப்பட் டார்கள்*. அவளுடையமாவும் எண்ணெயும் எடு க்கஎடுக்கக் குறையாமலிருந்தன. (௧.இ.௧௭.௧௬.

௧௦. அப்படி அவன் அங்கேயிருக்கையில் அவ ளுடைய புத்திரன் இறந்துபோனதினால் இந்த இலீசா யெகோவாவை நோக்கிப் பிரார்த்தித்து அந்தப் பிள்ளையை உயிரோடெழுப்பினான். அ க்காலத்திலே ஷமாரியாவிலே கொடிய பஞ்சம் உண்டானதினால் ஒபதியாவும், ஆகாப்பும், தே சத்திலே மிருகங்களுக்குப் புல்லுந் தண்ணீரு ம் எங்கே கிடைக்குமென்று பார்க்கப் புறப்ப ட்டுப்போனார்கள். இலீசா ஒபதியாவைச் சந்தி த்து, நீ போய் நான் இங்கே இருக்கிறேனென் று ஆகாப் இராசாவுக்கு அறிவியென்று கற்பிக் க, அவன் இராசா உம்மைக்கொன்றுபோடும்ப டி ஆட்களை அனுப்பியிருக்கிறார். இப்பொழு து நான் உம்மைக் கண்டும் விட்டுவிட்டுப்போ ய் உம்மைக்கண்டேனென்று இராசாவுக்கு அறி வித்தால் அவர் நிச்சயமாய் என்னைக் கொன்று போடுவார் என்றான். (௧. இரா. ௧௮. ௧௪.

௧௧. அதற்கு இலீசா இன்று நான் அவனுக் கு முன்பாகப் போவேன். நீ பயப்படாமற் போய் அவனுக்கு என்னை அறிவியென்று சொ ல்ல, ஒபதியா போய் அதை ஆகாப்புக்கு அறி வித்தான். அதைக் கேட்ட ஆகாப்போ புறப்

---

* லூக்கா. ௪. ௨௫ ௨௬

ல்லே. இவர்கள்யாவருந் தங்கள்தங்கள் வீடுகளு க்குச் சுகமே திரும்பிவிடட்டுமென்றுசொன்னு ர். இந்தத்தீர்க்கதரிசிகளோ பொய்யின் ஆவியை க்கொண்டு உம்மை ஏவினுர்களென்றுன். அப் பொழுது சிதிகியா கிட்டிப்போய் மீகாயாவின் கன்னத்தில் அடித்து, யெகோவாவின் ஆவி என் னைவிட்டு உன்னுடனே பேசும்படி எந்த வழி யாய் உன்னிடத்தில் வந்ததென்றுன். அதற்குமீ காயா நீ வீட்டுக்குள் ஒளிக்கும் நாளில் அதை அறிவாயென்றுன். (உ. நாளா. ௧அ. உ௪.

௧௩. அப்பொழுது ஆகாப் மீகாயாவைப் பி டித்து மறியலிலேவைப்பித்து, தான் வேஷம்மா றி யுத்தத்துக்குப் போனுன். யோஷாபாத்தோ இராச வேஷத்தோடு போனுன். அப்பொழுது சூரியர் தங்கள்இராசாவின் கட்டளேப்படி யோ ஷாபாத்தை இஸ்ரவேலின் இராசாவென்று நி னேத்துப் போய் வளேக்க, அவன்பயந்து குரலை யிட்டான். அவர்கள்இவன்ஆகாப்பல்லவென்று கண்டு அவனைவிட்டுத் திரும்பிப் போகையில், ஒருவன் எய்தஅம்பு ஆகாப்புக்குப் பட்டதினு ல் அவன் தன் இரதத்திலே சாயங்காலமட்டுங் கிடந்து பின்பு மரித்தான். யோஷாபாத்தோ த ன் வீட்டுக்குத் திரும்பினுன். (உ. நாளா. ௧௯. ௧.

௧௪. அப்பொழுது யெகூவென்னுந் தீர்க்கத ரிசி யோஷாபாத்திடத்துக்குவந்து யெகோவா வைப்பகைக்கிறவர்களே நேசித்துப் பாவிகளுக் குத் துணைசெய்வது உமக்குத் தகுதியல்லவெ ன்று கண்டித்தான். (உ. நாளா. ௧௯. உ.) பின்

பட்டுப்போய் இலீசாவைச் சந்தித்து இஸ்ரவே லரைக் கிலேசப்படுத்துகிறவன் நீதானேவென் று கேட்டான். இலீசா யெகோவாவை விட் டுப் பாகாலைப் பின்பற்றின் நீயும் உன் சனங்க ளுமே இஸ்ரவேலரைக் கிலேசப்படுத்துகிறீர்க ள். இப்பொழுது நீர் ஆட்களை அனுப்பிப் பா காலின் தீர்க்கதரிசிகள் ௪௱௫௰ பேரையும் யெசே பேலின் தீர்க்கதரிசிகள் நானூறு பேரையும் கர் மேல் மலையில் அழைப்பியுமென்றான்.

(௧. இரா. ௧௮. ௧௯.

௪௨. இராசா அந்தப் பிரகாரம் யாவரையும் அழைப்பிக்க, இலீசா அவர்கள் யாவருக்கும் மு ன் நின்று நீங்கள் எதுவரைக்கும் இருமனப்ப ட்டு நிற்பீர்கள்! யெகோவா தெய்வமானல் அ வரைப் பின்பற்றுங்கள். பாகால் தெய்வமானு ல் அவனைப் பின்பற்றுங்களென்று சொன்னபி ன்பு, இரண்டு காளையைக்கொண்டுவரச் சொல் லி, இந்தக் காளைகளில் ஒருகாளையை நீங்கள் துண்டித்து விறகின் மேல் வையுங்கள். நானும் அப்படியேசெய்வேன். அதில் நெருப்பிடாமல் அதைத் தகிக்கும்படி நீங்கள் உங்கள் பாகாலை ப்பிரார்த்தியுங்கள். நானும் யெகோவாவைப் பி ரார்த்திப்பேன். பிரார்த்தனைப்படி நடப்பிக்கிற அவனே தேவன் என்றான். (௧. இரா. ௧௮. ௨௪.

௪௩. அதைக் கேட்ட யாவரும் இதுவே நல் ல் வாக்கு என்றார்கள். உடனே பாகாலின் ஆசாரியர்கள் ஒரு காளையைத் தெரிந்து அதைத் துண்டித்துக் கட்டைகளின் மேல் ஏற்றிப் பா காலே, எங்களுக்கு அருள் செய்யும், அருள்செ

புஇவன்யெருஷலேமிலேவாசம்பண்ணி, சகல சனங்களையும் யெகோவாவின் பக்கமாய்த் திருப்பிப்பலபலதேசங்களிலும்நியாயாதிபதிகளைநிறுத்தி யாவருக்கும் வேதப் பிரமாணத்தைக் கற்பித்து அவர்களுக்கு ஒரு குருவைப்போலிருந்து அரசாட்சி செய்துவந்தான். (உ. நா. ௪௯.௧௧.

௧௫. இவன்இப்படி அரசாளுங்காலத்தில் மோவாபியரும், அம்மோனியரும், சேயீர்மலைத்தேசதாரும் இவனுக்கு விரோதமாய் யுத்தத்துக்குவந்திருக்கிறதைக் கேள்விப்பட்டுப் பயந்து சகல யூதர்களையும் அழைத்து உபவாசம்பண்ணித் தேவாலயத்திலே போய் யெகோவாவைப் பிரார்த்தித்து விண்ணப்பஞ்செய்தான். அப்பொழுது யெகோவாவின் ஆவியைக் கொண்டு யாகசியேல் என்னுமொருவன் எழும்பி இராசாவே, சனங்களே, கேளுங்கள்; இந்த யுத்தம் தேவனுடையதேயன்றிஉங்களுடையதல்ல. நீங்கள் கலங்காமல் யுத்தத்துக்குப் புறப்படுங்கள். யெகோவா உங்களுக்குச்செய்யும் மீட்சியைக் காண்பீர்கள். யெகோவா உங்களோடிருப்பார் என்றான். அதைக்கேட்டு இராசாவும் சனங்களும் யெகோவாவுக்குத் துதிசெலுத்தி, யுத்தத்துக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் போம்பொழுது யோஷாபாத் வழியிலே நின்று, யூதரே, யெருஷலேமியரே, உங்கள்தேவனாகியயெகோவாவை விசுவாசியுங்கள். அவருடைய தீர்க்கதரிசிகளின் வாக்கை நம்புங்கள். அதினாலே அனுகூலமடைவீர்கள். யெகோவாவின் தயை என்றுமுள்ளது. ஆதலால் அவரைத் துதியுங்களென்று

ய்யுமென்று காலை முதல் மத்தியானம் வரைக்கும் ஓலமிட்டார்கள். அவர்களுக்கு யாதொரு பிரதியுத்தரமுங் கிடைக்கவில்லை. அப்பொழுது இலீசா, உங்கள் தேவன் தியானத்தில் இருக்கிருனே? அலுவலாயிருக்கிருனே? பிரயாணம் போயிருக்கிருனே? நித்திரையாயிருக்கிருனே? தெரியாது. உரத்த சத்தமாய்க் கூப்பிடுங்களென்று பரியாசம்பண்ணிஞன். (க.இரா.௧௮.உ௭.

௧௪. அவர்களோ வெட்கமுள்ளவர்களாகித் தங்கள் சரீரங்களைக் காயப்படுத்தி மத்தியானந் தொடங்கி அந்திநேரம் மட்டும் ஓலமிட்டும் யாதொரு பிரதியுத்தரம் வராததைக் கண்டதிஞல் இலீசா சனங்களைக்கொண்டு யெகோவாவின் ஆலயத்தின் வேதிகையைக் கட்டுவித்து அந்த வேதிகையைச் சூழ வாய்க்காலை வெட்டுவித்து, வேதிகையின் மேல் விறகுகளை அடுக்கி.அதின் மேற் காளையைத் துண்டித்து வைத்து, அதின் மேற் குடங்குடமாய்த் தண்ணீரை ஊற்றுவித்த பின், யெகோவாவே, நீரே தேவன் என்றும், நானுமது தாசனென்றும், இந்தச் சனங்கள் அறிந்து மனந்திரும்பும் பொருட்டு, என் விண்ணப்பத்தைக் கேட்டருளுமென்று விண்ணப்பஞ் செய்ய. உடனே அதில் அக்கினி பற்றித் தகனபலியையும் விறகுகளையுங் கற்களையும் ஊற்றின சலத்தையும் பட்சித்தது. அதைக் கண்ட சனங்கள் சகலரும் யெகோவாவே தேவன், யெகோவாவே தேவனென்றுசொன்ஞர்கள். இலீசாகற்பித்தபடி கீஷோனின் சிற்ருற்றின் ஓரத்தில் பாகாலுக்குப்பூசைசெய்த நானூற்றைம்ப

படிப் புகழ்ந்துகொண்டு போக, யெகோவர் அம்மோனியருக்கும், மோவாபியருக்கும் விரோதமாய்ச் சேயீர்மலையிலுள்ளவர்களை எழுப்பினார். இவர்கள் அம்மோனியருக்கும், மோவாபியருக்கும் விரோதமாய் எதிர்க்க, அவ்விருதேசத்தாரும் இவர்களை எதிர்த்துச் சேயீர்மலைவாசிகளைச் சருவசங்காரம்பண்ணி முடித்தபின்பு அம்மோனியரும், மோவாபியரும் தங்களிலே தாங்கள் மாறுபட்டுச் சண்டையிட்டு வெட்டுண்டு விழுந்தார்கள். (௨. நாளா. ௨௦. ௨௬.

௧௬. யோஷாபாத்தும் சனங்களும் போய் அவர்கள் உடைமைகளைக் கொள்ளையிட்டுக்கொண்டு களிகூர்ந்து கீதவாத்தியங்களை முழக்கி யெருஷலேமின் ஆலயத்துக்கு வந்தார்கள். அதைக் கேள்விப்பட்ட அன்னிய இராசாக்கள் அனைவரும் இவனுக்குப் பயந்ததினால், யாதொரு யுத்தமுமில்லாமல் இருபத்தைந்து வருஷம் யெருஷலேமில் அரசாண்டான்.

(௨. நாளா. ௨௦. ௩௧.

௫. யெகோராம்.

௧எ. இவன், ௬௦. வயதிலே மரணமடைய இவன் புத்திரனாகிய யெகோராம் முப்பத்திரண்டுவயதில் அரசாளத்தொடங்கித் தன் சகோதரர் யாவரையும் சில பிரபுக்களையும் கொல்லுவித்து யெருஷலேமிலே எட்டுவருஷம்அரசாண்டான். அவன் இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப்பின்புத்திரியை விவாகஞ்செய்தபடியால் தன் பிதாவின் வழியைவிட்டு இஸ்ரவேல் இராசாக்களுடைய நெறிகளில் நடந்தான். அதினிமித்தம் ஏதோ

து தீர்க்கதரிசிகளையுஞ் சங்காரம்பண்ணினார்கள். (௧. இரா. ௧௮. ௪௦.

௪௫. பின்பு இலீசா ஆகாப் இராசாவுடனே இப்பொழுதே பெருமழை வரும். அதற்குமுன் நீர் போய்ப் போசனபானம்பண்ணுமென்றனுப்பி, கர்மேல் மலை உச்சியிலே ஏறித் தாழ்ந்து வணங்கிய பின்பு, தன் பணிவிடைக்காரனை அனுப்பிச் சமுத்திரத்தில் மேகம் எழும்புகிறதைப் பார்ப்பித்து, இப்பொழுதே பெரு மழை வரும்*. நீர் உமது இரதத்தில்ஏறி ஓடுமென்றனுப்பினான். உடனே வானம் இருண்டு காற்றும் மழையுமுண்டாய்ச் சோனாமாரியாய் வருஷித்தது. (௧. இரா. ௧௮. ௪௫.) இந்தச் செய்தியை ஆகாப்பின் மனைவியாகிய யெசேபேல் கேள்விப்பட்டுப்பாகாலுடைய பூசாசாரிமாருக்கு இலீசா செய்வித்த பிரகாரம் இவனுக்கும் செய்விப்பேனென்று சபதமிட்டதை இலீசா அறிந்து பேர்ஷேபாவுக்கோடித் தன் பிராணனை எடுத்துப்போடும்படி யெகோவாவை வேண்டிக்கொண்டு ஓர் மரநிழலிற் படுத்திருக்கையில் ஒரு தேவதூதன் அப்பத்தையுந் தண்ணீரையுங் கொண்டு வந்து, நீ இதைப் புசித்துக்குடி, உன் பிரயாணம் அதிதூரமென்று சொல்ல, இவன் எழுந்து புசித்துக் குடித்து அந்த ஆகாரப்பெலத்தோடே நாற்பது நாள் இராப்பகல் வழி நடந்து ஓரேப் மலையைச் சேர்ந்து அதினொருகெபியில்ஒளித்திருந்தான். (௧. இரா. ௧௯. ௮.

௪௬. அப்பொழுது யெகோவா இலீசாவே, நீ இங்கே என்னசெய்கிறாயென்றுகேட்க, அ

* யாக்கோபு ௫. ௧௮. ௨௯௧

மியர் இவனை விட்டுத் தங்களுக்கொரு இராசா வை ஏற்படுத்திக்கொண்டதை இவன் அறிந்து தன் தளங்களுடனே போய் அவர்களைச் சயங் கொண்டான். ஆகிலும் அவர்கள் இவனுக்கு வசப்படவும், தங்கள் அதிகாரத்தை விட்டுவி டவுமில்லை. பின்பு லிப்னுசனங்களும் அப்படி யே செய்தார்கள். இவனே சகல யூதரும் யெ கோவாவை விட்டுச் சோரமார்க்கமாய் நடக்கி றதற்கு காரணமானன். (௨. நாளா. ௨௧. ௧௧.

௧அ. அப்பொழுது நீ யூதரையும், யெருஷலே மியரையும் சோரமார்க்கமாய் நடக்கப்பண்ணி உன் சகோதரரையுங் கொன்று கொடுமையாய் நடந்தபடியால் யெகோவா உன் சனங்களையு ம், உன் மனைவியரையும், உன் பிள்ளைகளையும், உன் திரவியங்களையும் நசிப்பார். நீயும் குடர் நோய்கொண்டு மரிப்பாயென்று யெகோவா சொல்லுகிறாரென்று இலீசாத் தீர்க்கதரிசிசொல் லி அனுப்பினன். பின்பு இவனுக்கு விரோத மாய்ப் பெலிஸ்தியரும், அரபியரும் எழும்பி யூ தாவை வளைந்து அரண்மனையிலுள்ள சகல பொருள்களையும் அவன் மனைவியரையும் யோ வாகாசென்றும், அகஸ்யாவென்றும், அசரியா வென்றும்பெயர்கொண்ட இளையகுமாரன் ஒரு வனையல்லாமல் மற்றப்புத்திரர் யாவரையும்கவ ர்ந்துகொண்டு போனர்கள். இவைகளெல்லாஞ் சம்பவித்தபின்பு அவனுக்குக்கொடிய நோயுஉ ண்டாய் குடர்களெல்லாம் சரிய, நாற்பது வய தளவில் மரித்தான். (௨. நாளா. ௨௧. ௨0.

வன் யெகோவாவே, இஸ்ரவேலர் உமது உட
ன்படிக்கையைத்தள்ளி உமது தீர்க்கதரிசிகளைக்
கொன்றுபோட்டார்கள்; என்னையுங் கொல்ல
வகைதேடுகிறார்கள் என்றான். அதற்கு அவர் நீ
எழுந்து மலையின்மேல் ஏறி நில் என்றார். அப்ப
டியே அவன்மலையின்மேல் ஏறி நிற்கையில்பெ
ருங்காற்றுஎழும்பிக்கன்மலைகளைத் துண்டுதுண்
டாக்கிற்று. அதிலும் யெகோவா காணப்படவி
ல்லை. பின்பு பூகம்பம் உண்டாயிற்று. அதிலும்
அவரில்லை. பின்பு அக்கினிச் சுவாலை உண்டா
யிற்று. அதிலும் அவரில்லை. பின்பு மந்தமா
ருதமுண்டாக, அவன்கண்டு தன்முகத்தைமூடி
நிற்கையில் இலீசாவே, இங்கே என்னசெய்கி
றாய்? நீஎழுந்து தமஸ்கு வழியாய்ப்போய் அசா
வேலை சூரியாவுக்கு இராசாவாகவும், யெகூ
வை இஸ்ரவேலருக்கு இராசாவாகவும், இலீஷா
வைத் தீர்க்கதரிசியாகவும் அபிஷேகம்பண்ணு.
அசாவேலுக்குத் தப்பினவர்களை யெகூவும், யெ
கூவுக்குத் தப்பினவர்களை இலீஷாவும் கொல்
லுவார்கள். இஸ்ரவேலரில் பாகாலை வணங்கா
த ஏழாயிரம்பேர் இன்னுமுண்டு என்றார்.

(க. இரா. ௧௯. ௧௮.

௧௭. அப்பொழுது இலீசா எழுந்து புறப்பட்
டு இலீஷாவைக் கண்டு தன் உத்தரீகத்தை அவ
ன்மேலிட, அவன் தான் உழுத ஏர்க்குண்டை
யைப் பலியாகச் செலுத்திவிட்டு இலீசாவைப்
பின்பற்றிவந்தான். அப்பொழுது இலீசா இ
லீஷாவுடனே யெகோவா என்னை எடுத்துக்
கொள்ளமுன் நான் உனக்குச் செய்யவேண்டு

௧௯. இவனுடையஇடத்திற்குஇவன்புத்திரனுகிய அகஸ்யாஇராசாவானுன். யோவர் காஸ்என்றும் அசரியாவென்றும்பெயர்கொண்ட இந்த அகஸ்யா இருபத்திரண்டுவயதிலே இராசாவாகி ஆகாப்பின் வழியிலே நடந்து ஆகாப்பின் புத்திரனுன யெகோராமுடன்கூடி சூரியாவின் இராசாவாகிய அசாவேலுடனே யுத்தம்செய்தபொழுது ஆகாப்பின் புத்திரனுன யெகோராம் காயப்பட்டு யெஸ்ரியேலுக்குப் போயிருக்க, இந்த அகஸ்யா அவனைப் பார்க்கும்படிபோனுன்.

(௨. நாளா. ௨௨. ௭.

௨௦. இவ்விருவரும் யெஸ்ரியேலில் இருக்கையில் ஆகாப்பின் சந்தானசேதம் பண்ண;யெகோவாவினுல் ஏவப்பட்ட யெகூ வர, அவன் ஒளித்து ஷமாரியாவுக்கோடினுன். யெகூவுடைய படைஞர் அவனைப்பிடித்து யெகூவிடத்திற்கொண்டுவர, யெகூ அவனைக் கொல்லுவித்தான். இறந்துபோன அகஸ்யாவுடைய மாதாவாகிய அத்தாலியாள் இதின் நிமித்தம் குரோதங்கொண்டு யூதாவின் இராசபுத்திரர் யாவரையுங் கொல்லுவித்தாள். (௨. நாளா. ௨௨. ௧௦.

௨௧. இவள் சங்காரஞ்செய்வதை இந்த அகஸ்யாவுடைய சகோதரியாகிய யோஷ்பியாத்அறிந்து இவனுடைய இளைய புத்திரனுகிய யோவாஷை எடுத்துப் பள்ளி அறையில் மறைத்து வைத்துத் திரும்பத் தேவாலயத்திற் கொண்டுபோய் ஆறு வருஷமட்டாக அங்கே வைத்துப்

வதென்னவென்று கேட்டான். அதற்கவன் உம்மிலுள்ள ஆவியிலும் இருமடங்கு எனக்குக் கிடைக்கவேண்டும் என்றான். அதற்கு இலீசா நான் எடுத்துக்கொள்ளப்படுவதை நீ காணப்பெற்றால் நீ பிரார்த்தித்தபடி உனக்காகும். இல்லாவிட்டால் ஆகமாட்டாதென்று சொல்லிப்போகையில் அக்கினிமயமான இரதமும் குதிரைகளும் அவ்விருவருக்கும் நடுவே தோன்ற, இலீசா சுழல்காற்றினால் எடுபட்டு வானத்துக்குப்போனான். அதை இலீஷா கண்டான். பின்பு இலீசாவுடைய மேலங்கி உயரவிருந்து விழ இலீஷா எடுத்து அதைக்கொண்டு யோர்தான்நதியை அடிக்க, அது பிரிந்து வழிவிட்டது. மேலும் சூரியா இராசாவுடைய மந்திரியாகிய நாமானுடைய குஷ்டரோகத்தை யோர்தானிலேஸ்நானம்பண்ணுவித்துச்சுகப்படுத்தி, கேயாசிக்கு குஷ்டரோகம்வரச்செய்து கோடரியைச் சலத்திலே மிதக்கப்பண்ணி, சூரியரின் சேனைகளைக்குருடாக்கி, உவர்நீரில்உப்பிட்டுச் சுத்தசலமாக்கி, வறிய விதவைவைத்திருந்தஒரு பாத்திரம்நிறைந்த எண்ணெய்ப் பெருக்கத்தினால் அனேக பாத்திரங்களை நிரப்பி, அவளுடைய கடமையையும் தீர்த்து, அவளையும் அவளுடைய பிள்ளைகளையுஞ் சீவிக்கச்செய்து, ஒருஸ்திரியின் புத்திரனை உயிர்த்தெழுப்பி, நஞ்சுப்போசனத்தை அமுதாக்கி, இருபது அப்பத்தைக்கொண்டு நூறுபேரைத் திருத்திப்படுத்தி, இப்படி இன்னும் பல அற்புதங்களை இலீஷா செய்தான். இப்படியேயிவன் அகஸ்யா இராசாவான காலந்துவங்கி யோவாசுடைய காலம்மட்டும் தீ

பரிபாலித்தாள். அக்காலத்தில் அத்தாலியாளே அரசாண்டாள்.  (௨. நா. ௨௨. ௪௨.

௨௨. ஏழாம் வருஷத்திலே யோயதா என்னும் ஆசாரியன் அகஸ்யாவின் புத்திரனாகிய யோவாஷை இராசாவாக அபிஷேகம்பண்ணி அவனுக்குப் படைசனங்களையும் பரிவாரங்களையும் ஏற்படுத்தி, சனங்கள் யாவரும் வந்து அவனை வாழ்த்த அந்த வாழ்த்துதலின் சத்தத்தை அத்தாலியாள் கேள்விப்பட்டு, இராசதுரோகம்! இராசதுரோகம்! என்றுசொல்லிக்கொண்டு தேவாலயத்தில் வர, ஆசாரியனாகிய யோயதா அவளைத் தேவாலயத்துக்குப் புறம்பே அகற்றிக் கொல்லுவித்தான்.  (௨. நாளா. ௨௩. ௧௫.

யோவாஷ்.

௨௩. பின்பு யோயதாவும், யோவாசும், சனங்களும் ஒருமனப்பட்டுப் பாகாலின் ஆலயங்களை இடித்து, வேதிகைகளை உடைத்து, விக்கிரகங்களைத் தகித்து, பாகாலின் ஆசாரியரையுங் கொன்று, அசுசியானவர்கள் தேவாலயத்திற் பிரவேசியாமற் தடுத்து யெகோவாவுக்குப் பலியிடும்படி தாவீது ஏற்படுத்திய ஆசாரியரையும் லேவியரையும் ஏற்படுத்தியபின்பு யாவரும் ஒருங்குகூடி இராசாவை அழைத்துக் கொண்டுபோய் சிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தார்கள். (௨. நாளா. ௨௩. ௨௦.
பின்பு இவன் யோயதாவின் புத்திரிகளை விவாகஞ்செய்து தேவாலயத்தைப் புதுப்பிக்கும்படி சனங்களிடத்திலே மகமைதண்டித் தேவாலயத்தையும் அதின் பணிமுட்டுக்களையும் திருத்திப் பலியுமிட்டார்கள்.  (௨. நாளா. ௨௪. ௧௪.

ர்க்கதரிசியாயிருந்தான். (௧. இரா. ௧௯. ௨௧.) பின்பு சூரியாவின் இராசாவாகிய பென்னாதத் தனக்குத் துணையாக முப்பத்திரண்டு இராசாக்களையுஞ் சேர்த்துக்கொண்டு தளங்களுடனேவந்து, ஷமாரியாவை முற்றிக்கைபோட்டுக்கொண்டு இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப்புடனே உன்னுடைய திரவியங்களையும், மனைமக்கள்யாவரையும் என்வசமாகக் கொண்டுவரும்படி ஆட்களை அனுப்புகிறேன். அந்தப்படி அனுப்பு என்றுசொல்லி அனுப்ப, அவன் சம்மதியாமல் அவனுடனேயுத்தத்துக்குப் புறப்பட்டுப்போய்ப் பென்னாதத்தும் சனங்களும் குடித்து வெறித்திருக்கையில்அவர்களிலனேகரைச்சங்கரித்தான்; அவர்கள்தோற்றோடினார்கள். (௧. இ. ௨௦. ௨௧.

௧௮. அப்பொழுது ஒருதீர்க்கதரிசி ஆகாப்பிடத்தில்வந்து சூரியர் வருகிறவருஷமும் உம்மோடெதிர்க்க வருவார்கள். அதற்கு நீர் எச்சரிக்கையாயிருமென்று எச்சரித்தான். (௧. இரா. ௨௦. ௨௨.) அப்படியே மற்றவருஷமும் பென்னாதத் இஸ்ரவேலின் தேவன் மலையின்தேவன், ஆகையால் நாம் இனிச் சமபூமியிலேபோய் எதிர்ப்போமென்று யோசித்துத் தளங்களுடனே அப்பெக் நகரத்துக்குப்போயிருக்கையில் ஒருதீர்க்கதரிசி ஆகாப்பிடத்தில்வந்து யெகோவா மலைகளுக்குத் தேவனேயன்றிச் சமபூமிக்குத் தேவனல்லவென்று சொல்லிக்கொண்டு, சூரியர் சமபூமியில் வந்திருக்கிறபடியால் நான் அவர்களை உன் கையில் ஒப்பிப்பேன். நீ யுத்தத்துக்குப் புறப்படு என்று யெகோவா சொல்லுகிறார் என்றான். (௧. இ. ௨௦. ௨௮.

௨௪. ஆசாரியனாகிய யோயதா நூற்றுமுப்பது வயதாய் மரித்தபின்பு யூதாவின் பிரபுகளுடைய வேண்டுதலுக்கு யோவாஷ் இணங்கி விக்கிரகாராதனைக்கு இடங்கொடுத்ததினால் சகரியாவென்னுந் தீர்க்கதரிசி நீங்கள் யெகோவாவை விட்டபடியால் அவரும் உங்களைக் கைவிட்டார் என்றான். அதினிமித்தம் இராசாவுஞ் சனங்களும் ஒருமித்துச் சகரியாவைக் கல்லெறிந்து கொன்றார்கள். அப்பொழுது சூரியருடைய சேனைகள் வந்து இவர்களுடைய பிரபுக்களையுங்கொன்று தேசத்தையுங் கொள்ளையாடிக்கொண்டு தமஸ்குவுக்குப் போனார்கள். அதன்மேல் யோவாசுடைய பணிவிடைக்காரர் நோய்ப்பட்டுக்கிடந்த யோவாஷைக் கொன்றார்கள். (உ. நாளா. உ௪. உ௫.

௨௫. யோவாஷின் புத்திரனாகிய அமத்சியா இருபத்தைந்து வயதிலே இராசபட்டத்துக்கு வந்து தன் பிதாவைக் கொன்றவர்களையுஞ் சங்காரம்பண்ணி யூதாவிலும் பேன்யாமீனிலும் மூன்று லட்சம்பேரைத் தனக்குச் சேனைகளாக்கிக்கொண்டதுமன்றி, இஸ்ரவேலில் ஒருலட்சம்பேரைக் கூலிப்படையாகவுஞ்சேர்த்துக்கொண்டு ஏதோமியருடனே யுத்தத்துக்குப் புறப்படுகையில், ஒரு தீர்க்கதரிசி வந்து நீர் இஸ்ரவேலரை உமக்குத் துணையாகக் கொண்டு போனால் யெகோவா உம்மைக்கைவிடுவாரென்றான். அப்பொழுது அமத்சியா இஸ்ரவேலரைத் தங்கள் தேசத்துக்கனுப்பி ஏதோமுக்குப் போக, இஸ்ரவேலர்

கி. அமத்சியா.

௧௯. அதைக்கேட்டு ஆகாப்பெழுந்து தளங்களுடனேபோய் சூரியரில் ஒருலட்சம் சனங்களைக்கொன்றான். அதற்குத் தப்பின சனங்களில் இருபத்தேழாயிரம்பேர் ஒருமதில்விழுந்துநாசமானார்கள். பெனாதத் தப்பி ஓடியிருக்கையில் அவனுடைய தாசர்கள் அவனிடத்தில் உத்தரவுபெற்று, தங்கள் இடையில் இரட்டுக்களை உடுத்தி, தலையிலே கயிறுகளைச் சுற்றிக்கொண்டு ஆகாப்பிடத்திற்போய் உமது தாசனாகிய பெனாதத் தனது சீவனைக் காக்கும்படி உம்மைவேண்டிக்கொள்ளுகிறாரென்று சொன்னார்கள். அதை ஆகாப்கேட்டு அவனோடே சமாதான உடன்படிக்கை பண்ணிக்கொண்டு அனுப்பிவிட்டான். (௧. இரா. ௨௦. ௬௪.

௨௦. இப்படி இவன் உடன்படிக்கைபண்ணிக்கொண்டு திரும்பி வருகிறவழியில் ஒருதீர்க்கதரிசிவந்து தன்முகத்திலே சாம்பலையுமிட்டுவேஷம்மாறி நின்றுகொண்டு நான் யுத்தத்தில் நின்றபொழுது ஒருமனிதன் வேறொருவனைஎன்னிடத்திற் கொண்டுவந்து; நீ இவன் தப்பிவிடாமற் காத்துக்கொள். இவன் தப்பிவிட்டால் இவன்பிராணனுக்காக உன்பிராணன் வாங்கப்படுமென்று என்வசத்திலேதந்தான். நான்பராக்காயிருக்கையில் அவன் தப்பிவிட்டானென்றான். (௧. இரா. ௨௦. ௪௦.

௨௧. அதற்கு ஆகாப் நீ சொன்ன தீர்ப்பே உனக்கு வருமென்றுசொல்ல, தீர்க்கதரிசிமுகத்தின் சாம்பலைத் துடைத்துத் தன் சுயவேஷத்தை

வைராக்கியங்கொண்டு யூதாவிலே போய் மூ
வாயிரஞ்சனங்களைக் கொன்று தேசத்தையுங்
கொள்ளையிட்டார்கள். அமத்சீயாவோ ஏதோ
மியரின் விக்கிரகங்களைக் கொண்டுவந்து தன்
தேசத்தில் ஸ்தாபித்து அவைகளை நமஸ்கரித்து
வந்ததை ஒரு தீர்க்கதரிசி அறிந்து வந்து இவனை
எச்சரித்தும் தன் விக்கிரகாராதனையை வெறுத்
துவிடாதவனாயிருக்கையில் வீர வெறிகொண்
டவனாய் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவா
சுடனே போர்க்கறைகூவி அனுப்ப, யோவா
ஷ் லிபானோனிலுள்ள குருக்கத்திச் செடி அதி
லுள்ள ஏரஸ்மரத்துடனே நீ உன் புத்திரியை
என் புத்திரனுக்கு விவாகம்பண்ணிக்கொடு எ
ன்று கேட்டது. மலையிலுள்ள ஓர் மிருகம் வ
ந்து அதை மிதித்துப்போட்டது. அதுபோல
நீ ஏதோமியரைச் செயங்கொண்டதினிமித்தம்
வந்த உன் கெறுவமும் அடங்கிப்போம். ஏ
ன் கேடு தேடுகிறாயென்று சொல்லி அனுப்பி
னான். (உ. நாளா. உரு. ௧௯.

உ௯. இவன் அதை மதியாமல் இஸரவேலி
ன் இராசாவுடனே போய் எதிர்த்து யுத்தஞ்செ
ய்ய, யூதர் தோற்றோடினார்கள். அமத்சீயாவோ
இஸ்ரவேலரின் கையில் அகப்பட்டான். அ
வர்கள் யெருஷலேமிலே புகுந்து அதின்மதிலை
நானூறு முழமளவுக்கு இடித்துத் தேவாலயத்தி
லும் அரண்மனையிலும் இருந்த திரவியங்களை
யும் கொள்ளையள்ளிக்கொண்டு, அமத்சீயாவுக்
குப் பிணைப்பட்ட கிரியாட்களையும் கூட்டிக்
கொண்டு ஷமாரியாவுக்குத் திரும்பினான். (உ.

க் காண்பித்துநின்று யெகோவா உன்கைக்கு ஒப்புவித்த பெண்ணுதத்தை நீ தப்பவிட்டபடியால் அவன்பிராணனுக்காக உன் பிராணனும், அவன் சனங்களுடைய பிராணனுக்காக உன் சனங்களுடைய பிராணனும் வாங்கப்படுமென்றான். அதைக்கேட்டு ஆகாப் துக்கத்துடனே ஷமாரியாவுக்குப்போய் அரசுசெய்திருந்தான். (௧. இரா. ௨0. ௪௬.

௨௨. இவன் அங்கேயிருக்கையில் இவனுடைய அரண்மனைக்குச் சமீபத்தில் நாபோத்என்பவனுடையதாயிருந்த திராட்சத்தோட்டத்தைத் தனக்காகத் தரும்படி நாபோத்தைக்கேட்க, அவன் இணங்காததின் நிமித்தம் ஆகாப் விசனப்பட்டு, தன்வீட்டுக்குவந்து துக்கித்துப் பட்டினியாயிருக்கிறதை அவன் மனைவியாகிய யெசேபேல் அறிந்து ஆகாப்பைத் தேற்றிக்கொண்டு, இந்தநாபோத் இஸ்ரவேலின் தேவனையும் இராசாவையுந் தூஷணித்தானென்று இரண்டு பொய்ச்சாட்சிகளை ஏற்படுத்தி அவனைக் கொன்று போடுங்களென்று நாபோத்தின் தேசத்து மூதியோருக்கும், பிரபுக்களுக்கும், ஆகாப் இராசா எழுதின நிருபமாக ஒரு நிருபம் எழுதி அவனுடைய கையொப்பமுமிட்டு அனுப்பினாள். (௧. இரா. ௨௧. ௧0.

௨௩. அதை அறிந்த பிரபுக்களும் மூதியோரும் அந்தநிருபத்திலே கண்டபடி செய்து அவனைக் கொன்றார்கள். ஆகாப்போ அவனுடைய திராட்சத் தோட்டத்தைச் சுதந்தரித்தான். (௧. இரா. ௨௧. ௧௬.) இந்தச் செய்தியை இலீசாத் தீ

நா. ௨௫. ௨௪.) பின்பு இவன் தனக்கு விரோ தமாய் யெருஷலேமியர் செய்த துராலோசனை யை அறிந்து இவன் லாகீசுக்கு ஓடிப்போக, அ வர்கள் தொடர்ந்துபோய் இவனைப் பிடித்துக் கொண்டு யெருஷலேமுக்கு வந்தார்கள்.
(௨. நா. ௨௫. ௨௮.

௬௦. ஊசியா.

௨௭. அதின்பின்பு அமத்சீயாவுடையபுத்தி ரன் ஊசியா என்னும் அசரியா பதினாறு வ யதில் இராசாவாகி யெகோவாவின் விதி ப்படி நடந்து ஏலோத்நகரத்தைக் கட்டிப் பெலிஸ்தியருடன் யுத்தஞ்செய்து வென் று, அரபியரையும், மெயூனியரையும், அம்மோ னியரையும் வசப்படுத்திப் பயிர்ச்செய்கையில் விருப்பமுள்ளவஞ்கிப் பலவகை முஸ்தீதுக ளைச் சம்பாதித்து அம்புகளையும் கற்களையும் பி ரயோகிக்கிற இயந்திரங்களைக் கோபுரங்களிலு ம் மதில்களிலும் நிலைப்படுத்தினான். இப்படி இவன் பலபராக்கிரமனாய் இருக்கையில் ஆண வங்கொண்டு யெகோவாவுக்குத் தூபங்காட்டு ம்படி வேதிகையின்மேல் ஏற, உடனே குஷ்ட ரோகம் பிடித்து அகற்றப்பட்டான். அவனு டைய இடத்துக்கு அவன் புத்திரனாகிய யோ தாம் அரசனானான். (௨. நா. ௨௬. ௨௧.

௬௧. யோதாம்.

௨௮. இவன்இருபத்தைந்துவயதில்இராசா வாகி அனேக கோட்டை கோபுரங்களையு ங்கட்டிப் பதினாறு வருஷம் அரசாண்டு ம ரித்தான். இவனுக்குப் பின் இவன் புத்தி ரனாகிய ஆகாஸ் இராசாவானான்.
(௨. நாளா. ௨௭.

ர்க்கதரிசி அறிந்து தேவகட்டளைப்படி ஆகாப் பிடத்தில்வந்து நாபோத்தின் இரத்தத்தை காய் கள் நக்கினதுபோல உன் இரத்தத்தையும் நாய் கள்நக்குமென்றுசொல்ல, *ஆகாப் என் சத்துரு வே, நீ என்னைக் கண்டுபிடித்தாயாவென்றான். அதற்கவன் நீயெகோவாவின் பார்வைக்குத் தீ ங்குசெய்தாய். அவர்உன்னையும் உன்சந்ததியை யும் நாசமாக்குவாரென்றான்.(க.இரா. உக.உச.

உச. அதைக்கேட்ட ஆகாப் தன் வஸ்திரங்க ளைக் கிழித்து இரட்டைப் போர்த்து உபவாசித் து சஞ்சலமுடையவனாய் நடக்கிறதை யெகோ வாஅறிந்துஇரங்கி நான் இவனுக்குத் தீர்மானித் த தீங்கை இவன் சந்தானத்தில் வருவிப்பேன் என்றுசொன்னார். (க. இரா. உ௦. உஅ.) மூன் றாம் வருஷத்தில் இவன்யூதஇராசாவாகிய யோ ஷாபாத்தையுஞ் சேர்த்துக்கொண்டு சூரியருட னே யுத்தத்துக்குப்போய் இறந்தான். அதிலேந டந்தசங்கதி (க௦. கக. கஉ. க௩.) பாடங்களி ற் காணலாம். (க. இரா. உஉ.

அகஸ்யா. உரு. ஆகாப் இறந்தபின்பு அவன்புத்திரனா கியஅகஸ்யா இஸ்ரவேலருக்கு இராசாவாயி ருக்கையில் தன் மேல்மாடத்திநின்றுவிழுந் து வருத்தமாயிருந்ததினால் தனக்கு அந்தவரு த்தம்சுகமாகுமோவென்று பாகால் சிபூப்பை க்கேட்க ஆளனுப்பினான். அப்பொழுது இலீ சாத்தீர்க்கதரிசி அவர்களுக்கெதிர்ப்பட்டு உங் கள் இராசா யெகோவாவை விட்டுப் பாகால்சி பூப்பைப் பற்றிக்கொண்டபடியால் அவன் கி

* க. இரா. உஉ. ௩அ.

௧௨. ஆகாஸ்.

௨௯. ஆகாஸ்இருபதுவயதில்இராசாவாகி அதிக்கிரமமுள்ளவனுய்ப்பாகால்களுக்குவி க்கிரகங்களை உண்டாக்கி ஆராதனைசெய்து அவைகளை வணங்கிப் பதினாறு வருஷம் அரசாண்டான். இவனுடைய ஆளுகை யின் காலத்தில் இஸ்ரவேலின் இராசாவா கிய பெக்கா யூதாவுக்கு வந்து ஒரேநாளில் ஒரு லட்சத்திருபதினாயிரம் பேரைக் கொன்று, இர ண்டிலட்சம்பேரைச் சிறைப்படுத்தி, திரவிய ங்களையுங் கொள்ளைகொண்டு ஷமாரியாவுக்கு ப்போக, ஒதெத்தென்னுந் தீர்க்கதரிசிஅவர்களை ச் சந்தித்து நீங்கள் இந்தச் சனங்களைச் சிறைக ளாக்குவது நல்லதல்லவென்று எச்சரித்தான். இஸ்ரவேலின் பிரபுக்களிற் சிலரும்அவர்களை எ திர்த்துத் தடுத்தார்கள். அதினால் அவர்கள் சி றைப்பட்டுப்போன சனங்களுக்கு வேண்டிய சகாயமெல்லாஞ் செய்து அனுப்பிவிட்டார்க ள். (௨. நாளா. ௨அ. ௧௫.

௩௦. இப்படியே யூத ராசாவாகிய ஆகா ஸ் இடுக்கண்பட்டு அஷூரிய இராசாவின் சகா யத்தைத் தேடி யெகோவாவின் ஆலயத்திலும், அரண்மனையிலுமுள்ள திரவியங்களை எடுத்து, அசூரிய இராசாவாகிய திக்லாத்பிலேசருக்குக் கொடுத்ததுமன்றி, தமஸ்கூரார் வழிபட்ட தே வர்களுக்கு ஆராதனையுஞ் செய்தான். இன்னு மிவன் தேவாலயத்தின் பாத்திரங்களை எடுத்து உடைத்து ஆலயத்தின் கதவுகளை அடைத்து அ ன்னிய தேவர்களுக்கு வேதிகைகளைக் கட்டித் தெய்வத் துரோகமுஞ் செய்தான். அசூரிய இ

டக்கிற கட்டிலை விட்டு இறங்காமற் சாவாயெ
ன்றான். அதை அவர்கள் அவனுக்குச் சொல்ல,
அவன் இலீசாவைப் பிடிக்கும்படி ஐம்பது வீர
ரையும் ஒருதலைவனையும் அனுப்பினான்.
(உ. இரா. க. க0.

உ௬. அவர்கள் இலீசாவுக்கு முன்னே போய்
இராசாவுடைய கட்டளையை அறிவிக்க, அவ
ன் வானத்தினின்றும் அக்கினியிறங்கி இவர்க
ளைப் பட்சிக்கக்கடவதென்றான். உடனே அ
ப்படிச் சம்பவித்தது. அதை இராசா அறிந்து ம
றுபடியும் அவ்வளவு பேரை அனுப்பினான். அ
வர்களுக்கும் இலீசா அப்படியே சொன்னான்.
அவர்களும் அவ்விதமாய் மாண்டார்கள். ம
றுபடியும் இராசா அவ்வளவு பேரை அனுப்ப,
அவர்கள்போய் இலீசாவுக்குமுன்பாக முழங்
தாட்படியிட்டு நின்று, எங்கள் பிராணன் உமக்
கு அரிமையாயிருக்கக் கடவது. இராசாவுடை
ய அழைப்பை உமக்கு அறிவிக்கிறோமென்றா
ர்கள். (உ. இரா. க. க௪.

உ௭. அதைக் கேட்டு அவன் யெகோவாவின்
உத்தரவின்படி புறப்பட்டு அகஸ்யாவிடத்திற்
போய் நீ இஸ்ரவேலின் தேவனைவிட்டுப் பாகா
ல்சிபூப்பைப் பற்றினபடியால் நீ கிடக்கும் க
ட்டிலைவிட்டு இறங்காமற் சாவாயென்றான். அ
ந்தப்படியே அவன் இறந்தான். (உ.இரா.க.க௭.

யெகோராம்.

உஅ. இவனுக்குப்பின்பு இவன் சகோத
ரனும் ஆகாப்பின் புத்திரனுமாகிய யெகோ
ராம் அரசாளத் தொடங்கி துராசாரமாய் நட
ந்துவருகையில் மோவாபியர் அடங்காதாரா

ராசா இவ்வளவு வெகுமதிகளைப் பெற்றும் இ
வனுக்கு யாதொரு சகாயமுஞ் செய்யவில்லை.
(௨. நாளா. ௨௮. ௨௧. ௨௭.

௯. இஸ்கியா.

௯௧. இவன்மரணமடைந்தபின்புஇவன்பு
த்திரனாகியஇஸ்கியாஇருபத்தைந்துவய்தில்
யூதாவை அரசாளத்தொடங்கித் தேவாலயத்
தின் கதவுகளைத் திறந்து ஆசாரியர்களையும்
லேவியரையும்நியமித்துத்தேவாலயத்தைச்சு
த்தம்பண்ணிப் பிராயச்சித்தப் பலிகளையும்,
ஸ்தோத்திரப்பலிகளையும்,செய்நன்றிப்பலிகளை
யும் செலுத்திப் பஸ்காஉற்சவத்தையுங் கொண்
டாடியெகோவாவைச் சேவியுங்கள்; அப்பொ
ழுது அவருடைய உக்கிரகோபம் உங்களைவிட்
டுநீங்கும். அவர் காருண்ணிய தயாபரர். நீங்
கள் அவரிடத்திற் திரும்பினுல் அவர் உங்களு
க்குப் பராமுகமாகார். உங்கள் சகோதரரும்
உங்கள் பிள்ளைகளும் தங்கள் சிறையிருப்பிலி
ருந்து மீட்சி பெறுவார்களென்று தேசமெங்கு
ம் பிரசித்தப்படுத்துவித்தான். (௨. நா. ௨௯. ௧௧.

௯௨. இப்படியே யாவரையும் ஒருமனப்படுத்
தித் தேசமெங்குமுள்ள விக்கிரகங்களைத் தகர்த்
து அங்குள்ள வேதிகைகளை இடித்து அஷரிமர
ங்களைத்தறித்து தேசத்தைச் சுத்தமாக்கி, தேவனு
டைய பார்வைக்கு உத்தமனுய் நடந்துவருகை
யில்அசூரிய இராசாவாகிய சனகெரிப் யுத்தத்து
க்குஆயத்தமாய் வருகிறதை இஸ்கியா அறிந்து ந
கரத்துக்குப் புறம்பேயுள்ள நீர் நிலைகளைத் தூர்த்
து இடிந்த மதில்களையுங்கட்டி அசூரியருடைய
பெலன் மாமிசம்; நமது பெலன் யெகோவா;

ய் நடந்ததினாலே இவன் யூத இராசாவாகிய யோஷாபாத்தைத் தனக்குத் துணையாகச் சேர்த்துக்கொண்டு ஏதோமின் வனாந்தர வழியாய்ப் போகையில் தண்ணீர் கிடையாமல் வருந்தி இலீஷாத்தீர்க்கதரிசியிடத்திற்போய்க்கேட்டு அவனுடையவாக்கின்படி நீர்வாய்க்கால்களைத்தோண்டிச்சலபானம்பண்ணி யுத்தத்துக்குப் புறப்பட்டுப்போய்ப்பாளயமிறங்கியிருக்கையில் மோவாபியர் யுத்தத்துக்கு வந்து இவர்களுடைய பாளயப்புறத்திலுள்ள நீர் நிலைகள் சூரிய கிரணத்தினால் சிவப்பாய்த் தோன்றினதைக் கண்டு நமது சத்துருக்கள்தங்களைத்தானே எதிர்த்து ஒருவரையொருவர் கொலைசெய்தார்கள். அதினால் இரத்தம் பிரவாகமாயிருக்கிறதென்று நினைத்து இவர்களுடைய பாளயத்திற் புகுந்து அவர்களுடைமைகளைக் கொள்ளையாடுவோமென்று துணிந்து இஸ்ரவேலின் பாளயத்துக்கு வந்தார்கள்.

(உ. இரா. ௬. ௧. உ௬.

உ௯. இஸ்ரவேலரோ எழுந்து மோவாபியரைத்துரந்து, அவர்கள் தேசத்திற்புகுந்து நகரங்களை இடித்து, கிணறுகளைத் தூர்த்து, மரங்களைத் தறித்து சருவநாசஞ்செய்தார்கள். அதைக் கண்ட மோவாபிய இராசா ஏதோமின் இராசாவிடத்துக்குஅடைக்கலம்புக விரும்பியும் இடம்பெறாததினாலே தனது பட்டத்துக் குமாரனைப் பிடித்து மதிலின்மேல் தகனப்பலியாகச் செலுத்தினான். அதினாலே இஸ்ரவேலர் அவனைவிட்டுத் தங்கள்தேசத்துக்குத் திரும்பினார்கள். இவன் அரசாண்ட பன்னிரண்டாம் வருஷத்தில் இலீஷாத்தீ

ஆகையால் நீங்கள் பயப்படாமற் தைரியங்கொண்டிருங்களென்று யாவரையுந் தைரியப்படுத்தினன். (உ. நாளா. ௩௨. அ.

௩௩. அப்பொழுது சனகெரிப் லாகீசைத் முற்றிக்கைபோட்டிருந்துகொண்டு நீங்கள் யெருஷலேமிலே எப்பொழுதுந் தங்குவீர்களா? நானும் என் பிதாக்களும் அன்னியதேசத்துக்கென்னசெய்தோமென்று உங்களுக்குத் தெரியாதா? அவர்கள் தேவர்கள் அவர்களை என்கைக்கு விடுவித்தார்களா? எந்தத் தேவனுந் தன் சனங்களை என்கைக்கு விடுவிக்ககூடாதிருக்க, உங்கள் தேவன் உங்களை என் கைக்கு விடுவிப்பாராவென்று எழுதிய காகிதங்களை அனுப்பி யாவரையுங் கலக்கினன். (உ. நா. ௩௨. ௯. ௧௯.

௩௪. அதை அறிந்த இஸ்கியாவும் எசாயாத் தீர்க்கதரிசியும் யெகோவாவை நோக்கி ஓலமிட, அவர் தமது தூதனை அனுப்பி சனகெரிப்புடைய சேனாபதிகளையும் யுத்தவீரர்களையும் சங்கரிப்பித்தார். அதினால் அவன் பயந்து தன் தேசத்துக்கோடினன்.* அங்கே அவன் புத்திரராகிய அத்ரமிலேக்கும், ஷரேத்சரும், அவனைச் சங்கரித்தார்கள். (எசாயா. ௩௭. ௩௮.

(உ. நா. ௩௨. உ௧.

௩௫. இப்படியே அந்த இஸ்கியா ராசேந்திரனாய் இருபத்தொன்பது வருஷம் அரசாண்டு மரணத்துக்கேதுவாயிருக்கையில், எசாயாத் தீர்க்கதரிசி வந்து சொன்ன எச்சரிப்பு வார்த்தையைக் கேட்டு இவன் யெகோவாவை நோக்

* எசாயா, ௩௭. ௩௭.

ர்க்கதரிசி தனதுமாணாக்கனும் தீர்க்கதரிசியுமாகி யஒருவனை அழைத்து நீ இந்த எண்ணெய்ப் பாத்திரத்தைக் கொண்டுபோய் நிம்ஷியின் பௌத்திரனாகிய யெகூவைக்கண்டு அந்தரங்கத்தில் அவன்தலையின்மேல் இந்தத் தைலத்தை அபிஷேகஞ்செய்து யெகோவா உன்னை இஸ்ரவேலருக்கு இராசாவாக்கிறாரென்று சொல்லித் தரியாமல் ஓடிவாவென்று சொல்லியனுப்பினான்.
(௨. இரா. ௯. ௩.

யெகூ. ௫0. ௩0. அவன்போய் யோஷாபாத்தின் புத்திரனை யெகூவைக்கண்டு அவனை வீட்டுக்கழைத்துக்கொண்டுபோய் இலீஷா அவனுக்குச் சொன்னபடியே அபிஷேகஞ்செய்து யெகோவா யெசேபேலின் கையில் சகலதீர்க்கதரிசிகளின் இரத்தப்பழிகளையும் வாங்கும்படி அவளுடைய கணவனாகிய ஆகாப்பின் வமிசத்தை யெரோபேயாமின் வமிசம்போலவும், பாஷாவின் வமிசம்போலவும் ஆக்குவாரென்றும்,யெஸ்ரியேலின் நிலத்திலே யெசேபேலின் மாமிசத்தை நாய்கள்தின்னுமென்றும் சொல்லுகிறாரென்று சொல்லிப் புறப்பட்டுப்போனான். யெகூ இப்படி அபிஷேகம்பெற்றுக் கொண்டு வெளியேபோய் தன்னுடைய கூட்டாளிகளண்டையில்வந்து இதை அறிவிக்க, அவர்கள் யெகூ இராசாவானானென்றுசொல்லி எக்காளமூதினார்கள். (௨. இரா. ௯. ௧௩.

௩௧. பின்பு யோராம் சூரிய இராசாவுடனே யுத்தஞ்செய்தபொழுது பட்டகாயத்தை ஆற்றும்படி யெஸ்ரியேலுக்குப் போயிருக்கையில்

கிப் பிரார்த்தித்தான். அவர் இவனுக்கு மேலும் ௧௫. வருஷ ஆயுளை அதிகப்படக் கூட்டி அதற்கு அடையாளமாகச் சூரிய கடிகாரத்தில் விழுகிற சாயை பத்துப்பாகைக்குப் (உ. நா. ௩௨. ௨௪.) பின்னிட்டு விழுந்திருக்கிறதைக் காண்பித்தார்.* (உ. இரா. ௨0. ௧. ௧௧.

௩௬. இப்படியே இவன் சொஸ்தமாயிருக்கையில் பாபிலோன் நகரத்து இராசா அனுப்பின வெகுமதிகளைக் கொண்டுவந்தவர்களுக்கு வீட்டின் சகல சம்பத்துக்களையுங் காண்பித்துச்சந்தோஷப்பட்டிருந்தான். இதை அறிந்து எசாயாத் தீர்க்கதரிசி வந்து சனங்கள் யாவரும் பாபிலோனுக்குச் சிறைப்பட்டுப்போவார்கள். உன் சந்ததியாரிற் சிலர் பாபேலின் அரண்மனையில் அண்ணகர்களாக்கி வைக்கப்படுவார்களென்றான். அதை இவன் கேட்டு அதுகாரியந் தன் காலத்தில் நடவாதென்று தேறியிருந்து பின்பு மரணமடைந்தான். அவனுக்குப் பின் அவன் புத்திரனாகிய மனாசே இராசாவானான்.

(உ. நாளா. ௩௨. ௩௩.

௩௭. மனாசே பன்னிரண்டு வயதில் இராசாவாகித் தன் பிதா அகற்றிவிட்ட விக்கிரகங்களையும் மற்றும் அஞ்ஞானங்களையும் பற்றிக்கொண்டு யெகோவாவை விட்டு விலகித் தன்னெறியாய் நடந்துவந்ததினால் அசூரிய இராசா வந்து மனாசேயைப் பிடித்துப் பாபிலோனுக்குக் கொண்டுபோய் விலங்கிட்டுவைத்தான். பின்பு அவன் யெகோவாவை நோக்கிப் பிரார்த்தித்ததினால் தெய்வச்

௧௫. மனாசே.

* எசாயா, ௩௮.

யெகூ தன்தளங்களுடனே வருகிறதைக் காவற்காரன் வழியாய்க்கேள்விப்பட்டுத் தன்னைப்பார்க்கவந்த யூத இராசாவாகிய அகஸ்யாவுடனே இரதத்திலே ஏறிக்கொண்டு யெகூவுக்கெதிராய்ப்போய்ச் சுகசெய்தியாவென்றுகேட்க, அவன் உன் மாதாவாகிய யெசேபேலின்விபசாரமார்க்கமும், மாயவித்தைகளும்உன்னோடிருக்க,என்ன சுகசெய்தி என்முன் அப்பொழுது யோராம் இராசத்துரோகமென்று சொல்லி இரதத்தைத்திருப்பிக்கொண்டோடுகையில் யெகூ எய்த அம்பு யெகோராமின் நெஞ்சை உருவிச்செல்ல, அவன் தன் இரதத்தில் விழுந்தான். (உ.இ.௯.உச.

௩௨. அவனை எடுப்பித்து நாபோத்தின் நிலத்தில் எறிந்து அகஸ்யாவையுந் துரந்துபோய்க் கொன்றுபோட்டுத் தானே இராசாவானான். இவன் இராச அதிகாரத்துடனே வருகிறதை யெசேபேல் கண்டு தன் ஆண்டவனைக் கொன்ற சிம்றி வாழ்வடைந்தானோ என்றாள். அதைக்கேட்ட யெகூ தன்பணிவிடைகாரரில் இருவரைவிட்டு அவளைப் பலகணியினின்று தள்ளி விழுத்துவிக்க அவள்மரித்தாள். இவனோ அவளைக்காலால் மிதித்துவிட்டு வீட்டுக்குப்போய்ப் போசனபானம்பண்ணியபின் அவளை அடக்கம் பண்ணும்படி ஆட்களை அனுப்பினான். அவர்கள் வந்து பார்த்தபொழுது அவளுடைய உள்ளங்கைகளும் கால்களும், மண்டையும்இருக்க,மற்றயாவற்றையும் இலீசாத் தீர்க்கதரிசி சொன்னபடி நாய்கள் தின்றுவிட்டதாகக்கண்டார்கள்.*

(உ. இரா. ௯. ௩௭.

* ௧. இராசா. உ௧ உ௩.

செயலாய் விடுதலைபெற்று யெருஷலேமுக்கு வந்து அதில் இடிந்த மதில்களையுங் கட்டுவித்து விக்கிரகங்களையும் அன்னிய தேவர்களையும் அகற்றி யெகோவாவுக்காராதனை செய்து வந்தான். இப்படியே இவன் ஐம்பத்தைந்து வருஷம் அரசாண்டு மரணமடைந்தான்.

௯௮. மனாசேயின்புத்திரனாகிய ஆமோன் இருபத்திரண்டு வயதில்இராசாவானான். இவனும் யெகோவாவுக்கு விரோதமாய் அஞ்ஞானமார்க்கமாய் நடந்து இரண்டுவருஷம் அரசாண்டு வருகையில் அவனுடைய இராச்சியத்துச் சனங்கள்தானே அவனைக் கொன்று அவனுடைய புத்திரனாகிய யோஷியாவை எட்டு வயசிலே இராசாவாக்கினார்கள். (உ. நா. ௩௩. உக. உச.

௧௭. ஆமோன்.

௯௯. யோஷியா சகல விக்கிரகங்களையும் பாகாலின் வேதிகைகளையும் நாசமாக்கி அவைகளின் ஆசாரியருடைய எலும்புகளை அந்த வேதிகைகளின்மேற் சுட்டுச்* சகல இடங்களுக்கும்போய் அங்கங்குள்ள விக்கிரகங்களை நாசப்படுத்தி யெகோவாவின் ஆலயத்தைப் புதுப்பித்து அந்த ஆலயத்தில் ஓர் நியாயப்பிரமாணப்புத்தகத்தைக்கண்டெடுத்துஅதைத்தீர்க்கதரிசியாகிய உல்தாள் என்னும் ஒரு ஸ்திரியினிடத்துக்கனுப்ப அவள் இவர்கள் தங்கள் விக்கிரகங்களினால் என்னைக் கோபப்படுத்தி அன்னிய தேவர்களுக்குத் தூபங்காட்டினபடியால், இதின்மேல் என் கோபம் மூளும். இந்தப் புத்தகத்தில் எழுதப்பட்ட சாபங்கள் யாவும் இ

௧௮. யோஷியா.

* ௧. இரா. ௧௩. ௨.

௯௯. பின்பு இவன் ஆகாப்புடைய புத்திரரில் ஒருவனை இராசாவாக்கிக்கொண்டு தன்னுடனே யுத்தத்துக்குவரும்படி ஒரு காகிதம் எழுதி ஷமாரியாவுக்கு அனுப்பினான். அவர்கள் இவனுக்குப்பயந்து நாங்கள் ஒரு இராசாவை ஏற்படுத்துகிறதில்லை. உமது சித்தப்படி நடப்போமென்று சொல்லி அனுப்பினார்கள். அதைஅவன் கேட்டு ஆகாப்பின் பிள்ளைகள் எழுபது பேருடைய தலைகளையும் வெட்டித் தன்னிடத்துக்கு அனுப்பும்படி ஒரு காகிதமெழுதி அனுப்ப, அவர்கள் அந்தப்பிரகாரம் அவர்கள்தலைகளை வெட்டி இவனிடத்துக்கனுப்பினார்கள். இவனே அவைகளை மறுநாள்மட்டுந் தன் வீட்டு வாசலிலே குவிப்பித்து வைத்துக் காலமே அவ்விடத்திற்போய்நின்று யெகோவா இலீசாவைக்கொண்டு சொல்லுவித்தபடி நடந்தேறிற்று,* அவருடைய வாக்கொன்றும் வீணாவதில்லையென்று சொல்லி ஆகாப்பின் வமிசத்தாரையும் பிரபுக்களையும் கொல்லுவித்தான்.

(௨. இரா. ௧௦. ௧௧.

௯௪. பின்பு இவன் ஷமாரியாவுக்குப்போய் யூத இராசாவாகிய அகஸ்யாவின் சகோதரர் நாற்பத்திரண்டுபேரையுங் கண்டு அவர்களையும் கொல்லுவித்து, யெகொனதாப்பைச்சந்தித்து அவனையுங் கூட்டிக்கொண்டுபோய் ஆகாப்பின் வமிசத்தில் மிச்சமானவர்களையுங் கொல்லுவித்து ஆகாப்பின் பாகாலுடைய தீர்க்கதரிசிகளையும் பூசாசாரிமாரையும் பிடிப்பித்து, தான் பாகாலுக்குப் பலிசெலுத்தப்போகிறேனென்று சொல்

* ௧. இரா. ௨௧. ௨௧.                ௨௮௱

ளிமேல் வரும். நீ மனஸ்தாபப்பட்டு என்னை ச் சார்ந்தபடியால் சமாதானமாய்ப் பிரேத அ றையைச் சாருவாய். இத்தேசத்திலும் இதின் குடிகளிலும் வருந் தீமையை உன் கண் காண மாட்டாதென்று சொல்லி அனுப்பினுள்.

(உ. நா. ௩௪. உ௩.–உஅ

௪0. அதைக் கேட்ட யோஷியாராசா சகல பிரதான சனங்களையும் அழைப்பித்து, கண் டெடுக்கப்பட்ட நியாயப்பிரமாணப் புத்தகத் தை வாசித்துக்காட்டி அதைப் பூரண இருதயத் தோடே அங்கிகரிக்கும்படி உடன்படிக்கைப ண்ணிக்கொண்டு தேசத்திலுள்ள சகல அஞ்ஞா னங்களையும் அகற்றி, பஷ்கா உற்சவத்தையும் ஆசரித்து, சலோமோன் நியமித்த பிரகாரம் சக லத்தையும் நிறுத்தினுன். (உ. நா. ௩௪. ௩௩.

௪௧. இதன் பின்பு எகிப்திராசாவாகிய நே கோ கர்கிமீஷுக்கு விரோதமாய் யுத்தஞ்செய்ய வந்த பொழுது, யோஷியா அவனோடே எதிரு ன்றினதினுல் அவன் நான் இன்றும்முடனே யுத்தஞ் செய்ய வரவில்லை. என் சத்துருக்களு க்கு விரோதமாய் யுத்தஞ் செய்யும்படி தேவன் எனக்குக் கட்டளையிட்டார். நீர் விலகிவிடா திருந்தால் அவர் உம்மை அழிப்பாரென்று சொ லி அனுப்பினுன். யோஷியா அதைக் கேளா மல் வேஷம்மாறி யுத்தத்துக்குப் போய்க் காய ப்பட்டதினுலே திரும்பி யெருஷலேமுக்கு வ ந்து மரணமடைந்தான். சகல யூதரும் இவனு க்காகப் புலம்பினுர்கள். எரேமியாவும் இவ னுக்காகப் புலம்பினுன். (உ. நாளா. ௩௫. உ௫.

லி யாவரையும் பாகாலின் ஆலயத்துக்குள் விட்டு அவர்கள் பாகாலுக்குப் பலியிடும்படிசெய்து, பின்பு யாவரையுங் கொல்லுவித்துப் பாகாலின் விக்கிரகங்களை எடுத்துச்சுட்டு அதின் ஆலயத்தையும் இடித்து அதை விச்சிராமவீடாக்கினான். இவைகளின் நிமித்தம் யெகோவா இவனை மெய்ச்சிக்கொண்டு இவனுடைய சந்ததியார் நாலாந் தலைமுறைமட்டும் இஸ்ரவேலரை அரசாளுவார்களென்று வாக்குப் பண்ணினார். இப்படியே இவன் இருபத்தெட்டுவருஷம் அரசாண்டு மரணமடைந்தான். (உ. இரா. ௧0. ௯௬.

௯௫. இவன் இறந்தபின் இவனுடைய புத்திரனாகிய யோவாகாஸ்இராசாவாகி அரசாண்ட பதினேழுவருஷமும் யெகோவாவுக்கு விரோதமாய் நடந்ததினால் சூரிய இராசாவாகிய அசாவேலினாலும், அவன்புத்திரனாகிய பென்னாதத்தினாலும், இடுக்கண்பட்டு வருந்துகையில் இவன் மனந்திரும்பிப் பிரார்த்தித்துச் சகாயம்பெற்றான்.

(உ. இரா. ௧௩. ௧. ௯.

௯௬. யோவாகாஸ் மரிக்க அவனுடையபுத்திரனாகிய யோவாஷ் இராசாவானான். இவன் அரசாண்ட பதினாறுவருஷமும் விக்கிரகாராதனையை விடாதவனாயிருந்து யூத இராசாவாகிய அமத்சீயாவுடனே யுத்தஞ்செய்துவென்று பின்புமரித்தான்.

(உ. இரா. ௧௩. ௯௯.

௯௭. இந்தயோவாஷ் மரணமடைய இவன் புத்திரனாகிய யெரொபேயாம் ஷமாரியாவி

௪உ. யோஷியாவுக்குப்பின்பு அவன்புத்திரனாகிய யோவாகாஸ் இருபத்து மூன்றுவயதில் இராசாவாக ஏற்படுத்தப்பட்டு அரசாளுங் காலத்தில் யெகோவாவை விட்டு விலகித் தீமை செய்ததினாலே எகிப்தின் இராசாவாகிய நேகோ இவனுடைய தேசத்தைத் தன் வசப்படுத்தித் திறைவாங்கினதுமன்றி இவ்ன் சகோதரனாகிய இலியாகீமுக்கு யோயாகீம் என்னும் மறு நாமமிட்டு யூதாவையும் யெருஷலேமையும் ஆளும்படி வைத்து, இவனைப்பிடித்து எகிப்துக்குக் கொண்டுபோனான். இவன் எகிப்திலேதான் மரணமடைந்தான். இவனுடைய ஆளுகை மூன்று மாத வரையில் நின்றுபோயிற்று. (உ. நாளா. ௩௬. ௪.

௧௭. யோவாகாஸ்.

௪௩. இந்தயோயாகீம் அரசாளுகையில் பாபிலோனின்இராசாவாகியநேபுகத்நெத்சர்வந்து இவ்னுடைய தேசத்தைஅடிப்படுத்திஇவ ன்தனக்குக்கப்பம்கட்டித்தனக்குக்கீழ் அதிகாரமாய் அரசாளும்படிவிட்டுப்போயிருக்க, இவன் அவனுக்காதீனமாயிராமற் சுயாதீனமாயிருக்கத் துணிந்ததினாலே திரும்பவும் நெபுகத்நெத்சர்வந்து இவனைப் பிடித்து விலங்கிட்டுப் பாபிலோனுக்குக் கொண்டுபோனதுமன்றி, தேவாலயத்தின் பாத்திரங்களையும் எடுத்துக்கொண்டு போனான். பின்பு இராச குலத்திலுள்ள சனங்களில் வாலிபரிற் சிலரைத் தெரிந்து தன் தேசத்துச் சாத்திரவித்தைகளைக் கற்பித்து, தன் தேசத்துக்கு அதிகாரிகளாகவும் ஏற்படுத்தினான். அவர்களுக்குள் தானியேல்,

௧௮. யோயாகீம்.

௬௩. யெரோபெயாம்.

லே நாற்பத்தொருவருஷம் அரசாண்டான். இவன் முந்தின யெரோபேயாமைப்போல யெகோவாவின் சமுகத்தில் அதிக்கிரமமுள்ளவனுயிருந்தும் அமித்தாயின் புத்திரனுகிய யோனுத்தீர்க்கதரிசி சொல்லிய பிரகாரம் சூரியருடைய கையிலிருந்து தமஸ்குவையும், ஆமாத்தையும் வசப்படுத்தி செயவீரனுய் மரணமடைந்தான்.

(உ. இரா. கச. உகூ.

௬௪. சகரியா.

௩அ. இவனுக்குப் பின் இவன் புத்திரனுகிய சகரியா இராசாவாகி ஷமாரியாவிலே ஆறுமாதம் அரசாண்டுவருகையில் யாபேஷின் புத்திரனுகிய ஷல்லும் இவனைக்கொன்று இவனுடைய இடத்துக்கு இராசாவானுன். (உ. இரா. கரு. அ. கo.

௬௫. ஷல்லூம்.

௩௯. ஷல்லும் ஷமாரியாவிலே ஒருமாதம் அரசாண்டுவருகையில் காதியின் புத்திரனுகிய மெனுகேம் இவனைக்கொன்று இஸ்ரவேலருக்கு இராசாவானுன்.

(உ. இராசா. கரு. அ. கo.

௬௬. மெனுகேம்.

௪o. மெனுகேம் ஷமாரியாவிலே பத்துவருஷம் அரசாண்டு வருகையில் அசூரியாவின் இராசாவாகிய பூல் வந்து அரணைவளைத்தபொழுது மெனுகேம் பயந்து பூலுக்கு வெகுமதிகொடுத்து அவனுடைய சகாயத்தையும் பெற்று இராசரீகம் செய்து மரணமடைந்தான். (உ. இரா. கரு. உஉ.

ஷாதிராக், மேஷக், ஆபேத் நிகோ என்பவர்க ளுமிருந்தார்கள்.          (௨. இரா. ௨௪. ௧௦—௧௯.

௧௯. யோயாகீன்.

௪௪. யோயாகீமுக்குப் பின்பு அவன் புத்திரனாகிய யோயாகீன் எட்டுவயதில் அரசாளத்தொடங்கி மூன்றுமாதமும் பத்துநாளும் அரசாண்டான். இதற்குள் இவன் தீங்காய் நடந்ததினால் நெபுகத்நெத்சர் இவனைப்பிடித்துப் பாபிலோனுக்குக் கொண்டுபோய் மறியற்படுத்திக்கொண்டு அவன் சகோதரனாகிய சிதிகியாவை இராசாவாக வைத்தான்.          (௨. இரா. ௨௪. ௧௨. ௧௯.

௨௦. சிதிகியா.

௪௫. சிதிகியா இருபத்தொருவயதில் இராசாவாகிப் பதினொரு வருஷமட்டாக அரசாண்டான். பின்பு இவன் தெய்வத்துரோகத்துக்கும் இராசத்துரோகத்துக்கும் உடந்தையானான். ஆசாரியர்களும் தேவாலயத்தை அசுசிப்படுத்தி அதிக்கிரமஞ்செய்ததினால் யெகோவா தமது தாசரைஅனுப்பி இவர்களை எச்சரித்தும் இவர்கள் கேட்டு மனந்திரும்பாததினால் கல்தேயரின் இராசாவாகிய நெபுகத்நெத்சர் தேவ ஏவுதற்படி வந்து தேவாலயத்தின் பணிமுட்டுக்களையும் தேசத்தையுங் கொள்ளையிட்டுத் தேவாலயத்தில் நெருப்பிட்டுச்சுட்டு யெருஷலேமின் மதில்களையிடித்து அரண்மனைகளைத் தகித்துச் சனங்களையுஞ் சங்கரித்து, மீந்தவர்களைச் சிறைப்பிடித்துப் பாபிலோனுக்குக் கொண்டுபோனான். அங்கே எழுபதுவருஷம் சிறையிருந்தார்கள். தேசமும் தேவாலயமும் பாழாய்க்கிடந்தது. *          (௨. நா. ௩௬.

* எரேமியா, ௨௫. ௪, ௧௪. ௨௮

கஎ. பெக்காகியா.

சக. பின்பு மெனுகேமின் புத்திரனுகிய பெக்காகியா இராசாவாகி இரண்டு வருஷம் அரசாண்டு வருகையில் இவனுடைய சேனுபதியாகிய பெக்கா இவனைக் கொன்று இவனுடைய இடத்துக்கு இராசாவானுன். (உ. இரா. கரு. உரு.

கஅ. பெக்கா.

சஉ. ரெமலீயாவின்புத்திரனுகிய பெக்கா இருபது வருஷம் அரசாண்டான். அசூரியஇராசாவாகிய திக்லாத்பிலேசர் தன் பிதாவாகிய பூல் செய்த நிரூபணத்தைத்தள்ளி இவனுடைய தேசங்களிற் சிலவற்றைப் பிடித்துச் சனங்களைச் சிறையாக்கி அசூரியாவுக்குக் கொண்டுபோனுன். (உ. இரா. கரு. உகூ.

கக. ஓஷியா.

சங. இப்படியிருக்கையில் ஏலாவின் புத்திரனுகிய ஓஷியா பெக்காவைக் கொன்று தானே அரசனுனுன். இவன் அரசாண்டு வருகையில் அசூரிய இராசாவாகிய திக்லாத்பிலேசருடைய குமாரனுகிய ஷல்மனேசர் வந்து ஷமாரியாவைப் பிடித்துஅதின் சனங்களையும் சிறையாக்கிக்கொண்டு போனுன். இவ்வளவில் இஸ்ரவேலிராச்சியம் நின்று அசூரியருக்காயிற்று. (உ. இரா. கஎ. க. உச.

இந்தப்பத்தொன்பது இராசாக்களும் அரசாண்ட, உருச. வருஷமளவாக இஸ்ரவேலிராச்சியம் நிலைநின்று பின்பு அசூரியருக்காயிற்று. (உ. இரா. கஎ. க. உச.

யூத இராச்சியமோ தாவீதின் காலந்தொடங்கிச் சிதிகியாவும் குடிகளும்சிறைப்பட்டநாள்மட்டுஞ் சென்ற, ௪௬௮. வருஷமாக நின்று நேபுகத்நெத்சர் வசமாயிற்று. அப்பொழுதே யெரூஷலேம் நகரமும் தேவாலயமும் பாழாக்கப்பட்டது.

யூதர் சிறைப்பட, ௧௩௪. வருஷங்களுக்கு முன் இஸ்ரவேலர் சிறைப்பட்டார்கள். ௪௬௮. வருஷங்களுக்குமுன் யேரோபேயாமைச் சார்ந்தார்கள்.

தானியேல்முதல் கிறிஸதுவரைக்கும் அசூரிய, கல்தேய, மேதிய பார்சிய, உரோமையெ ன்னுந் தேசாதிபதிகளாலே

# யூதருக்கு நடந்த சம்பவம்.

௫௱௪௯.

மனாசேயின்கீழ். க. இந்த ஷல்மனேசருக்குப் பின்பு இவன் புத்திரனாகிய சனகெரிப்பு தளங்களோடே யூதாவுக்குவந்து அதின் பலநகரங்களையும் பிடித்தபொழுது யூதஇராசாவாகிய இஸ்கி யாபயந்து தன்னுடனே சமாதானமாகும்ப டி மன்றாடிக்கேட்க, ஆட்களையும் கனதிரவிய ங்களையும் அனுப்பினான். சனகெரிப்பின்சேனா பதியாகிய ரெப்ஷாக்கே வெளிப்பட்டு நீங்கள் இஸ்கியாவிடத்திற்போய் உன்நம்பிக்கையும் ஆ லோசனையும் அவம். நீபார்வோனை நம்புகிறாய். அவன் நாணற்கோல். நீ யெகோவாவின் ஸ்தா னங்களையும் வேதிகைகளையும் அகற்றி யாவரும் யெருஷலேமின் ஆலயத்தில் மாத்திரம் அவரை வணங்கவேண்டுமென்று கற்பித்தாய். ஆகையா ல்உனக்கு யெகோவாவுஞ் சகாயஞ்செய்யமாட் டார். மாயுத்தராக இரண்டாயிரம் யுத்தவீரர் உனக்கு உண்டானால் நாம் இரண்டாயிரம் கு திரைகளைக் கொடுப்போம். (உ. இரா. ௧அ. ஏசா. ௬௭.) அவைகள்மேலேறட்டும். ஒட்டம் வை. அப்படி முடியாதிருந்தால் எங்கள் இ ராசாவின் படைகளுக்குள் ஒரு அற்பவீரனை யும் நீபுறங்காணமாட்டாய். நாம் யெகோவா வின் உத்தரவில்லாமல் இத்தேசத்தை அழிக்க

வந்தோமா. அவரே இத்தேசத்தை அழிக்கும்ப
டி நம்மை அனுப்பினாரென்று சொல்லுங்களெ
ன்று சொல்லி அனுப்பினான். சனகெரிப்புஇ
ராசாவும் யெகோவாவையும் சபையையும் நிந்
தித்துப் பயமுறுத்திக் காகிதமெழுதி அனுப்பி
னான். அதை இஸ்கியா கண்டு யெகோவாவை
நோக்கி ஓலமிட்டதினால் தேவ உக்கிரம் சன
கெரிப்பின் மேல் விழ அவனுடைய தளங்கள்
தங்களிலே தாங்கள் யுத்தம்பண்ணி ஒரு லட்
சத்து எண்பத்தையாயிரம் பேர் மரித்தார்கள்.
அதினால் அவனும் பயந்தோடித் தன் ஊரிலே
தன் பிள்ளைகளாலே மரணமடைந்தான்.

(௨. இரா. ௧௮. ௧௯. கி. மு. ௭௧௦.

சாடேனெப்போலிஸ்.

௨. இவனுக்குப்பின்பு சர்கோனென்று
ம் சாடேனெப்போலிஸ்என்றும் எசரத்தோ
ன்என்றும்பேர்கொண்ட அசூரியஇராசா யூ
தாவுக்குவிரோதமாய்த் தன்தளங்களுடனே
போய் அங்கே சல்மனேசரும், சனகெரிப்
பும்சிறைப்படுத்திக்கொண்டுபோகாமல் வி
ட்டுவைத்த சனங்களைக் குடியெழுப்பித் து
ரத்தித் தன்தேசத்துச் சனங்களிற் சிலரைக்
கொண்டுவந்து ஷமாரியாவிற் குடியேற்றி
னான். இதினாலும் நிகிமியாவினாற் தேவாலய
த்தைவிட்டு விலக்கப்பட்ட மனாஷேயை அவ
ன்மாமனாகிய சனபல்லாத்துத் தான்கட்டுவித்த
ஆலயத்துக்கு ஆசாரியனாக்கினதினாலும் யூதர்
ஷமாரியரோடே சம்பந்தமில்லாதிருந்தார்கள்.

(யோவான் ௪. ௯. கி. மு. ௬௭௮.

இந்த எசரத்தோனுக்குப்பின்பு சாடோக்கேயி

ஸ் அசூரியாவுக்கு இராசாவாகி அசூரியாவை யும் பாபிலோனையும் ஒன்றாயிணைத்து அரசாண்டான். அப்பொழுது முதலாம் நெபுகத்நெத்சராகிய நேபோபோலாசர் இவனைவிட்டுப் பிரிந்து கல்தேய இராச்சியத்தைத் துவக்கினான்.

(கி. மு. ௬௨௫.

நெபுகத்நெத்சர்.

௩. இவனுக்குப்பின்பு இவனுடையமகனாகிய நெபுகத்நெத்சர் கல்தேயவென்னும் பாபிலோனுக்கிராசாவாகி சிதலியாவென்பவனை யூதாவுக்கு இராசாவாக நியமித்தான். (கி. மு. ௫௮௮.) அப்பொழுது யூதாவின் இராசாவாகிய யோயாகீனுடைய வமிசத்திலுள்ள இஷமாவேலும் வேறுபத்துப் பேரும் வந்து சிதலியாவையும் அவனைச்சார்ந்தயூதரையும் கல்தேயரையுங்கொன்று அம்மோன் தேசத்துக்கோடினார்கள். யோகானான் என்பவன் தீர்க்கதரிசியான எரேமியாவையும் மற்றுள்ளசனங்களையும் அழைத்துக்கொண்டு எகிப்துக்குப்போனான். அதற்கு நாலுவருஷத்தின்பின் நெபுகத்நெத்சரின் மெய்காப்பாளரில் ஒருவனாகிய நெபூசராதான் யூதாவுக்குவந்து மிஞ்சிஇருந்த எழுநூற்று நாற்பத்தைந்துபேரையும் சிறைப்பிடித்துப் பாபிலோனுக்குக் கொண்டுபோனான். (லேவி. ௨௬. ௧௪.-௩௫.) வசனமட்டும் சொல்லியபடி அவர்களுக்குச் சம்பவித்தது. விசேஷமாய் ௩௪ம். ௩௫ம். வசனத்திலே தேசம்பாழாகித் தன் ஓய்வுநாளை அனுபவிக்குமென்று சொல்லியபிரகாரம் யூதர் கோரேஷ இராசாவினால் விடுதலைபெற்று யூதாவுக்குத் திரும்பிவ

ருமட்டும் சென்ற எழுபது வருஷமட்டாக யூ
தாவிலே யாதொரு குடியுமில்லாமல் அத்தேச
ம் ஓய்ந்திருந்தது.

௪. அப்பொழுது சிறைப்பட்டுப்போன யூத
ருக்குள்ளிருந்த தானியேல், ஷாதிராக், மேஷ
க், அபேத்நிகோமுதலிய சிலயூதர்களை நெபுகத்
நெத்சர் தெரிந்தெடுத்துக் கல்தேயர்பாஷையை
யும் சாஸ்திரங்களையுங் கற்பித்து, தன்தேசத்துக்
குஅதிபதிகளாக வைத்தான். இப்படியிருக்கை
யில் நெபுகத்நெத்சர் ஒரு சொப்பனங்கண்டு அ
ந்தச் சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும்
தனக்கு அறிவிக்கும்பொருட்டு அத்தேசத்திலு
ள்ள மாயாவிகளையும், சோதிடர்களையும், சகு
னிகளையும், அழைப்பித்துத் தன்சொப்பனத்
தையும் அர்த்தத்தையும் தனக்கறிவிக்கும்படி
கேட்டான். (தானி. ௨. ௬. கி. மு. ௫௯௮.

௫. அதைவெளிப்படுத்த அவர்களுக்குக் கூ
டாததினால் இராசாஅவர்களைக்கொலைசெய்யும்
படிகட்டளையிட்டான். அப்பொழுதுதானியே
ல் இராசாவிடத்திற்போய் அதற்குத் தவணைகி
டைக்கும்படி மன்றாடிப்பெற்றுக்கொண்டு த
ன்வீட்டுக்குப்போய் யெகோவாவைப்பிரார்த்தி
த்தான். அவரும் அதை அவனுக்குவெளிப்ப
டுத்தினார். திரும்பத் தானியேல் இராசாவிட
த்திற்போய், இராசாவே, நீர் பொற்றலையையும்
வெள்ளிமார்பையும், புயங்களையும், பித்தளைஉத
ரத்தையும், இருப்புத்தொடைகளையும்களிமண்
ணும் இரும்புங்கலந்த பாதங்களையுமுள்ள ஒரு
ரூபத்தைக் கண்டீர். அந்தரூபத்தை ஒரு கல்

உருண்டுவந்து நொருக்கியபின் அந்தக்கல்லுப் பருமலையாகிவளர்ந்து உலோகம் முழுவதையு ம்மூடிற்று. இதுவேநீர்கண்டசொப்பனம். அதி ன் தாற்பரியத்தைச் சொல்லுவேன் கேளும், நீ ரே அதின்பொற்றலை. உமக்குப்பின் உம்மிலும் இழிந்த ஓரிராச்சியம்தோன்றும்.அதன்பின்பு அ திலும் இழிந்த வேறொரு இராச்சியம் தோன்று ம்.அதின்பின் அதிலும் இழிந்த ஓரிராச்சியந்தோ ன்றி இருபிரிவாகும். அதில் ஒன்றுபலமுள்ள தாகும். மற்றதுபலவீனமாகும். அவ்விராச்சி யம் இரண்டும் ஒற்றுமையாயிராமற் பிரிவுபடு ம். அக்காலத்தில் யெகோவா என்றும் நிற்கிற தாக ஓர் இராச்சியத்தை ஸ்தாபிப்பாரென்றான். (தானி. ௨. ௪௪.

---

இந்தப்பிரகாரம் கி. மு. ௬௦௬ம். ஆண்டிலே பொற்றலையென்று குறிக்கப்பட்ட நெபுகத்நேத்ச ராலே பாபிலோனிராச்சியம் பிடிக்கப்பட்டுக் கல் தேய இராச்சியமாயிற்று. இது யூதராசாவாகிய யோ யாகீமுடைய அரசாட்சியின், சம். ௩ல் சம்பவித் தது.

மறுபடி கி. மு. ௫௩௮ம். ஆண்டளவிலே மேதிய னாகிய தாரியாவேசும் பார்சியனும் தாரியாவேசு க்கு மருமகனுமாகிய கோரேசும்கூடிப் பாபிலோ னைப்பிடித்து மேதிய பார்சிய இராச்சியமாக்கினார் கள். இவ்விருவருமே வெள்ளிமார்பும் இருபுயங்க ளுமாயிருந்தார்கள்.

மறுபடி கி. மு. ௩௩௦ம். வருஷமளவிலே மக் கேதோனியனும் கிரேக்க இராசனுமாகிய அலேக் சந்தர் வந்து பாபிலோனைப் பிடித்து அதைக் கிரே க்க இராச்சியத்தோடு சேர்த்தான். இவனே பித்

௬. இராசா அதைக்கேட்டமாத்திரத்திலே தானி யேலைத் தாழ்ந்து வணங்கி உங்கள்தேவனேதே வன்என்றுசொல்லி, இவனைத் தனக்குப்பிரபுவா கவும், பாபிலோன்தேசம்முழுவதுக்கும் அதிகா ரியாகவும் சகல ஞானிகளுக்கு அதிபதியாகவு ம் நியமித்தான். இப்படி இவன் இராசபிரபுவா யிருக்கையில் இராசாவாகிய நெபுகத்நெத்சர் அ றுபதுமுழ்உயரமும் ஆறுமுழ அகலமும் உள்ள தாகப் பொன்னினலொரு ரூபத்தை உண்டாக் கி அதைப் பிரதிஷ்டை பண்ணும்நாளில் யாவ ரும் அதைவணங்கவேண்டும் என்றும், வணங் காதவனெவனும் அக்கினிச்சூளையில் இடப்ப டுவானென்றும் நியமம்பண்ணி அதைப் பிரதி ஷ்டைசெய்தான். (தானி. ௩. ௫.

௭. அந்தநாளில்யாவரும் இராச்கட்டளைக்க மைந்து அதை நமஸ்கரித்தார்கள். ஷாதிராக்,

---

தவளை உதரமும் இடுப்புமென்றுகுறிக்கப்பட்டவன். மறுபடி கி. மு. உ௭. வருஷமளவிலே உரோம இராசனகிய கைசர் வந்து அதைப்பிடித்து உரோ மராச்சியமாக்கினன். இவனே இரும்புங் களிம ண்ணுங்கலந்த கால்களாய்க் குறிக்கப்பட்டவன். இந்த இராச்சியம் அதிவிஸ்தாரமாய்ப் பலுகிப் பெரு கிவருகையில் சருவலோக நியாயாதிபதியாகிய யே சுக்கிறிஸ்து உற்பன்னமானர். இவருடைய இராச் சியவதிகாரம் நாளுக்குநாள் லோகமெங்கும் பரவி அது முழுதையும் அரசாளும். அவருடைய அரசாட்சி க்கு விரோதிகள் நாசமாவார்கள். அநுசாரிகளோ அவருடனே அனு ராசாக்களாவார்களென்று அ றிகிறேம். இவரேநான்கு இராச்சியங்களையுமொரு க்கின கல்.

மேஷக், அபேத்நிகோ என்னும் மூவரும் அதை நமஸ்கரிக்க மாட்டோமென்று மறுதலித்து நின்றார்கள். அதை நெபுகத்நெத்சர்அறிந்து, கடுங்கோபங்கொண்டு இம்மூவரையும்பிடிப்பித்து, நீங்கள் நான் உண்டாக்கின விக்கிரகத்தை நமஸ்கரிக்கிறதே உங்களுக்குச்சகாயம். அல்லது அக்கினிச்சூளையிலே போடப்படுவீர்கள். அதினின்றும் உங்களை விடுவிக்கவல்லதேவன் யாவனென்று எச்சரித்தான். அதற்கிவர்கள் இராசனே, எங்கள்தேவன் எங்களைவிடுவிப்பார். விடுவியாதிருந்தும் நாங்கள் உங்கள்தேவர்களையாவது விக்கிரகங்களையாவது பூசிக்கமாட்டோமென்றார்கள். உடனே இராசா உக்கிரகோபங்கொண்டு சூளையின்சுவாலையை ஏழுமடங்கதிகமாக்கி இம்மூவரையுங் கட்டுவித்து அக்கினிச்சூளையின் மத்தியிலேபோடுவித்தான்.

(தானி. ரு. உ௦.

அ. இவர்களைக்கட்டிச் சூளையிலிட்டவர்களை அதின்சுவாலை தகித்துவிட்டது. இம்மூவருங் கட்டுண்டவர்களாய்ச் சூளையின் மத்தியிலே விழுந்தும் இவர்கள் வஸ்திரங்கள் கருகாமலும் அக்கினி மணம் அவர்கள்மேற் பிடியாமலுமிருந்தது. இவர்களோடே இன்னுமொருவருங்கூட நான்குபேராய்ச் சூளையின் சுவாலைநடுவிலே உலாவிக்கொண்டு நிற்கிறதை இராசாக் கண்டு தனது மந்திரிமாரைஅழைத்து நாம் மூன்று புருஷரை அக்கினி மத்தியில்இட்டோம். இப்பொழுது நான்குபேர் அதற்குள் உலாவுகிறார்கள். அவர்களில் நான்காம் புருஷன் தேவபுத்

திரனுகக் காணப்படுகிறதேயென்று சொல்லி, சருவத்துக்கும்மேலான தேவதாசரே, வெளியே வாருங்களென்று அழைத்தான். அப்பொழுதுஅ வர்கள் யாதொருசேதமுமில்லாமல் வெளியேவ ந்தார்கள். அதைஇராசாகண்டு,யெகோவாவே, மேலானதெய்வமென்று அவரைப் புகழ்ந்துகொ ண்டு அவருடையதாசராகிய இவர்களைக்குற்றஞ் சொல்லுகிற எவனுஞ் சேதிக்கப்படுவானென் று கட்டளையிட்டு, இம்மூவருக்கும் முன்னையி லும் அதிக மேன்மையையுங் கற்பித்ததுமன்றி, நடந்த வர்த்தமானங்கள் யாவற்றையும் பிரசித்த மும் பண்ணுவித்தான். (தானி. ௩. ௯.

௯. மறுபடியும் இந்த நெபுகத்நெத்சர் பூ மி மத்தியில் ஓர் விருட்சமுண்டாகி வானபரி யந்தமுயர்ந்து, பூமியெங்கும் பரந்து, அழகிய த ளிர்களைத் தளிர்த்து, அதிக கனிகளைக் கனித்து இருக்கவும், அதின் நிழலிலே வனமிருகங்களு ம்,அதின் கொம்புகளிற் பறவைகளும் வாசம்ப ண்ணவும், வானத்தினின்றும் ஒருவன் இறங்கி இந்த விருட்சத்தைத் தறித்து இதின் கொப்பு களை வெட்டி இதின் இலைகளை உதிர்த்துக் க னிகளைச் சிந்துங்கள். இதிலே தங்கிய பறவை களும் விலங்குகளும் விலகியோடக் கடவது. இதின் அடி மரம் விலங்கிடப்பட்டுப் புற்ற ரையிலிருந்து பனியிலே நனையவும், பூண்டுக ளைப் புசிக்கவுங் கடவது. ஏழு காலஞ் சென் ற பின்பு சருவத்துக்கும் மேலானவர் ஆளுகை செய்து தமக்குப் பிரியமானவனுக்கு அதைக் கொடுத்து நீசரை அதிலேற்படுத்த இருக்கிறாரெ

ன்று சொல்லவுங் கேட்டேன். இதின் தாற்பரியத்தை நீயே சொல்வாயாகவென்று தானியேலைக் கேட்டான். (தானி. ௪. ௧௮.) அதைத் தானியேல் கேட்டுச் சற்றே மனங் கலங்கி இராசாவே, இது சருவத்துக்கும்மேலானவருடைய தீர்ப்பு. சனங்கள் உம்மை விலகிவிட நீர் ஏழு வருஷமளவாக மிருகங்களுக்குள் வாசம் பண்ணி அவைகளைப் போல இரையுண்டு பனியிலே நனைந்து திரிவீர். நீர் சருவத்துக்கும் மேலானவர் மனுஷரை ஆளுகிறாரென்றும், அதைத் தமக்குப் பிரியமானவனுக்குக் கொடுக்கிறாரென்றும், உணரும் நாளில் உமது ராச்சியம் உமக்குத் திரும்பக் கிடைக்குமென்றும் தேவன் அறிவிக்கிறார். ஆகையால் நீர் நீதியுந் தயையுமுடையவராகி உமது அதிக்கிரமங்களை விட்டுவிடுமென்றான். (தானி. ௪. ௨௭.

௧௦. இவன் இந்தத் தரிசனையை அடைந்த பன்னிரண்டாம் மாதத்திலே தனது மாளிகையின் மேல்மாடத்தில் உலாவிக்கொண்டு நின்று தன் நகரத்தின் சிறப்புகளைக் கண்டு களித்து, இதை நான் என் பராக்கிரம வல்லபத்தினாலல்லவா கட்டினேனென்று தன்னை விதந்துகொண்ட நேரத்தில் அவன் மிருக தன்மை அடைந்து, சனங்களில் நின்று விலக்கப்பட்டு, மிருகங்களுக்குள் வாசம் பண்ணி, அவைகளின் இரையை உண்டு, ஏழு வருஷ மட்டாகத் திரிந்தான். அந்த ஏழுவருஷமும் அவன் மகனாகிய ஏவில்மிரோதக் இள அரசனாய் அரசுசெய்தான். அதின் மேல் அவனுக்குச் சுயபுத்தி

தோன்றத், தேவனை நினைந்து அவருக்குத் துதி செலுத்தினன். அந்நேரத்தில் அவனுக்கு முந்தின இராசரீகம் முற்றாகக் கிடைத்து முன்போல இராச்சியத்துக்கு வந்து தன் மகன்செய்த தப்புகளைக் கேள்விப்பட்டு அவனைச் சிறைச்சாலையில் வைத்தான்.

ஏவில்மெரோதாக். இவன் சிறைச்சாலையில் இருக்கையில் நெபுகத்நெத்சர் முன்னே சிறைச்சாலையில் வைத்த யோயாகீனாகிய யூதராசனுடனே சினேகங் கூடி இருந்தான். பிதா மரித்தபின் மறுபடியும் அவன் அரசாட்சிக்கு வந்துயோயாகீனை விடுதலைபண்ணி, உ. வருஷம்அரசாண்டான். (தானி. ௪. ௬௭.

நிரிக்கிலிசோர். இவனுக்குப் பின்பு இவனுடைய மைத்துனனாகிய நிரிக்கிலிசோர் இராசாவானன். இவன் கோரேசுடனே யுத்தம் பண்ணி மரிக்க, இவனுடைய புத்திரனாகிய லேபோரேசர் ஆகாட்அரசாண்டுவந்தான்.

லேபோரேசர் ஆகாட். இவன் காலத்திலே பேல்ஷாத்சர் சில கலகக்காரரைச் சேர்த்துக்கொண்டு இவனைக்கொலைசெய்து இராசாவானன். (கி. மு. ௫௫௫.

பேல்ஷாத்சர். ௧௧. இவன் துராசாரனும், குடிகாரனும், போசனப் பிரியனுமாயிருந்தான். இவன் தன் பரிவாரங்களும் தானும் மனைவியரும் வைப்பாட்டிகளும் கூடி விருந்துகொண்டாடுகையில் தன் பாட்டனாகிய நெபுகத்நெத்

சர் யெருஷலேமின் தேவாலயத்தில் இருந்து எடுத்து வந்த பொன் வெள்ளிப் பாத்திரங்களை எடுப்பித்து வைத்துப் பரிமாறி விக்கிரகங்களைப் புகழ்ந்துகொண்டாடினான். அப்பொழுது அவன் விருந்துகொண்டாடின மண்டபத்தின் சுவரிலே ஒரு விரல் தோன்றி ஒரு வாசகத்தை எழுத அதைக் கண்டு கலங்கி அங்குள்ள கணிதர் சோதிடர் முதலிய யாவரையும் அழைப்பித்து அதை வாசித்து விபரிக்கச்சொன்னான். அது அவர்களுக்குக் கூடாமையினால் பேல்திஷாத்சரென்னும் தானியேலை அழைப்பித்துக் கேட்க, தானியேல் அதைவாசித்து தேவன் உன் இராச்சியத்தை முடிவு செய்தார். நீ நிறுக்கப்பட்டுக் குறைந்தாய். உன் இராச்சியம் பிரிக்கப்பட்டு மேதியருக்கும், பார்சியருக்கும், கொடுக்கப்பட்டதென்று எழுதியிருக்கிறது. இவையெல்லாம் நீர் யெகோவாவை மதியாமல் நடந்ததினாலே சம்பவித்தது என்றான். அந்த இராவில் மேதிய இராசனாகிய தாரியாவெவ்ஷ பார்சிய ராசனாகிய கோரேசுடனே வந்து இவனைக் கொல்வித்துத் தானே இராசாவானான். (தானி. ௫. ௩௧.

௧௨. பெல்ஷாத்சர் அரசாண்ட முதலாம் வருஷத்தில் இந்தத் தானியேல் நாலு காற்றுகளும் ஒன்றற்கொன்று எதிராய்ச் சமுத்திரத்தின் மேல் மோதவும், சமுத்திரத்திலிருந்து கழுகின் சிறகுகளையுடைய ஒரு சிங்கம் எழும்பவும், அது மனுஷ இருதயமுள்ளதாய் இருகாலூன்றி நிற்கவும், பின்பு ஒரு கரடி எழும்பி மூன்று விலா எலும்புகளைக் கவ்விக்கொண்டு நிற்

கவும், அதன் பின்பு நான்கு சிறகுகளும் நான்கு தலைகளும் உள்ள ஒரு சிவிங்கி எழும்பவும், அதன் பின்பு பத்துக் கொம்புகளும் இருப்புப் பற்களும் பயங்கரரூபமுமுள்ள ஒரு மிருகம் எழும்பவும், அதின் கொம்பின் இடையிலே வேறொரு சிறிய கொம்பு எழும்பவும் முந்தினகொம்பில் மூன்று கொம்பு பிடுங்கப்படவும், அந்த மிருகத்திற்கு அகங்கார வாக்கு இருக்கவும், அதன் பின்பு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற சிங்காசனத்தின் மேற் பஞ்சுபோன்ற தலை மயிருடைய ஒருவர் வெள்ளை வஸ்திரந்தரித்து வீற்றிருக்கவும், அந்தச் சிங்காசனமும் அதின் சக்கரங்களும் அக்கினியைப்போற் சுவாலிக்கவும், அவருடைய சமுகத்தில் நின்று அக்கினி நதி பெருகி ஓடவும், அனந்த சனம் அவரைச் சேவிக்கவும், அவர் நியாய விசாரணைக்கு நேரிட முன் குறித்த மிருகங் கொலை செய்யப்படவும், அதின் சரீரத்தைத் துண்டித்து நெருப்பிலிடவும், மனு புத்திரனைப் போன்ற ஒருவருக்குச் சகல சனங்களின் மேலும் ஆளுகை ஒப்புவிக்கப் படவும், தரிசனையடைந்தான். இந்தத் தரிசனம் கல்தேய இராச்சியத்தையும், மேதிய இராச்சியத்தையும், கிரேக்க இராச்சியத்தையும், உரோம இராச்சியத்தையும், கிறிஸ்துவின் இராச்சியத்தையுங் காண்பிக்கின்றது என்று அறிகிறோம். இதுவும் நெபுகத்நெத்சர் கண்ட சொப்பனத்துக்குச் சமமான பயன்கொண்டிருந்தது. (தானி. ௭.

௪௩. தாரியாவேஷ் அபிஷேகம்பெற்ற முத

லாம் வருஷத்திலே இந்தத் தானியேல்யெருஷலேம் நகரம் பாழ்பட்டிருக்கிறதை அறிந்து உபவாசித்து யெகோவாவைப் பிரார்த்தித்து, ஆண்டவரே, நீர் மகத்துவமுள்ளதேவன். உமது கட்டளைகளைக் காத்துநடக்கிறவர்களுக்கு உமதுஉடன்பிடிக்கையைக்காக்கிறவராயிருக்கிறீர். நாங்கள் அக்கிரமக்காரரும் உமதுபிரமாணங்களை மீறினவர்களுமானோம். நீர் அனுப்பின தீர்க்கதரிசிகளுடைய எச்சரிப்பை மதியாமல் நடந்தோம். ஆகையால் உம்மாற் கைவிடப்பட்டு அன்னிய தேசங்களுக்குத் துரத்தப்பட்டோம். நமக்கு இலச்சையே உரியது. நமக்கு நியாயப் பிரமாணத்திலெழுதியிருக்கிற சாபங்கள் விழுந்தன. யெருஷலேமுக்கு நடந்தது போலப் பூமி முற்றும் நடந்ததில்லை. நாம் நமது பாவங்களை விட்டு உம்மிடத்திலே திரும்பி விண்ணப்பஞ் செய்யாததின் நிமித்தம் நீதியின் படி தண்டிக்கப்பட்டோம். இனி உமது பரிசுத்த மலையாகிய யெருஷலேம் நகரத்திற்கு உமது உக்கிர கோபத்தை விலக்கி விடும். நமது ஆண்டவரின் நிமித்தம் உமது பரிசுத்த ஸ்தானத்தில் உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும். உமது நாமந் தரிக்கப் பெற்ற நகரத்தைப் பார்த்தருளும். ஆண்டவரே, கேளும், ஆண்டவரே, மன்னியும் என்று விண்ணப்பஞ்செய்தான். (தானி. கூ. உச.

கச. உடனேஒருதூதன்வந்துதானியேலே,நீஅன்பன். ஆதலால் உனக்குக் காரியத்தை அறிவுறுத்தவந்தேன். மீறுதலைமுடிப்பதற்கும்பாவங்களையொழிப்பதற்குப்பிராயச்சித்தம்செய்வதற்கு

ம், நீதியைத் தோற்றுவிப்பதற்கும், பரிசுத்தரை அபிஷேகஞ் செய்வதற்கும், எ0. வாரங்கள் நியமிக்கப்பட்டன. யெருஷலேமைத் திரும்பக்கட்டுவதற்குக் கட்டளை வெளிப்படுகிறது முதல் மஷீயக்கென்னும் அதிபதி வரும் வரைக்கும் ஏழு வாரமும் அறுபத்திரண்டு வாரமுஞ் செல்லும். வீதியும், மதிலும், உபத்திரவ காலங்களிலே திரும்பக் கட்டப்படும். அந்த அறுபத்திரண்டுவாரங்களுக்குப் பின் மஷியக் சேதிக்கப்படுவார். அதற்குப் பின் வரும் அதிபதி நகரத்தையும், பரிசுத்த ஸ்தானத்தையும், நாசப்படுத்துவான். பிரளயம்போல அதின் முடிவு வரும். முடிவு பரியந்தம் யுத்தமும் நாசமும் உண்டாகும். அவர் ஒரு வாரமளவும் அனேகரோடே உடன்படிக்கையை உறுதிப்படுத்துவார். அந்த வாரத்தின் மத்தியிலே பலியையும், நைவேத்தியத்தையும் நிறுத்துவார். சங்காரகாரன் அருவருப்பான சிறகுடனே வருவான் என்றான். எழுபது வாரங்களிலே நானூற்றுத்தொ

---

கவனிப்பு.—தேவ ஆண்டிலே ஒவ்வொரு நாள் மனுஷருக்கு ஒரு வருஷமானதால் யெருஷலேம் திரும்பக் கட்டுவதற்கு அர்தக்ஷேக்சீஸ்லோஞ்சிமேனஸ் எஸ்ருவுக்குக் சட்டளையிட்டநாள் முதற்கொண்டுமஷீயக்என்னும் கிறிஸ்துநாதர் மரணமடைந்தகாலம்வரைக்கும் நானூற்றுத் தொண்ணூறு வருஷங்கள் சரியாகச் சென்றதென்று என்ன சாஸ்திரிகளும் இதிகாசகர்த்தாக்களுந் தொகுத்துச்சொல்லுகிறார்கள்.

ண்ணூறு நாளாகும். (தானி. கூ. உஎ. மத்தே. உச. கரு. மாற்கு கஙு. கச.

தாரியாவெஷ். கரு. இந்தத் தாரியாவெஷ் தனது இராச்சியத்தை ஆளும்படி நூற்றிருபது பேரை அதிகாரிகளாக வைத்து அவர்களுக்கு விசாரணைக்காரராக ஏற்படுத்தின மூன்றுபேருக்குள் ஒருவனாகிய தானியேலைப் பிரபுவாகவும் நியமித்தான். அதனால் அவர்கள் யாவரும் எரிச்சல்கொண்டு தானியேலின்மேல் ஒரு குற்றத்தைப் பாரிக்க வகைதேடியும் காணாமையால் இராசாவிடத்திற் போய், இராசாவே, இதன் அடுத்த முப்பது நாள் வரையிலே எவனாகிலும் உம்மையன்றி ஒரு மனுஷனையாகிலும் தேவனையாகிலும் பிரார்த்தித்தால் அவன்சிங்கக்குகையிலே இடப்படவேண்டுமென்று கேட்க, இராசா அப்படியே கட்டளையை எழுதுவித்துக் கையெழுத்தும் வைத்தான். தானியேல் இதைஅறிந்தும், இராசகட்டளைக்கஞ்சாமல்யெகோவாவைப் பிரார்த்தித்து வந்ததைச் சகல அதிகாரிகளும் அறிந்து இராசாவிடத்திலே போய் தானியேல்என்பவன் உமது கட்டளையை மதியாமல் தன்தேவனை பிரார்த்திக்கிறனென்றார்கள். (தானி. சூ. கஙு.

கசூ. அதைக்கேட்ட தாரியாவெஷ் தான் அந்தக் கட்டளையை நியமித்ததற்காக மனஸ்தாபப்பட்டும் மேதியரும் பாரசியரும் நியமித்த கட்டளை மாற்றப்படுவதில்லையென்று சகலரும் வ

ற்புறத்தினதிஞலே தானியேலே அழைப்பித்து, தானியேலே, நீ வழிபடுந் தெய்வம் உன்னைக் காப்பாராக என்று சொல்லி அவனைச் சிங்கக் குகையிலே அடைப்பித்தான். இராசா இப்படிச் செய்வித்தும் மனஸ்தாபத்துடனே வீட்டுக்குப் போய் ஊண் உறக்கமற்றவனாய் இருந்து அதிகாலையிலே சிங்கக்குகைக்கு வந்து தானியேலே, சீவனுள்ள தேவதாசனே, உன் தேவன் உன்னைச் சிங்கங்களுக்குத் தப்புவிக்க வல்லவரா என்ருன். அதற்குத் தானியேல், இராசனே, வாழ்ந்திரும். நான் தேவனுக்கும் உமக்குங் குற்றஞ் செய்யாதவனாய் இருந்தபடியால் தேவன் தமது தூதனை அனுப்பிச் சிங்கங்களின் வாயைக் கட்டுவித்தார் என்ருன். அதைக் கேட்டு இராசா சந்தோஷப்பட்டுத் தானியேலைச் சிங்கக் குகையில் இருந்து எடுப்பித்து அவனைக் குகையிலிடுவித்த சகலரையும் அவர்கள்மனைமக்களையும்பிடிப்பித்துச் சிங்கக்குகையிலிடுவித்தான். உடனே சிங்கங்கள் அவர்கள்எலும்புகளையும் நொருக்கிப்பட்சித்தன. அப்பொழுதுஇராசா சகலசனங்களும் தானியேல்வணங்குகிற தேவனுக்கு அஞ்சுங்கள். அவரே அழிவற்ற தேவன். அவர் நித்தியர். அவருடைய இராச்சியம் அழியாது. அவருடைய கர்த்த தத்துவம் நிற்கும். அவரே மீட்கிறவரென்று பிரசித்தம்பண்ணினுன். அக்காலத்திலே தானியேலுக்குவயசு அ௭. தானியேல் தாரியாவெசுடைய காலத்திலும் கோரேஷின்காலத்திலும் சுகசெளக்கியமாய் வாழ்ந்திருந்தான். (தானி. ௬. ௨௮.

கோரேஷ். ௧௭. மேலே சொல்லப்பட்ட தாரியாவேஷ் பாபிலோனிலே இரண்டு வருஷம் அரசாண்டு வயோவிருத்தனாய் மரிக்க அவனுடைய மருமகனாகிய கோரேஷ் இராசாவானான். அவன் அரசாண்ட முதலாம் வருஷத்திலே தெய்வச்செயலாய் எழுப்பப்பட்டுப் பூமண்டலத்தில் உள்ள சகல இராச்சியங்களையும் எனக்குத் தந்த சருவலோகாதிபரான யெகோவா யெரூஷலேமிலே தனக்கொரு ஆலயத்தைக் கட்டும்படி எனக்குக் கட்டளையிட்டார். ஆகையால், என் இராச்சியத்திலுள்ள யூதராகிய நீங்கள் யெரூஷலேமுக்குப்போய் அவருடைய ஆலயத்தைக் கட்டுங்கள். உங்களுடனே யெகோவா இருப்பார். அவருடைய ஆலயத்துக்கு யாவரும் காணிக்கைகளை மனதாரக் கொடுத்து உதவி செய்ய வேண்டுமென்று தனது தேசங்களெங்கும் பிரசித்தப்படுத்துவித்தான். அதையறிந்து யூதருக்குள் மனம் ஏவப்பட்ட யாவரும் கூட்டங் கூடியோசித்துப் புறப்பட்ட பொழுது, கோரேஷ் இராசா நெபுகத்நெத்சார் எழுபது வருஷங்களுக்கு முன்னே யெரூஷலேமின் தேவாலயத்திலிருந்து எடுத்து வந்த சகல பணிமுட்டுக்களையும் எடுப்பித்துத் தான் யூததேசத்து அதிபதியாக நியமித்த ஷேஷ்பத்சார்என்னும் சிருபப்பேலிடத்தில் ஒப்பித்து அனுப்பிவிட்டான். அப்பொழுது நாற்பத்தீராயிரத்து முன்னூற்று நாற்பது யூதரும், எழாயிரத்து முன்னூற்று முப்பத்தேழு பணிவிடைக்காரரும், பாபிலோனிலிருந்து புற

ப்பட்டார்கள். இவர்கள் குதிரைகள், கோவேறுகழுதைகள், ஒட்டகங்கள், கழுதைகளையுங் கொண்டு போனார்கள். எசாயாவின் தீர்க்கதரிசனம், ௪௪ம். அதி. ௨அம். வசனந்தொடங்கி ௪௫ம். அதி. ௨௦ம். வசனம் வரைக்கும்சொல்லப்பட்டபடி நடந்தேறிற்று. (எஸ்று. ௧.

௧அ. இவர்கள் வந்து யெரூஷலேமிலே குடியேறி யெகோவாவுக்கு வேதிகையைக் கட்டிப் பலிகளைச் செலுத்தி, உற்சவங்கொண்டாடிப் பின்பு ஆலயத்தைக் கட்ட முயன்று அஸ்திபாரமிட்டார்கள். அப்பொழுது ஷமாரியாத் தேசத்தின் அதிபதிகளும் மூப்பரும் வந்து நாங்கள் உங்களுடனே கூடி இந்தத் தேவாலயத்தைக் கட்ட எங்களுக்கும் இடங்கொடுக்க வேண்டுமென்று கேட்டதற்கு, இவர்கள் இடங்கொடாததினிமித்தம் அவர்கள் இவர்களுக்கு எதிரிடை செய்ய முயன்றும் கோரேசுடைய காலத்திலே இவர்கள் அபிப்பிராயம் முழுவதுஞ் சித்தி பெறவில்லை. இந்தக் கோரேஷ் இறந்த பின்பு கோரேஷின் மகனாகிய கம்பைஷிஷ் இராசாவானான். அப்பொழுது இந்தச் சத்துருக்கள் சமயம் பெற்று, இராசத்துரோகஞ் செய்கிற யூதர் தங்களுக்கு நகரத்தைக் கட்டுகிறார்கள். அவர்கள் அதைக் கட்டி முடித்தால், உமக்கு இறையிறார்கள். உமது அதிகாரம் நின்றுபோம். உமது முன்னோரின் காலத்தில் இவர்கள் இராச கட்டளைக்கமையாததினிமித்தம் இவர்கள் தேசம் அழிக்கப்பட்டதென்று உ

மக்கு முந்தின இராசாக்களின் நாளாகமத்தில் எழுதப்பட்டிருக்கும். அதை விசாரித்து அறிந்துகொள்ளுமென்று ஒரு எச்சரிப்புப் பத்திரம் எழுதி அனுப்பினார்கள். அதைக் கம்பைஷீஷ் அறிந்து மறுகட்டளை வருமளவும் அவர்கள் தங்கள் நகரத்தைக் கட்டவிட வேண்டாமென்று கட்டளையிட்டான். அதினாலே யெருஷலேமின் கட்டுவேலை தடைபட்டு நின்றுவிட்டது.

இரண்டாம் கட்டுதல். இவன் எழு வருஷம் அரசாண்டு மரிக்க, சிமேட்டிஸ் என்னுங் கலகக்காரன் இராசாவாகி ஏழுமாத வரையும் அரசாண்டுகொல்லப்பட்டான். அக்காலத்திலும் இவர்களுக்கு உத்தரவு கிடைக்கவில்லை. (எஸ்ரு ச.

தாரியாவேஷ்கிஸ்தாஸ்பிஸ். ௧௬. சிமேட்டிஸ் இறக்க, கம்பைஷீஷுக்குப் புத்திரனும் கோரேசுக்குப் பௌத்திரனுமாகிய உம். தாரியாவேஷ்கிஸ்தாஸ்பிஸ் இராசாவானான். அக்காலத்திலே, ஆகாயா, சகரியாவென்னும் தீர்க்கதரிசிகளுடைய வாக்கை நம்பி சிருபப்பேலும், யேஷுவாவும் துணிந்து அதை மறுபடியுங் கட்டத் தொடங்கினார்கள். அப்பொழுது ஷமாரியா தேசத்தின் அதிபதியாகிய தத்னையும், ஷேதார்பொஸ்னாய் முதலிய தலைவரும், இவர்கள் கூட்டத்தார்களும் தடைபடுத்தத் துணிந்தும், தாரியாவேசுடைய அனுமதியில்லாமல்த் தடைபடுத்தக் கூடாதிருந்ததினால் தடைபடுத்த முடியாமற்போயிற்று. அதினாலே யூதர் கோரேஷ் இராசாவே, தங்களுக்கதைக்க

ட்ட உத்தரவு தந்ததென்று ஒரு காகிதமெழுதித் தாரியாவேசுக்கு அனுப்பினார்கள்.

(எஸ். ௫. ௧௭.

௨0. இவர்கள் எழுதின காகிதத்தை வாங்கி வாசிப்பித்த பொழுது அந்த நகரத்தைக் கட்டும்படி கோரேஷ இராசா உத்தரவு கொடுத்தானோவென்று அறியும்படிக்கு அவனுடைய புத்தக சாலையில் விசாரித்து அவன்பண்ணின உத்தரவுபத்திரத்தைக் கண்டெடுத்து வாசித்தறிந்துகொண்டு, இவர்கள் தேவாலயங்கட்டத் தடைப்படுத்த வேண்டாமென்று கட்டளையிட்டதுமன்றி, யூதருடைய தேவாலயத்தின் கட்டு வேலையைத் தடைப்படுத்துகிறவன் எவனோ அவன் தன் வீட்டிலிருந்து பிடுங்கி நாட்டப்பட்ட மரத்தில் அறையபடக்கடவனென்றும், அந்த ஆலய வேலை சடுதியாய்ச் செய்து முடிக்கப்பட வேண்டுமென்றும் நிருபம் எழுதி அனுப்பினான். ஆனல் அந்த வேலை தாரியாவெஷ் அரசாண்ட ஆறும் வருஷத்தில் முற்றுப்பெற்றது.

(எஸ்றா ௬. ௧௫.

அர்தக்ஷஷ்தா லோஞ்சிமேனஸ்.

௨௧. பின்பு யூதர் யாவருங் கூடி ஆலயத்தைப் பிரதிஷ்டைபண்ணித் தேவனுக்காராதனையுஞ் செய்து, பஷ்காவையும் ஆசரித்தார்கள். அதின் மேல் ஆரோனுடைய பதினேழாந் தலை முறைப் புத்திரனாகிய எஸ்றா வேதப்பிரமாணத்தில் வல்லவனாயிருந்தபடியால் இந்தச் சனங்களுக்கு வேதப் பிரமாணத்தை உபதேசித்து, அவர்களை நடத்தும்படி வர வேண்டுமென்று சி

ருபப்பேல் கேட்ட கேள்விப்படிக்கு அர்தக்ஷ
ஷ்தா லோஞ்சிமேனஸ் இடத்தில் உத்தரவுபெ
ற்று வெகுமதிகளும் வாங்கிக்கொண்டு அங்கி
ருந்த ஆசாரியரிலும், லேவியரிலும், பாடகரி
லும், கடைகாவலரிலும், பரிசாரகரிலும் சில
ரை அழைத்துக் கூட்டிக்கொண்டு யெருஷலே
முக்குப் போய் வேதப் பிரமாணத்தைப் போதி
ப்பதே தன் வேலையாகச் சங்கற்பித்து நடத்தி
க்கொண்டிருந்தான். இவன் பாபிலோனை வி
ட்டுப் புறப்படும் பொழுது இராசாவாயிருந்த
அர்தக்ஷஷ்தா லோஞ்சிமேனசுடைய பத்திரி
கையினாலே அத்தேசத்து அதிபதிகள் யாவரும்
முன் காட்டின விரோதத்தை விட்டு இவனு
டைய முயற்சிக்கனுசாரிகளாய் இருந்தார்கள்.
(எஸ்று ௭.

௨௨. அக்காலத்தில் யெருஷலேமிலிருந்த அ
திபதிகள் எஸ்றுவிடத்தில் வந்து அங்கிருந்தஇ
ஸ்ரவேலர் அன்னிய சாதியாருடனே கலந்து
சங்காத்தமாயிருக்கிறதை அறிவித்தார்கள். எஸ்
று அதை அறிந்து துக்கித்துப்புலம்பிக்கொண்டி
ருக்கிறதைக்கண்ட சபையாரிற் சிலர் அவரிடத்
தில்வந்து எங்களுக்குள்ளே கலந்திருக்கிற அன்
னிய ஸ்திரிகளையும் பிள்ளைகளையும் நாம் விலக்
கிவிடுவோம். எழுந்திருமென்று தைரியஞ் சொ
ல்ல, இவன் எழுந்து சபதமிட்டுக்கொண்டு யா
வரையும் ஒருமிக்க அழைப்பித்து, யூதர் யாவரு
ம் அன்னிய சாதியார்களை விலக்கி விடுவதற்கு
இருவரை நியமித்தான். இவர்கள் அந்தந்தத்

தேசத்திற் பிரபுக்களுடைய உதவியைக்கொண்டு சனங்களுக்குள் உலாவி எஸ்றா இட்ட கட்டளைப்படி சகல அன்னியரையும் வேறுபடுத்தினார்கள். எஸ்றா, ௯. அதி. ௧௦. அதி.

௨௩. இதினின்றும் பின் வரும் பத்து வருஷத்துக்குள்ளே வர வர யூதர் மிகவும் துயரும் அவமானமும்பட்டார்கள். தேவாலயமும் மதிலும் இடிந்து பாழ்பட்டது. அதை அக்காலத்துப் பாபிலோனில் இராசனாயிருந்த அர்தக்ஷஷதாவுக்குப் பானபாத்திரதாரியாயிருந்த நிகிமியா அறிந்து விசனப்பட்டு இராசாவிடத்தில் அதிகார உத்தரவு பத்திரம் பெற்றுக்கொண்டுபோய் நதிக்கப்புறத்திலிருந்த அதிபதிகளுக்கு அப்பத்திரத்தைக் காட்டி யெருஷலேமுக்குப் போய், அதை இரவிலே சுற்றிப் பார்த்துக்கொண்டு, மறு நாள் ஆசாரியர்களையும் பிரபுகளையும் அழைத்து யோசித்துப் பின்பு யெருஷலேமைக் கட்ட முயன்றான். (நிகிமியா, ௨. அதி.

௨௪. ஷமாரியா தேசத்தின் அதிபதியாகிய சன்பல்லாத்தும், தொபியாவும் அதைக் கேள்விப்பட்டு வந்து இவர்களைப் பரிகாசம்பண்ணினார்கள். அவர்களோ யெகோவாவைப் பிரார்த்தனை செய்துகொண்டு தாங்கள் முயன்ற வேலையில் அதி முயற்சியாய் வேலை நடப்பிக்கிறதைச் சன்பல்லாத்தும், தோபியாவும், அரபியரும், மகோனியரும், பெலிஸ்தியருங் கண்டு எரிச்சல்கொண்டு அவர்கள் வேலையைத் தடைபண்ணவும் அவர்களுடனே யுத்தஞ் செய்யவு

ம் ஒருபந்தப்பட்டிருக்கிறதை நிகிமியாவும் சனங்களும் அறிந்து யாவரும் ஒருகையிலே யுத்தாயுதங்களையும் மறுகையிலே வேலையாயுதங்களையுந் தரித்து முயற்சியாய் மதிலைக் கட்டினார்கள். (நிகிமியா. ௪. ௧௮.

௨௫. இப்படியே இவர்கள் மதில்கட்டி வருகிறதைச் சன்பல்லாத்துக்கேள்விப்பட்டு நிகிமியாவை அழைத்துவரும்படி ஆட்களை அனுப்ப இவன் மறுதலித்ததினாலே மறுபடியுஞ் சன்பல்லாத்து நீ இராசத்துரோகஞ் செய்துயூதேயாவை அரசாளவிரும்புகிறாயென்று ஊரிலே பெரும் பேராயிருக்கிறது. அதை இராசா அறிய முதல் நாம் இருவருங்கூடி யோசனைபண்ணிக்கொள்ளவாவென்று ஒரு காகிதமெழுதி அனுப்பினான். அதையும் இவன் மறுத்து வேலையிலே முயற்சியாயிருக்கிறபொழுது கள்ளத் தீர்க்கதரிசிகளைக்கொண்டு நிகிமியாவையும் சனங்களையும் பயமுறுத்த, இவன் யெகோவாவை நம்பிக்கொண்டு ஒன்றுக்கும் அஞ்சாதவனாய் மதில் வேலையைச் செய்து முடித்து, மதிலுக்குக் காவலும் வைத்துச் சனங்களைத்தொகை பார்த்துஅவர்கள் சகலரையும் அங்கே குடியேற்றினான். (நிகிமியா. ௬.

௨௬. அதின் பின்பு யாவரும் ஒன்றாய்க் கூடி வந்திருக்க, ஆசாரியனாகிய எஸ்றா வேதப்பிரமாணத்தைக்கொண்டு வந்து உதய காலந்தொடங்கி மத்தியானம் மட்டும் வாசித்தான். யாவரும் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்தார்கள். மறுபடி சபையார் யாவருங் கூடி எழுநாள் உற்சவங்

கொண்டாடினார்கள். மறுபடியும் இருபத்து நாலாந் தினத்தில் யாவரும் உபவாசித்துத் தங்கள் பாவங்களையும் தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களையுமுணர்ந்து அறிக்கையிட்ட பின்பு, ஒரு சாமம்மட்டாக நியாயப்பிரமாணத்தை வாசித்து மற்றச்சாமத்திலே பிரார்த்தனை செய்தார்கள். பின்பு யாவரும் ஒருமித்துக் கூடி பிரார்த்தனைபண்ணி நாம் யெகோவாவை விட்டுப் பிரிவதில்லையென்றும், அன்னியருடன் கலப்பதில்லையென்றும், ஓய்வுநாளை கிராசரிப்பதில்லையென்றும்; ஏழாம் வருஷத்தை ஓய்வு வருஷமாகக் கைக்கொள்வோமென்றும், வருஷாந்த காணிக்கைகள் தேவாலயத்துக்குக்கொடுப்போமென்றும், மற்றும் ஒவ்வொரு பிரமாணங்களையும் தவறுமற் கைக்கொள்வோமென்றும் உடன்பாடுபண்ணிக் கையொப்பமும் வைத்தார்கள். (நிகிமியா. ௧0.

௨௭. இந்த எஸ்றவும், நிகிமியாவும் யெருஷலேமைப் பரிபாலித்து வருகையில் அகஷ்வேரோஷ் என்ற லொஞ்சிமேனஸ் பாபிலோனிலே இராசாவாயிருந்தான். அவன் நூற்றிருபத்தேழு கெடிஸ்தலங்களிலிருந்து அதிகாரஞ் செலுத்தின சகல அதிகாரிகளையும் சூசான் கோட்டைக்கு அழைத்து விருந்துகொண்டாடிவருகையில் அவன் மனைவியாகிய வஷ்தியும் ஸ்திரிகளுக்கு விருந்து செய்தாள். அப்பொழுது இராசா தன் மனைவியுடைய சௌந்தரியத்தை விருந்தாளிகளுக்குக் காட்டும்பொருட்டாய் அவளைத் தன் சமுகத்தில் வரும்படி

கட்டளையிட்டு அண்ணகர்களை அனுப்ப, அவ ள் வரமாட்டோமென்று மறுத்ததினால் அவளை த் தள்ளிவிட்டு யூதஸ்திரியாகிய அதசாள் என் னும் எஸ்தரை மனைவியாகத் தெரிந்துகொண் டான்.* (எஸ்தர் ௨.

௨அ. இப்படியிருக்கையில் இராசாவுடைய காவற்காரரில் இருவர் இராசாவைக் கொலைசெ ய்ய ஆலோசித்திருப்பதை மோர்திகாயி அறிந் து எஸ்தருக்குச் சொல்ல, எஸ்தர் அதை இரா சாவுக்கு அறிவித்தாள். இராசா அவர்களைக் கொலைசெய்வித்து மோர்திகாயின்மேற் பட்சம் வைத்தான். இந்த இராசாவுக்கு ஆமானென் னுமொருவன் மகா பிரபுவும் முதலாம் மந்திரி யுமாயிருந்ததினாலே யாவரும் ஆமானை வணங் கிவந்தார்கள். மோர்திகாயியோ ஒருகாலத்தி லும் ஆமானை வணங்குகிறதில்லை. அதினால் ஆமான் கோபங்கொண்டு இராசாவிடத்திற் போய் உமது இராச்சியத்தில் உமது கட்டளை யைக் கைக்கொள்ளாத சனங்களிருக்கிறார்கள். அவர்கள் யாவரையும் கொல்லும்படி ஒரு கட் டளைபண்ணினால் வெகு திரவியங் கொடுப்பே னென்று சொல்ல, இராசாவும் அப்படியே கட்

*இவள் யெருஷலேமிலிருந்து சிறைப்பட்டுப்போ னவர்களுக்குள் பேன்யாமீன் வமிசத்தானான கீஷி ன்பௌத்திரனும் இரண்டாம் மந்திரியுமானமோர்தி காயியென்னும் யூதனுடைய சிற்றப்பனுக்கு மகளு ம் மோர்திகாயிக்கு வளர்ப்புப்பிள்ளையுமாயிருந்தா ள். இராசா மறுகன்னியரைப்பார்க்க இவளை அ திகம் நேசித்தான். (எஸ்தர், ௨.

டளைபண்ணினான். ஆமான் அந்தக் கட்டளை
யை அவரவர் பாஷையிலே எழுதுவித்து இரா
சாவுடைய கீழ் அரசர் யாவருக்கும் அனுப்பி
னான். அதிலே சகல யூதரையும் ஒரு நாளைக்
குட் சங்கரித்து அவர்கள் உடைமைகள் முற்
றையும் கொள்ளையிடவேண்டுமென்று எழுதப்
பட்டிருந்தது. (எஸ்தர், ௩.

௨௯. அதை மோர்திகாயி அறிந்து மகா துக்க
ங்கொண்டவனாகி இராசவாசலில் வந்திருந்தா
ன். அதை எஸ்தர் அறிந்து அவன் செய்தி
யை விசாரிக்கத் தனது அந்தப்புரத்தின் காவ
ற்காரனாகிய அண்ணகனொருவனை அனுப்பினா
ள். அவன் போய் மோர்திகாயியை விசாரிக்க,
மோர்திகாயி ஆமான் எழுதியனுப்பிய பிரமா
ணத்தை அவனுக்கு அனுப்பினான். அதை அ
வள் வாசித்து என்ன செய்வேன்? யாதொ
ருவர் இராச உத்தரவு இல்லாமல் இராசா
வுடைய உட்பிராகாரத்திற் போகக் கூடாது.
போனவர்களுக்குள் இராசா தனது செங்கோ
லை நீட்டிக் கடாட்சம் காட்டப் பெற்றவ
ர்மாத்திரம் தப்புவார், மற்ற யாவரும் கேள்வியி
ன்றிக் கொலையுண்பார்களென்று சொல்லி அ
னுப்பினாள். (எஸ்தர் ௪.

௩௦. அதை மோர்திகாயி கேட்டுச் சகல யூத
ரும் சங்கரிக்கப்படும்படி கட்டளை பிறந்திருக்க
யூதஸ்திரியாகிய நீ ஒருத்தி தப்பிக்கொள்வாயெ
ன்று நம்பாதே. நீ உன் சீவனைக் காக்க விரு
ம்பி அசதியாயிருந்தால் நீயும் உன் குடும்பத்தா

ரும் அழிவீர்கள். மற்றும் யூதரை யெகோவா வேறொருவழியாய் இரட்சிப்பாரென்று சொல்லி அனுப்பினான். அதற்கவள், நீர் போய்சூஷாணிலுள்ள யூதர் அனைவரையுஞ் சேர்த்து மூன்றுநாளாக உபவாசம்பண்ணி யெகோவாவைப் பிரார்த்தியும். அப்படியே நானும் என் பணிவிடைக்காரிகளும் மூன்றுநாளும் உபவாசித்துப்பிரார்த்தித்து மூன்றாம்நாளில் இராசாவிடத்திற் போவேனென்று சொல்லி அனுப்பினாள்.

(எஸ்தர், ௪. ௧௭.

௩௧. அந்தப் பிரகாரம் மோர்திகாயியும் மற்றும் யூதரும் கூடி உபவாசித்துப் பிரார்த்தித்தார்கள். அப்படியே எஸ்தரும் மூன்றுநாளாக உபவாசித்து மூன்றாம்நாளில் இராசாவின் அத்தாணிமண்டபத்துக்கெதிரேபோய் நிற்கிறதை இராசா கண்டு தன் செங்கோலை நீட்ட, அவள் போய் அதன் நுனியைத் தொட்டாள். அப்பொழுது இராசா உனக்கென்ன வேண்டுமென்று கேட்டான். அவள் நீரும் ஆமானும் இன்றையிற்றினம் நான் ஆயத்தப்படுத்தின விருந்துக்கு வரவேண்டுமென்று கேட்டாள். அதற்கு இராசா சம்மதிகொடுத்தான். அதை ஆமான் அறிந்து இராசாவும் இராசாத்தியும் தன்னை இவ்வளவு கனிக்க மோர்திகாயி தன்னை ஆசாரஞ் செய்யாமலிருக்கிறானே. அவனை என்னசெய்ய வேண்டுமென்று வீட்டாரிடத்தில் உசாவ, அவன் மனைவி ஐம்பது முழ உயரமுள்ள ஒரு மரத்தை நிறுத்தி அதிலே மோர்திகாயியைத் தூ

க்கும்படி இராசாவிடத்தில் உத்தரவுபெற்று அவனைத் தூக்குவியுமென்றாள். அவன் அதற்குச் சந்தோஷப்பட்டான். (எஸ்தர், ரு.

௩உ. அன்றிரவு இராசா தனக்கு நித்திரைவராததினிமித்தம் தன் நாளாகமத்தை வாசிப்பித்தான். அப்பொழுது தன் காவற்காரரில் இருவர் தன்னைக் கொல்ல ஆலோசித்ததை மோர்திகாயி அறிந்து, தனக்கு எஸ்தர் வழியாய் வெளிப்படுத்தித் தன்னைக் காப்பாற்றினனென்கிறதைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், ஆமான் வந்து நிற்கிறதைக் கண்டு அவனை உள்ளே அழைப்பித்து இராசா தனக்குப் பட்சமுள்ள மனுஷனுக்கு என்ன கனம்பண்ணவேண்டுமென்று கேட்டான். அதற்கு ஆமான் இராச்சியம்தனக்குக் கிடைக்கப் போகிறதென்றெண்ணி இராசாவே, நீர் கனம்பண்ண விரும்புகிற மனுஷனுக்கு இராசவஸ்திரமும் இராசமகுடமும் புனைந்து அவனை இராசாவின் குதிரையிலேற்றி அவனுக்கு முன் இராச பிரபுக்களில் ஒருவன் கட்டியங்கூறிச்செல்ல அவனை நகர்வலஞ் செய்விப்பாரென்றான். அப்பொழுது இராசா நீ சொல்லியபிரகாரம் மோர்திகாயிக்குச் செய்யென்றான். அந்தப்படியே ஆமான் செய்தபின் வெட்கத்துடனே தன் வீட்டுக்குத் திரும்பினான். (எஸ்தர், சு. கஉ.

௩௩. பின்பு இராசாவும் ஆமானும் எஸ்தருடைய விருந்திலிருக்கையில் இராசா எஸ்தருடனே நீ என்ன கேட்டாலும் தருவேனென்றான். அதற்கவள் நானும் என் சனங்களும் இராசாவி

ன் நயத்துக்கு அடிமைகளாக விலைப்பட்டால் ஒன்றும் பேசேன். அப்படியல்ல. நாம் அனைவரும் கொலைக்கே விலைப்பட்டோம். எங்கள் சத்துருக்களுக்கு நாம் கொலைக்கு விலைப்பட்டதினாலே இராசாவுக்கு வரும் நயம் நாங்கள் மடிவதினால் வரும் நட்டத்திற்குக் காணாது என்றாள். அதற்கு இராசா இப்படிச் செய்யத் துணிந்தவன் யாவன்? அவன் எங்கேயென்றான். அதற்கவள் இராசாவே, இந்த ஆமான்தானென்றாள். உடனே இராசா கோபத்துடனே எழுந்து சோலைக்குப்போக, ஆமான் எஸ்தரிடத்தில் மன்றாடும்படி அவளுடைய மஞ்சத்தில் விழுந்துகிடந்தான். அதை இராசா அறிந்து இப்படியுமாவென்று கடுங்கோபங்கொண்டிருக்கிறபொழுது அண்ணகரொருவன், இந்த ஆமான் மோர்திகாயியைத் தூக்கும்படி தன் வீட்டில் ஒரு தூக்குமரத்தை நிறுத்தியிருக்கிறானென்றான். இராசா ஆமானையே அதிலே தூக்கிவிடுங்களென்றான். (எஸ்தர், எ.

௩௪. பின்பு இராசா தான் ஆமானுக்குக் கொடுத்த மோதிரத்தை மோர்திகாயிக்குக் கொடுத்து அவனை அதிகாரியாக்கி முன் நியமித்த கட்டளையை வியர்த்தமாக்கும்பொருட்டு மறுகட்டளை எழுதி அஞ்சற்காரர்வழியாய்த் தேசமெங்கும் அனுப்பினான். இதினாலே அகஷ்வேரோசுக்குக் கீழாயிருந்த நூற்றிருபத்தேழு இராச்சியங்களிலுமிருந்த யூதரும், யூதமார்க்கமும்பிரபலப்பட்டன. யெகோவாவுடைய மகிமையும்

பிரஸ்தாபமாயிற்று. யூதருடைய சத்துருக்கள் வெட்கப்பட்டார்கள். ஆமானும் அவன் சந்ததியும் ஏகநாசமாக்கப்பட்டார்கள். இதினாலேயெ கோவா, யாத். ௭. கச ம். வசனத்திலே அமலேக்கரென்னும் பேரும் வானத்தின்கீழிராமல் நாசமாய் அவர்களை நிருமூலமாக்குவேனென்று நியமித்த நியமம் ஆமான்வரையில் முடிவுபெற்றது. (எஸதர், க.

மேற்சொல்லப்பட்ட பார்சிய இராசனாகிய அர்தக்ஷேக்சீஸ்லோஞ்சிமேனஸ் அரசாண்ட காலம்முழுவதிலும் அவன் யூதருக்குஞ் சகாயனாயிருந்தான். (கி. மு. சஉச.

உம். ஷேக்சீஸ்.

அவனுக்குப்பின், உம். ஷேக்சீஸ் (கி மு. சஉசல்.) உ. மாதம் அரசாண்டு மரித்தான்.

அவனுக்குப்பின் சோக்டியேனஸ் ௭. மாதம் அரசாண்டு மரித்தான். (கி. மு. சஉ௩.

தாரியாவெஷநோதஸ்.

௩ரு. அதற்குப் பின்பு தாரியாவெஷநோதஸ் இராசாவாகி, கக. வருஷம் அரசாண்டான். அவன் காலத்தில் நிகிமியா. (கி. மு. சஉ௫.) யூதேயா தேசத்துக்கு அதிபதியும், யோய்தா பிரதான ஆசாரியனுமாயிருந்தார்கள். இவ்வாசாரியனுடைய புத்திரனாகிய மனாஷே புறச்சாதியானுஞ் சமாரிய தேசத்து அதிபதியுமாயிருந்த சனபல்லாத்தின் புத்திரியை விவாகம்பண்ணியிருந்ததுமன்றித் தேவாலயத்தைச் சார்ந்த ஒரு மண்டபத்திலே தனது மனைமக்களுடனே வா

சம்பண்ணினான். ஆனதுகொண்டு நிகிமியா யூதரையும் புறச் சாதியாரையும் பிரித்தபோது மனாஷேயும்அவன் குடும்பத்தாரும்அவ்விடத்தில் நிற்கக் கண்டு அவர்களைத் தேவாலயத்துக்குப் புறம்பே அகற்றி விட்டான். மனாஷேயோ தன் மாமனாற் கிரீசீம் மலையிலே கட்டப்பட்டிருந்த ஆலயத்துக்குப் பிரதானஆசாரியனானான்.
(யோவான் ௪. ௨௦.

நிகிமியா மரணமடைந்த பின்பு யூதேயா சீரிய தேசத்துடனே இணைக்கப்பட்டபடியால் அது சீரிய அதிபதிகளால் ஆளப்பட்டது. அதினிமித்தம் யூதருக்குள்ளிருந்த பிரதான ஆசாரியர் அவர்களுக்குக் கீழாக அத்தேசத்துக்கு அதிபதிகளுமாயிருந்தார்கள். அந்நாட்டொடங்கிக் கிறிஸ்துவின் உற்பத்தி காலம் வரைக்கும் பிரதான ஆசாரியரே யூதருக்கு அதிபதிகளாயிருந்தார்கள். (ஆதி. ௪௯. ௧௦.

அர்தக்ஷேக்சீஸ் நிமோன்.

௩௬. தாரியாவெவ்ஷ் நோதஸ்இறந்தபின் அர்தக்ஷேக்சீஸ் நிமோன் ௪௬. வருஷம் அரசாண்டான். இவன் காலத்தில் யூதருக்குச் சகாயங் கிடைத்தது.
(கி. மு. ௪௦௫.

தாரியாவேஷ் ஒகஸ்.

அவன் மரணமடைந்த பின் தாரியாவேஷ் ஒகஸ், ௨௧. வருஷம் அரசாண்டான். பிரதான ஆசாரியனாகிய யோசானான், ௩௨. வருஷம் ஆசாரியத்தொழிலை நடப்பித்து இவன் அரசாண்டவருஷம், ௧௮ம். வருஷத்திலே மரணமடைய அவன் மகனாகிய யதுவாபிரதான ஆசாரியனானான்.

ஆர்சிஸ். தாரியாவெஷ் ஒகசுக்குப் பின் ஆர்சிஸ் இராசனாகி, ௨. வருஷம் அரசாண்டு மரித்தான்.

தாரியாவெஷ் கொடோமெனஸ். ஆர்சிசுக்குப்பின் தாரியாவெஷ் கொடோமேனஸ் இராசாவாகி மகாபிரபலமாய் மேதிய பார்சிய ராச்சியத்தை அரசாண்டுவந்த, ௪ம். வருஷத்தில் தானியேல் சொப்பனத்திலே கண்ட ஆட்டுக் கடாவும் நெபுகத்நெத்சர் சொப்பனத்திலே கண்ட பித்தளை உதரமும் தொடையுமாகிய மகா அலெக்சந்தர் மக்கேதோனியாவிலிருந்து எழும்பினான். (கி. மு. ௩௨௧.

அலெக்சந்தர். ௩௭. இவன் பார்சியாவுக்குவந்து மேதியபார்சிய ராச்சியத்தை நிருமூலப்படுத்தி அதைக் கிரேக்க இராச்சியத்துடன்இணைத்தான். அதற்குப் பின்பு இந்த அலேக்சந்தர் யூதர் செய்த அவமதிக்காக அவர்களைத் தண்டிக்கும்படிக்கு யூதேயா தேசத்துக்குட்சென்று அதின் இராசதானியாகிய யெருஷலேம் நகரிக்குச் சமீபித்து வருகையில், பிரதான ஆசாரியனாகிய யதுவா தேவ உத்தரப்படி ஆசாரிய வஸ்திரங்களைத் தரித்து அங்கிருந்த ஆசாரியர் லேவியர் பிரபுக்களாகிய சிலரைச் சேர்த்துக்கொண்டு அலேக்சந்தரைச் சந்திக்கப்போனான். அலேக்சந்தர் அவ்வாசாரியனையும், அவன் பரிசாரகரையும் கண்டு கோபந்தணிந்து அவர்கள் யாவரையும் கனம்பண்ணி நடத்தி, யதுவாவைக்கட்டித் தழுவி அவர்களோடே கூடத் தேவாலயத்துக்குட் புகுந்து யெகோவாவுக்குப் பலிசெ

லுத்தினன். அப்பொழுது யதுவா (தானி. அ. அதிகாரத்தில் அவனைக்குறித்து கி.மு. ௫௰௪ல்) சொல்லிய தீர்க்கதரிசன் வாக்கியத்தைக் காண்பித்து, அகோ இராசனே, இந்த மேதிய பார்சிய ராச்சியத்தை நீரே சுயாதிபத்தியம்பண்ணுவீரென்று யெகோவா சொல்லியிருக்கிறரென்று சொல்ல, அலெக்சந்தர் உச்சாகங்கொண்டு யூதர் யாவரும் தங்கள் வேதப்பிரமாணத்தின்படி நடக்கலாமென்றும், அவர்கள் முன் எழு வருஷத்துக்கொருமுறை இராசாங்கத்துக்குக் கொடுத்துவந்த திறையைக் கொடுக்க வேண்டாமென்றுங் கற்பித்து எகிப்துக்குப் போய் அதைவெற்றிகொண்டு அவ்விடத்தில் அலெக்சந்திரியா என்னும் நகரத்தையுண்டாக்கி அதிலே திரளான் யூதரைக் குடியேற்றினன். அதற்குப் பின்பு அவன் தாரியாவெஷகொடொமேனஸ் என்பவனை எதிர்த்து அவனோடு போராடி அவனையும் வென்று மேதிய பார்சிய ராச்சிய முழுவதையும் சருவசங்காரப்படுத்தி, ௧௨. வருஷம் ராச்சியம்பண்ணி, ௩௨. வயசில் மரித்தான்.

(கி. மு. ௩௨௩.

அலெக்சந்தர்மரித்தபின் அவனுடைய இராச்சியத்தை அவனுடைய சேனபதிகளாகியதொலிமிலெக்கஸ், கசண்டா, செலுக்கஸ், அந்திக்கோனஸ் என்னும் நால்வரும் பங்கிட்டுக்கொண்டார்கள். (தானி. அ. ௧௨.

௩அ. அப்பொழுது யூதேயாதேசம் எகிப்துதேசத்தைஆண்டதொலிமிலெக்கஸ் உடையபங்குக்கு அகப்பட்டது.

ஒனையஸ்.

தொலிமிலேக்கஸ் யூதாவை அரசாண்டுவருகையில் பிரதான ஆசாரியனாயிருந்த ஒனையஸ் தொலிமிலேக்கசுக்கு கீழமையாதிருந்ததினால் தொலிமிலேக்கஸ் யூதேயாவுக்குட்புகுந்து யெருஷலேமை முற்றிக்கையிட்டு அங்குள்ள யூதரில் ஒருலட்சம்பேரைச் சிறைப்படுத்தி எகிப்துக்குக்கொண்டு போனான். ஆயினும் அவனுக்குச் சிறைப்பட்ட யூதரும் மற்ற யூதரும் தங்கள் சொந்தப் பிரமாணத்தின்படி நடக்க உத்தரவுகொடுத்ததுமன்றி ஒவ்வொரு ஏழாம் வருஷத்திலும் திறைகொடாதபடியும் பண்ணினான். இச்சகாயத்தை யூதேயாவிலுள்ளயூதரில் அனேகர் கண்டுமனத்தாராளமாய் எகிப்துக்கு ஓடிப்போய்க்குடியேறினார்கள்.(கி.மு. ௩00

சீமோன்ஹிர்கான்.

௩௬. இந்தஓனையஸ் என்னும் ஆசாரியன் இறந்தபின்பு அவனுடைய இடத்துக்கு சீமோன் ஆசாரியனானான். அவன் மகாகல்வியுள்ளவனும், விவேகியும், வேதாப்பியாசியுமாயிருந்தான். இவன் தேவாலயத்தைப் பழுதுபார்த்ததுமன்றி, எஸ்ரு, நிகிமியா, எஸ்தர், நாளாகமம், மல்கியாவென்னும்வேதப்பிரதிகளையும் பழைய ஏற்பாட்டோடு இணைத்துவைத்தான். இன்னும் இவன் யூதருக்குள் நூற்றிருபதுபேர்கூடுகிற மகாலோசனைச் சங்கத்துக்குப் பிரபுவாயிருந்தான். இவனுடையகாலத்தில்இந்தச்சங்கத்தைச் சேர்ந்த ஆசாரியனாகிய எஸ்ருவும், அதிபதியாகிய நிகிமியாவும், தீர்க்கதரிசிகளாகிய அகியா, சகரியா, மல்கியாளன்பவர்களும் பழைய ஏற்பாட்டைக் கிரமப்படு

த்தும்படி சீமோன் கொண்ட முயற்சிக்கு உதவி க்காரராயிருந்தார்கள். இந்தச் சீமோன் அந்த மகாசங்கத்துக்குத் தலைமையையும் ஆசாரியத் தொழிலையும் கொண்டிருந்த பிரதானிகளுக்கு ள் ஒருவனாயிருந்து மரித்தான். இவனுடைய காலத்தில் குறித்த மகாசங்கம் நின்றுபோயிற்று. (கி. மு. உ௯௯.

எலியேசர். இந்தச்சீமோனிறக்கஇவனுடையகுமார ன், உம். ஓனையஸ் சிறுபிராயமாயிருந்தபடி னால்இவனுடையதம்பியாகிய எலியேசர்மு ப்பதுவருஷம் ஆசாரியத்தொழில் நடப்பித் தான். இந்த எலியேசருடைய காலத்திலே தான் எழுபதுபேர்கூடிய சங்கத்தார் பழையஉ டன்படிக்கையை எபிரேயப்பாஷையிலிருந்து கிரேக்கபாஷைக்குத் திருப்பினார்கள். அந்த மொழிபேர்ப்புக்கு செப்தசிந்த் என்று பெ யர். அக்காலத்திலே தானியேலால் சிவி ங்கியென்று குறிக்கப்பட்ட கிரேக்க இராச்சிய ங்களிற் போய்க் குடியேறின யூதர் எல்லாரும் அந்தப்பாஷாந்தர வேதத்தைக் கொண்டுபோய் எகிப்து, சீரியா, மக்கேதோனியா முதலிய இட ங்களிற் பரப்பினார்கள். இதுகாரியம் எகிப்து இராசனாகிய பில்தெல்பியஸ் உடைய அனும திப்படி செய்யப்பட்டது. (கி. மு. உ௬௦.

மனாசே. இந்த எலியேசருக்குப் பின்பு மனாசே ஆ சாரியனாயிருந்து ஷமாரிய அதிபதியாயி ருந்த சன்பல்லாத்தின் மகளை விவாகஞ்செ ய்து தேவாலயத்தின் களஞ்சியத்திற் குடியி

ருந்து நிகிமியாவினலே துரத்துண்டு ஷமாரியாவுக்குப் போய் மாமனுகிய சன்பல்லாத்து இவனிமித்தம் கிரிசீம்மலேயிற் கட்டுவித்த ஆலயத்துக்கு மகா ஆசாரியனுனன். (கி. மு. உ௫௦.

உம். ஓனையஸ். முந்தின சீமோனுடைய புத்திரனுகிய ஓனையஸ் ஆசாரியனுனன். இவன் மகாலோபியாகி எகிப்துஇராசனுக்கு இறுக்கவேண்டிய இறைஇருமல் இராசாவினலே தானும் தன்சனங்களும் இடுக்கண்பட்டிருக்கிறதை அவனுடய மருமகனுகிய யோசேப்பென்பவன் அறிந்து பணத்தைத் தேசத்திலே தண்டி இறுத்து இராசசகாயம்பெற்ருன். (கி. மு. உககூ.

உம். சீமோன். ஒனையஸ் மரிக்க இவனுடைய மகனுகிய சீமோன் ஆசாரியனும் அதிபதியுமானுன். அக்காலத்தில் எகிப்துஇராசனுகிய தொலிமி பைலோபெற்றர் சீரியாதேசத்துடனே யுத்தஞ்செய்து வென்று செறுவங்கொண்டு எகிப்துக்குத் திரும்பிப்போகையில் அவன் யெரூஷலேமின் தேவாலயத்திற் புகுந்து யெகொவாவுக்குப் பலியிடத் துணிந்தபொழுது இந்தப் பிரதான ஆசாரியனும் மற்றுஞ் சிலரும் தடுத்தார்கள். அதை அவன் கேளாமல் உட்புகுந்த சமயத்தில் தேவ உக்கிரத்தினலே திடுக்கிட்டுச் சோர்ந்து விழுந்தும் சலம்சாதிக்கிறகுணம் நீங்காதவனுய்த் தன ஊருக்குப் போய் தனக்கு முன்னிருந்த இராசாக்கள் யூதருக்கும் தேவாலயத்துக்கும் விட்ட மானி

யங்களை எடுத்து, அன்னிய தேவர்களுக்கு ஆரா
தனைசெய்யும்படி கட்டளையிட்டான். அதினா
லே யூதர்கலகம்பண்ண அவன் நாற்பதினாயிர
ம்யூதரைச் சங்கரிப்பித்து பின்பு பதினெட்டுவ
ருஷம் அரசாண்டு மரித்தான். (கி. மு. ௧௬௬.

ஓநையஸ்.

இவன் உம். சீமோனுடைய மகன். இவ
ன் ஆசாரியனாயிருக்கையில் சீமோனென்
றவன் தேவாலயத்தின் சேமத் திரவியங்க
ளைக் கொள்ளையாடி வரும்படி சூரிய இரா
சாவிடத்திற்போய் உளவுசொல்ல அவன்
கீலயோடோரேசை அனுப்பினான். அவன்
ஆலயத்திலுட்புகுந்து திரவியங்களைக் கொள்ளை
யாடிப் புறப்படும்நேரத்திற் தெய்வச்செயலாய்
ஓர் பயங்கர தரிசனை அடைந்து மயங்கி விழ, ஓ
நையஸ் அவனுக்காக விண்ணப்பஞ்செய்தான்.
அப்பொழுது அவன் தேவசகாயம்பெற்றுத் தன்
ஊருக்குத் திரும்பினான். அதின் பின்பு அந்
த இராசாவுக்குப்பின்வந்த அஜூரிய இராசா இ
வனுடைய பிரதான ஆசாரியத்துவத்தையும்,
அதிகாரத்துவத்தையும் நீக்கி அந்தியோகியா ந
கரத்துக்கு அனுப்பிவிட்டான். அங்கிருக்கையி
ல் இவன் தம்பியாகிய மெனிலோஸ் இவனை
இரகசியத்திற்கொலைசெய்தான். (கி. மு. ௧௭௦.

யாசோன்.

இவன் மூன்றாம் ஓநையஸ்உடைய சகோ
தரன். இவன் ஆசாரிய அதிகாரத்தைக் கை
க்கூலியினாலே பெற்று யெருஷலேமிலே
விளையாட்டுக் களங்களை ஸ்தாபித்து வேத
விரோதமான சடங்குகளையும் ஏற்படுத்திவ
ந்தான். ஒரு முறை இவன் தான் இராசாவுக்கு

கொடுக்கவேண்டிய இறையைத் தன் தம்பியாகிய மெனிலோஸ் இடத்திலே கொடுத்தனுப்ப அவன் வாங்கிக்கொண்டுபோய் இராசாவுக்குக் கொடுத்துத் தமையனுடைய அதிகாரத்தைத் தனக்குக் கொடுத்தால் தான், தமையனிலும் அதிக இறையிறுப்பேனென்று சொல்லி அதைப் பெற்றுக்கொண்டு வந்து யாசோனைத் துரத்திவிட, இவன் பரதேசியாய்த் திரிந்து மரணமடைந்தான். (கி. மு. ௧௭௩.

மெனிலோஸ்.

யாசோனுடைய தம்பியாகிய மெனிலோஸ் ஆசாரிய அதிகாரம் பெற்றுவந்து தான் இராசாவுக்குச் சொன்னபடி இறையைக் கொடுக்கும்பொருட்டாக தேவாலயத்தின் பொற்பாத்திரத்தை எடுத்து விற்று வேண்டிய இறையிறுத்தான். மேலும் அசூரியாவின்இராசாவாகிய அந்தியோகிஸ் இப்பைபேனீஸ் யெரூஷலேமுக்கு வந்து அதை அநாசாரமாக்கும்பொருட்டுப் பன்றியைப் பலியிடுவித்தான். இப்படி இவன் துராசாரனாயிருந்ததினால் எழும்பின இராசகலகம் இவன் பொருட்டாய் எழும்பினதென்று இராசா அறிந்து இவனை ஐம்பதுமுழ உயரமுள்ள ஒரு சாம்பற்றூம்பில் தலைகீழாயிடுவித்துக் கொல்லுவித்தான். (கி. மு. ௧௬௨.

லிசிமாகஸ்.

இவன் மெனிலோஸ் உடைய ஏவற்படி தேவாலயத்தின் பொற் பாத்திரங்களை எடுத்து விற்றதினிமித்தம் எழும்பின கலகத்தில் மரித்தான். (கி. மு. ௧௭௦.

மத்தேதியஸ்.

இவன் மக்கேபியருக்கு முற்பிதா. இவ
ன் வேதவைராக்கியனாய்த் தானும், தன் கு
டும்பமும் தன்னைச் சேர்ந்தவர்களும் வேத
ப்பிரமாணத்தையே கைக்கொண்டு நடப்
போமென்று சங்கற்பித்துக்கொண்டு நடந்த
பொழுது அசூரிய இராசனாகிய சம். அந்தியோ
க்கஸ்வழியாய் வந்த இடுக்கண்களைத் தாங்கமா
ட்டாமல் வனத்துக்கோடி அனேகயூதரைத் த
ன்னோடே சேர்த்துக்கொண்டு இடையிடையே
யூதாவின் நகரங்கள்தோறும் போய் அவர்கள்
கைக்கொண்டிருந்த விக்கிரகாராதனையைத் தடு
த்து விக்கிரகங்களையும் நாசப்படுத்திப் புதிதா
ய்ப் போன யூதரைக் கொலைசெய்து அவர்களு
ம் அன்னியருங் கொண்டுபோயிருந்த வேதப்
பிரதிகளையுமெடுத்து ஒன்றாய்ச்சேர்த்துத் தன் பி
ள்ளைகளுக்குவிருத்தசேதனமும்பண்ணி,தேவா
லயத்தின் சகல ஆசாரங்களையும் ஆசரித்து மோ
சே இட்ட பிரமாணப்படி யாவையும் நடத்தித்
தனது மூன்றாம் புத்திரனாகிய யூதாசைத் தன்னி
டத்துக்கு நியமித்துத் தனது இரண்டாம் புத்திர
னான சீமோன் அதியூகி ஆகையால், இவனை அ
வனுக்கு ஆலோசனைக்காரனாக ஏற்படுத்தி மரித்
தான். (கி. மு. ௧௬௬.

யூதாஸ் மக்கேபியஸ்.

இவன் மத்தேதியஸ்கு மகன். இ
வன் தன் பிதாவைப்போல வேதவைரா
க்கியனாய் நடந்து தேவாலயத்தையுஞ் சு
த்தஞ்செய்து ஆலயப் பிரதிஷ்டையின்
உற்சவத்தையுங் கொண்டாடித் தன்னுட
னே யுத்தத்துக்கு வந்த அந்தியோக்கஸ் இப்பை

பானீஸையும் அந்தியோக்கஸ்யூப்பித்தரையும் தேமேத்திரி சோத்தரையும், அவர்கள் தளங்களையும் வென்றும், சோத்தருடைய சேனைத்தலைவனாகிய பக்கைதீயஸாலே கொலைசெய்யப்பட்டான். (கி. மு. ௧௬௧.

ஆல்கிமஸ். இவன் ஆரோனுடைய வமிசத்தான். இவனைச் சூரிய இராசனாகிய தேமேத்திரியு சோத்தர் ஆசாரியனாக ஏற்படுத்தினான். இவன் அன்னிய சாதியாருக்குச் சங்காத்தியாய் பரிசுத்தஸ்தானத்தின் நடுச்சுவரைத் தகர்த்து யூதரைப்போல அன்னியரும் தேவாலயத்திலுட்பிரவேசிக்க, உத்தரவுகொடுத்து வழுவாய் நடந்ததினாற் தேவசாபம்பட்டவனாய்க் கொடிய திமிர்வாதமடைந்து யாதனைப்பட்டு மரித்தான். (கி. மு. ௧௬௦.

ஒநையஸ். இவன் மூன்றாம் ஒநையஸ் உடைய மகன். இவன் ஆசாரியத்துவத்துக்கு உரித்துள்ளவனாயிருந்தும் சூரிய இராசாவாகிய யூபேத்தராலே விலக்கப்பட்டு எகிப்து தேசத்துக்கோடி அங்கே தொல்லேமேபைலோமித்தருடைய அநுமதிப்படி பேத்ஷிமேஷ் என்னும் நகரத்தில் ஓர் தேவாலயத்தைக் கட்டி யெருஷலேமின் தேவாலயத்தில் கிரியாசாரங்களுக்குச் சமமான ஆசாரங்களைச் செய்யும்படி (எசாயா. ௧௯. ௧௮. ௨௨.) மட்டுமுள்ள வசனங்களை எடுத்து அங்குள்ள யூதருக்குக் காட்டி எவிவந்தான். இந்த ஆலயம் யெருஷலேமின் தேவாலயம் அழிக்கப்பட்ட நாள்வ

ரைக்கும் நிலைபெற்றிருந்தது. இவன் மரித்தது. (கி. மு. ௧௫௦.

யோனத்தான்: இவன் யூதாஸ் மக்கேபியஸ்உடைய சகோதரன். இவன் சீரியாராசாவாகிய அலேக்சந்தர் பாலாசினாலே ஆசாரியனாக நியமிக்கப்பட்டுச் சகல இஸ்ரவேலரையும் வேதப்பிரமாணப்படி நடக்கச்செய்து, யூதமார்க்கத்தை வரம்புபண்ணித் தேவாலயத்தையும் புதுப்பித்து அதின் மதில்களையுந் திருத்திப் பரிபாலித்து வருகையில் திறைப்பன் என்னும் வஞ்சகனுடைய சூதிலே சிக்கிச் சிறைப்பட்டுத் தனது இரண்டு பிள்ளைகளுடனே கொலையுண்டான். (கி. மு. ௧௪௪.

சீமோன்: இவன் யோனத்தானுடைய சகோதரன். இவனை யூதரும் சீரிய இராசாவாகிய தேமெத்திரியு நைக்கேற்றரும் ஆசாரியனாக ஏற்படுத்தினார்கள். இவன் யூதேயாவின் நகரங்களை அரணாக்கித் தனக்கும், தன் சகோதரர் நால்வருக்கும், தன் பெற்றாருக்குமாக ஏழு ஞாபகஸ்தம்பங்களைக் கட்டி, சீரியராசா முன் கன்மலைமேற் கட்டுவித்த துருக்கத்தையும் இடித்து, வேதப்பிரமாணத்திலே தீவிரபத்தியுள்ளவனாய் நடந்து, சகலராலும் நேசிக்கப்படத்தக்கவனாயிருந்தான். அப்பொழுது இவனுடைய மருமகனாகிய தொலிமியூஸ் இவனுடைய அதிகாரத்தைத் தான் பெற்றுக்கொள்ள விரும்பி யெரிகோவிலே விருந்துக்கு அழைத்து இவனையும் இவன் குமாரர் இருவரையுஞ் சூதாய்க் கொலைசெய்தான். (கி. மு. ௧௩௫.

**யோவான் கார்கேனஸ்.**

இவன் சீமோனுடைய மகனும் தீவிரபத்தியுள்ள பரிசெயனுமாயிருந்தான். இவனுடைய யோக்கியத்தினிமித்தம் சகல யூதரும் இவனை நேசித்தார்கள். இவன்மேற் பகைகொண்டிருந்த அர்தியோக்கஸ் என்னும் சீரிய இராசா மரித்தபின்பு இவன் தன் அதிகார எல்லையைப் பரப்பி, உரோமராசனுடன் தன் பிதாப் பண்ணிவைத்தசமாதான உடம்படிக்கையைப் புதுப்பித்துச் ஷமாரியாவின் இராசதானியாகிய ஷிகேமை வசப்படுத்தி, அதிலே ௧௯௮. வருஷத்துக்குமுன் சனபல்லாத்துத் தன் மருமகனாகிய மனாசேயினிமித்தங் கிரிசீம்மலையில் கட்டுவித்த ஆலயத்தை இடித்து யூதேயாவிலே குடியேறியிருந்த ஏதோமியரில் யூதமார்க்கத்துக்கு அமையாத யாவரையுங் குடியெழுப்பி மக்கேபியஸ் என்னும் பிரபுகளுக்குவாசஸ்தானமாகப் பாரிஸ் நகரத்திலே மாளிகைகளைக் கட்டி முப்பதுவருஷமாக யூதேயாவிலே அதிகாரஞ்செலுத்தி வயோவிருத்தனாய் மரித்தான். (கி. மு. ௧௦௬.

**அரிஸ்தோப்புலஸ்.**

இவன் யோவான் கார்கேனஸ்உடைய சேஷ்டபுத்திரன். இவன் பிதாவுடைய இடத்துக்குவந்து தன்னை இராசாவாக ஏற்படுத்தி கிரீடதாரணஞ் செய்துகொண்டு, தன் மாதாவைக் கொன்று, தன் சகோதரர் மூவரையுஞ் சிறைப்படுத்தி, தன் சகோதரனும் அதிநேசனுமாகிய அந்திக்கோனஸையுங் கொன்று கொடுங்கோல்செலுத்தி வருகையில் இரத்தரோகங்கொண்டு மனமுஞ் சரீரமு

ம் யாதனைப்பட்டு மரித்தான். (கி. மு. ௧0௫.

ஆலெக்சந்தர்யன்னேயூஸ். இவன் அரிஸ்தோப்புலஸ் உடைய சகோதரன். இவன் ஆசாரியனும் யூதருக்குச் சேனாபதியுமாக அதிகாரம்பெற்று நடத்திவருகையில், தன் சகோதரனைக் கொன்றான். பின்பு எகிப்து இராசனாகிய தொலிமி லாத்தைரஸ்உடனே யுத்தஞ்செய்து முப்பதினாயிரம் யூதரையும் மடியக்கொடுத்துத் தோற்றான். பின்பு பில்தெல்பியாவின் அதிபதியாகிய தீயோடோறஸ்உடனே யுத்தஞ்செய்து பதினாயிரம் யூதரை மடியக்கொடுத்தான். மறுபடியும் பெலிஸ்தியருடனே யுத்தஞ்செய்து வென்றான். இவன் தேவாலயத்தில் ஆசாரியத்துவம் நடப்பிக்கையில் இவனுக்கு அவமதியாய்ச் சனங்கள் சீதளங்கனியை இவன்மேல் எறிந்ததினிமித்தம் கடுங்கோபங் கொண்டு, ௬,000 சனங்களைச் சங்கரித்தான். அதினிமித்தம் யூதச்சனம் இருபகுதியாய்ப் பிரிந்து எழும்பின கலகம் ஆறுவருஷக்காலமட்டும் தொடர்ந்தபழியாய் நின்றது. அதிலே ஐம்பதினாயிரம் யூதர் மடிந்தார்கள். இப்படியே ஆறுவருஷம் யூதேயாவில் சுயசாதியாருக்குள் ஓயாக்கலகமிருந்ததினால், ௫0,000 சனம் மடிந்துபோனார்கள். இவன் சற்றே இளக்கரித்துத், தனது எதிர்கட்சியார் தன்னிடத்தில் நியாயமாய்க் கேட்கிறதெதுவோ, அதை அவர்களுக்குக் கொடுப்பேனென்றும், அவர்களோ சமாதானமாகட்டுமென்றும் பிரசித்தப்படுத்த, அவர்கள் யாவரும் ஒருமனப்பட்டு, இவன் தன் சிரசை

எங்களுக்குக் கொடுத்தாற் சமாதானம் வருமெ
ன்று மாறுத்தரம்சொன்ஞர்கள். அதஞல்அவ
ன் உக்கிரகோபங்கொண்டு தன் எதிர்கட்சியா
ன யூதச்சனங்களுடைய கோத்திரத்தலைவரில்
எண்ணூறுபேரைச் சிலுவையிலறைவித்து, அ
வர்கள் மனைமக்கள்யாவரையும் அவர்கள் கண்
களுக்குமுன் கொல்லுவித்தான். பின்பு இவன்
தன்தளங்களுடனே கிரீசிஞவிலுள்ள ராகாபா
நகரத்தை அரண்வளைத்து நிற்கையில் நாலாம்
முறைச்சுரங்கொண்டதிஞலே தனக்குமரணம்
சமீபித்ததென்று அறிந்து, தன்அதிகாரத்தைத் த
ன்மனைவியாகிய அலேக்சந்திராளுக்கு ஒப்புக்
கொடுத்து மரித்தான். (கி. மு. எஅ.

கவனிப்பு.

அலேக்சந்திராள்.

இவள் தன் கணவன் சொன்ன யோச
னைப்படிதன்தளங்கள் ராகாபாநகரத்தை அ
டிப்படுத்தும்வரையும் அவனுடையமரணத்
தை வெளிப்படுத்தாமல் அவன்பிரேதத்தை
ச் சேமித்துவைத்திருந்து யுத்த சயம்பெற்
றுத் திரும்பிவருகையில் அவனுடைய பி
ரேதத்தையுங் கொண்டு வந்து பரிசேயருக்
குஒப்புக்கொடுத்தாள். அவர்களோ அவனை
ச் சங்கையாய் அடக்கம்பண்ணிஞர்கள். அ
வள் தன்புத்திரஞகிய கெர்கேனஸ்கு ஆசாரி
யதத்துவத்தை ஒப்பித்துத் தேசஆட்சியை ஒன்ப
து வருஷமளவாகத்தானே கொண்டிருந்து பின்
பு அதையும் அவனுக்குஒப்பித்து மரித்தாள்.
(கி. மு. ௬௬.

வம். ௬ கேர்கேனஸ். இவன் மூன்றுமாதமட்டுக்கு கர்த்தவியம்செலுத்திவருகையில் அவனுடைய சகோதரனாகிய அரிஸ்தோப்புலஸ் இவனுக்கெதிரிடையாய் எழும்பி விவாதம்பண்ணி அவனைத்துரத்திவிட்டான். (கி. மு. ௬௯.

வம். ௭ அரிஸ்தோப்புலஸ். இவன் ஆசாரியரைத் தன்பக்கமாகச் சேர்த்துக்கொண்டு சிலவருஷக்காலமாய் அதிகாரஞ்செலுத்தி வருகையில் கொர்கேனஸ் திரும்பவும் சனங்களைமூட்டித் தன் தம்பியுடனேயுத்தம்பண்ணி அவனைச் செயங்கொண்டான். அந்தச்சமயத்தில் யூலியஸ் கைசருடைய சேனாபதியாகிய பொம்பியு வந்து, யூதருடைய உற்சவதினத்திற் பன்னீராயிரம் யூதரைக்கொன்று கொர்கேனஸையும் அரிஸ்தோப்புலஸையும் பிடித்து விலங்கிட்டு உரோமைக்குக் கொண்டுபோய்ச் சிறைப்படுத்தி வைக்க, அரிஸ்தோப்புலஸ் ஒழித்தோடினான். கொர்கேனஸோ கைசருடைய தயையினாலே திரும்பவும் ஆசாரியஅதிகாரத்தைப் பெற்றுக்கொண்டு யூதேயாவுக்குவந்து முப்பத்திரண்டு வருஷமாக ஆசாரிய அதிகாரம் நடப்பித்து வந்தான். அப்படியிருக்கையிற் பார்தியராசனுடைய சேனாபதியாகியபெக்கோரஸ் அபாயமாய்வந்து கொர்க்கேனஸைத் தள்ளிவிட்டுஅரிஸ்தோப்புலஸ்உடையமகனானஅந்திக்கோனஸ்வுடைய கையில் ஒப்புக்கொடுக்க,அந்திக்கோனஸ் அவன்மறுபடியும்ஆசாரியனாகவராதபடிஅவனுடைய காதை அறுத்து அவனைப் பார்தீயாதேசத்துக்கனுப்பிவிட்டான். அக்கா

லத்தில் யூதேயாவுக்குத் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டவனும் எதோமியனுமான மகா ஏரோது கெர்கேனஸ் உடைய பௌத்திரியாகிய மேரி அம்னி என்பவளை விவாகஞ்செய்திருந்ததினலே கெர்கேனஸ் குறித்த ஏரோது இடத்தில் வந்து சிலகாலம் சகாயம்பெற்றிருந்தும் கடைசியில் ஏரோதினலே எண்பதுவயதிலே கொல்லப்பட்டான். இப்படியே மக்கேபியஸ் என்னுங் கோத்திரத்தலைவர் கிரமங் கிரமமாய் நூற்றிருபதுவருஷம் கைக்கொண்டுவந்த தேசாதிபத்தியம் கெர்கேனஸ்அளவில் நின்றுவிட்டது. (கி. மு. ௯௪.

அந்திக்கோனஸ்.

இரண்டாம் அரிஸ்தோப்புலஸ் உடைய மகன். இவன் பார்தியராசாவின் சகாயத்தினலே யூதேயாவுக்கு அதிகாரியாகவும் ஆசாரியனகவும் நியமிக்கப்பட்டான். இவன் ஆசாரிய தத்துவத்தையும் தேசாதிபதி அதிகாரத்தையுஞ் செலுத்தி வருகையில் ரோமைராசனலே நியமிக்கப்பட்ட ஏரோதுராசா தளங்களுடனேவந்து யூதேயாவை அரண்வளைத்து அந்திக்கோனஸைப் பிடித்து அந்தியோகியா நகரத்துக்கனுப்பி அதின் அதிபதியாகிய மார்க்கு அந்தோனி என்பவன் இவனைக் கண்டவுடனே கொன்றுபோடும்படி சொல்லி வெகுமதியனுப்பினன். இவ்விதமாய் இவன் மரித்தான். (கி. மு. ௩௪.

அனனீலஸ். இவன் ஆரோனுடைய கோத்திரத்தான். இவன் ஏரோதேயுவினாலே நியமிக்கப்பட்டு நாலுவருஷம் அதிகாரம்நடப்பித்துவர, குறித்த ஏரோது இவனை நீக்கித் தன்மனைவியாகிய மேரிஅம்னியுடைய சகோதரனாகிய நம். அரிஸ் தோப்புலஸ் என்பவனை ஆசாரியனாக ஏற்படுத்தினான். (கி. மு. ௩௪.

நம். அரிஸ்தோப்புலஸ். மேரி அம்னியுடையசகோதரன். இவன் வேதப்பிரமாணத்துக்கு விரோதமாகப் பதினேழுவயதில் ஆசாரியனாகஏற்பட்டு ஒருவருஷத்துக்குள் குறித்த ஏரோதுவின் கட்டளைப்படி நீரில் அமுக்கப்பட்டு மரித்தான். இவனளவில் மக்கேபியஸ் என்னுங்குடும்பமும் விமோசனமாயிற்று.

அன்னனீலஸ்.—குறித்த ஏரோதுவினாலே மறுபடியும் ஆசாரியனானான். (கி. மு. ௩௩.

யேசு.—பேப்பீஸ்உடையமகன். இவன் கி மு. ௨௩ல்.) ஆசாரியனாக ஏரோதேயுவினாலே நியமிக்கப்பட்டும் மறுபடியும் (கி. மு. ௨௩ல்.) அவனாலே விலக்கப்பட்டான். (கி. மு. ௨௩.

சீமோன்.—பீதூஸ்உடையமகன். இவன் (கி. ௨௩ல்.) ஆசாரியனாக ஏரோதேயுவினாலே நியமிக்கப்பட்டு. (கி. மு. ருல்.) அவனாலே விலக்கப்பட்டான். (கி. மு. ரு.

மத்தையஸ்.—இவன் தேயோப்புலுவுடையமகன். இவன் (கி. மு. ருல்.) ஏரோதேயுவினாலே நியமிக்கப்பட்டு கிறிஸ்துபிறந்த வருடம்மட்டாய் ஆசாரியனாக இருந்தான்.

# தானியேல் முதல் கிறிஸ்து வரைக்குமுள்ள இராசாக்களும் அதிபதிகளும் நாம அட்டவணை.

| அசூரிய இராசாக்கள் | கி. மு. | ஆ.கா. |
|---|---|---|
| க. பூல். - - - - | ௭௭௪ | ௨௧ |
| திக்லாத்பிலேசர் - - - | ௭௫௩ | ௧௯ |
| ஷல்மனேசர், - - - | ௭௩௪ | ௧௪ |
| சனகெரிப், - - - | ௭௨௦ | ௭ |
| எசரத்தோன், - - - | ௭௧௩ | ௩௫ |
| சாடோக்கேயிஸ், - - - | ௬௭௮ | ௨௦ |
| பாபிலோனிய இராசாக்கள் | | |
| நெபுகத்நெத்சர் - - - | ௬௦௫ | ௪௩ |
| ஏவில்மிரோதக் - - - | ௫௬௨ | ௨ |
| நிரிக்கிலிசோர் - - - | ௫௬௦ | ௪ |
| லேபேர்ரேசர்ஆக்சாட் - - | ௫௫௬ | ௫. மீ |
| பெல்ஷாத்சார் - - - | ௫௫௬ | ௧௭ |
| மேதிய பார்சிய ராசாக்கள் | | |
| தாரியாவேஷ - - - | ௫௩௮ | ௨ |
| கோரேஷ - - - - | ௫௩௬ | ௭ |
| எஸ்று (வேத ஆசாரியன்) - | ௫௩௬ | |
| கம்பைஷிஷ - - - | ௫௨௨ | ௭ |
| சிமேட்டிஸ் - - - - | ௫௨௨ | ௭ |
| தாரியாவேஷகிஸ்தாஸ்பஸ் - | ௫௨௧ | ௩௬ |
| எஸ்தர் - - - - | ௫௧௯ | |
| அர்தக்ஷேக்சீஸ்லோஞ்சிமேனஸ் | ௪௬௪ | ௪௦ |
| நிகிமியா(யூதேயாதேசத்திணதிபதி) | ௪௪௬ | |

## அட்டவணை.

| மேதிய பார்சிய ராசாக்கள். | கி. மு. | ஆ. கா. |
|---|---|---|
| உ. வேஷக்சீஸ் - - - | சஉச | உ |
| சொக்டியேனஸ் - - - | சஉச | எ |
| தாரியாவேஷநோதஸ் - - | சஉரு | கசு |
| அர்தக்ஷேக்சீஸ்நிமோன் - | ச0ச | சகூ |
| தாரியாவேஷஒகஸ் - - | ருருஅ | உக |
| ஆர்சீஸ். - - - - | ருருஎ | உ |
| தாரியாவேஷகொடோமேனஸ் | ருருரு | ச |
| அலேக்சந்தர் (யதுவாஆசாரியன்) | ருருக | கஉ |
| மகாஆசாரியர்கள் | | |
| ஒனையஸ் பிரதான ஆசாரியன் | ருஉரு | உக |
| க. சீமோன் நீதிவான் - - | ரு0உ | கக |
| எலியேசர் - - - | உகூ0 | ரு0 |
| மனுசே - - - - | உருரு | உகூ |
| உ ம். ஒனையஸ் - - - | உககூ | கச |
| உ ம். சீமோன் - - - | ககூகூ | உ0 |
| ரு ம். ஒனையஸ் - - | கஎ0 | உகூ |
| யாசோன் (தள்ளப்பட்டான்) | கஎரு | உ |
| மெனிலோஸ் - - - | ககூஉ | க0 |
| லசிமேக்கஸ் - - - | கஎ0 | |
| மத்தேதீயஸ் (மக்கப்பேருடைய பிதா) - - - - | ககூகூ | |
| யூதாஸ் மக்கப்பேயு - - | ககூக | எ |
| ஆல்சைமஸ் | ககூ0 | |
| ரு ம். ஒனையஸ் | கருC | |
| யோனத்தான் - - - | கசச | கஎ |
| ரு ம். சீமோன் - - - | கருரு | கூ |
| யோவான்கார்க்கேனஸ - - | க0கூ | ரு0 |
| அரிஸ்தோப்புலஸ் - - | க0ரு | க |
| அலேக்சந்தர் யன்நேயூஸ் - | எஅ | உஎ |

## அட்டவணை.

| | கி. மு. | ஆ. வ. |
|---|---|---|
| உ ம். கெர்கேனஸ் - - | சகூ | கூ |
| உ ம். அரிஸ்தோப்புலஸ் - | கூச | உரு |
| அந்திக்கோனஸ் - - - | ௩எ | அ |
| அன்னனீலஸ் - - - | ௩ச | உ |
| ௩ ம். அரிஸ்தோப்புலஸ் - | ௩ச | க |
| அன்னனீலஸ் (இரண்டாமுறை) | ௩௩ | க0 |
| யேசு - - - - | உ௩ | கஅ |
| சீமோன் [தள்ளப்பட்டான்] | ரு | ரு |
| மத்தையஸ் (கிறிஸ்துபிறந்த - | ரு | |
| வருஷம்) - - - | ௦ | |

---

### கவனிப்பு.

இதிகாசகாலநிரூபணம் யன் என்பவனாலும், மகா ஆசாரியருடைய காலநிரூபணம் கல்மேத் என்பவனாலுங் குறிக்கப்பட்டது.

---

முற்றிற்று.